# தமிழ்நாட்டுச் சரித்திரம்.

எழுதியது

டாக்டர் சவரிராயன் ஏசுதாசன், F. R. C. S.
கிறிஸ்துகுல ஆசிரமம்
திருப்பத்தூர்—வட ஆற்காடு.



...விக்டோரியா அச்சுயந்திரசாலையில்
...பதிப்பிக்கப்பட்டது.
1948.

விலை ரூ. 2.

# தமிழ்நாட்டுச் சரித்திரம்.


எழுதியது

டாக்டர் சவரிராயன் ஏசுதாசன், F. R. C. S.

கிறிஸ்துகுல ஆசிரமம்

திருப்பத்தூர்—வடஆற்காடு.








திருப்பத்தூர் விக்டோரியா அச்சுயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1948.

விலை ரு. 2.



கிறிஸ்து குல ஆசிரம ஜெபாலயம், திருப்பத்தூர், வட ஆற்காடு ஜில்லா.

# முன்னுரை.

---

இந்த நூலை ஆதி காண்டம், அரசியல் காண்டம், அன்னியர் காண்டம், சுதந்திர காண்டம் என்ற நான்கு பகுதிகளாக பிரித்து எழுதவேண்டுமென்பதே என் நோக்கம். ஆனால் பலவித காரணங்களினிமித்தம் இது பிரசுரமாவதற்கு தாமதம் எற்பட்டு வருவதினால் ஒருவாறாக ஆனமட்டும் முடித்து இதை உடனே வெளியிடுகிறேன். இந்த நூல் மூலமாக தமிழ் மக்கள் விபரமாக அறிய வேண்டுமென்று நான் முக்கியமாக விரும்புவதும் தமிழ் நாட்டுப் பூர்வ சரித்திரமே.

இந்த நூலை எழுதுவதற்கு எனக்கு உதவியாயிருந்த உபகரணங்கள் பல உண்டு. ஆராய்ச்சியில் தேர்ந்த சரித்திர நூல் ஆசிரியர்கள் நூல்களும், சென்னை பல் கழக கலைச் சங்கத்தார் வெளியிட்டிருக்கும் தமிழ் நாட்டு சரித்திர ஆராய்ச்சி நூல்களும் பல உள்ளன. மேலும் நானே பிரயாணஞ்செய்து நேர்முகமாக ஆராய்ச்சி செய்த ஆலயங்கள், சாசனங்கள், இடங்கள் பல உள்ளன. இதெல்லாம் விபரமாகக் கூற ஆரம்பித்தால் இந்த நூல் விரிந்துவிடும். தமிழ் மக்களாகிய நாம் நம்முடைய சொந்த தாய்நாட்டின் இயற்கை வளம், உண்மையான சரித்திர மகிமை, சிற்ப அழகு; ஆழ்ந்த கலை ஞானம், பக்தர் வரலாறுகள் முதலியவற்றைப்பற்றி சரிவர அறியாது அறிவீனத்தில் ஆழ்ந்திருப்பது என் மனதிற்கு ஒரு பாரமாயிருந்ததே இந்த நூல்

எழுதுவதற்கு என்னைத் தூண்டிய ஒரு முக்கிய காரணம். இந்த ஆசிரமத்தில் வைத்தியம், கல்வி, கிராம முன்னேற்றம் முதலிய விஷயங்களில் ஈடுபட்டு வருகிற நான் பல காரியங்களை மேல்பார்வையிடும் பொறுப்பில் ஆழ்ந்திருக்கையில், இவ்வித நூல்கள் எழுதி அச்சிடுவதற்கு எற்ற சமயம் தேடிக்கொள்வது எத்துணை கஷ்டமென்பதை நான் விபரிக்க வேண்டியதில்லை. இதனால் எற்பட்ட குற்றங்குறைகளை தயவாக பொறுத்து என் பிரயாசத்தை ஆதரிக்கும்படி பெரியோர்களை வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த என் பிரயாசம் தமிழில்இப்பேர்ப்பட்ட நூல்கள் எழுதுவதற்கு என்னைவிட அதிக சாமர்த்தியமுள்ளவர்களைத் தூண்டிவிடவேண்டுமென்பதே என் பேர் அவா.

இந்த நூலில் கம்பரைப்பற்றி எழுதியிருக்கும் என் நண்பர் தூத்துக்குடி எ. வி. பால் வக்கீல் அவர்களுக்கும், பாரதியாரைப்பற்றி சுருக்கமாய் எழுதிக்கொடுத்த நண்பர் செல்வராஜ் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக. இதை எழுதுவதில் எனக்கு உற்சாகமூட்டி மிகவும் அருமையாகவும் தமாசாகவும் இந்த நூலுக்கு முன்னுரை எழுதியிருக்கிற டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்களின் அன்பையும் மிகவும் பாராட்டுகிறேன்.

கிறிஸ்து குல ஆசிரமம்,
26 – 10 – 1948.

சவரிராயன் எசுதாசன்.

திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் பி. ஏ. பி. எல்.
எழுதிய

# முகவுரை.

பள்ளிக்கூடத்தில் சரித்திர பாடங்களைப் படித்துக் கஷ்டப் பட்டது நம்முடைய மனசை விட்டுப்போவதில்லை. ஆகவே "தமிழ் நாட்டுச் சரித்திரம்" என்ருலே நமக்கு பயம் வந்துவிடும்!

விளங்காத பெயர்கள், விளங்காத வருஷம், மாதம் தேதிகள், இவைகளை ஆசிரியர் அறிந்ததில்லை. அனுபவித்திருப்பாரோ, அது இல்லவே இல்லை. மாணவர்கள் தலையில் சுமத்துவதற்காகவே எழுதுவது சரித்திர பாடம்; மாணவர்களைத் துன்புறுத்துவதற்காக எழுதியது என்று சொன்னுல் குற்றமில்லை.

மாணவர்களைக் குறித்து, "அடியாத மாடு படியாது" என்று கூசாமல் சொல்லி வந்த ஆசிரியர்களை, ஏதோ சட்டம் போட்டு, மாணவர்களை அடிக்கக்கூடாது என்று தடுத்துவிட்டார்கள், அவ்வளவுதான். சரித்திரப் பாடத்தை வைத்துக் கொடுமை செய்யக்கூடாது என்று சட்டம் போடவில்லை, ஏன், சரித்திர பாடத்தை அதிகமாகவைத்து சிரமப் படுத்துங்கள், அப்படியானுல் தான் அடக்க ஒடுக்கமாய் இருப்பார்கள்; "டிஸ்ஸிப்ளின்" தானே முக்கியம் என்று சொன்னுர்கள்.

வேறு பிரமாதப் பயன் சரித்திர பாடத்திலிருந்து வருவ தில்லை என்பது ஒப்ப முடிந்த காரியம். ஏனென்ருல், அப்படி ஏதேனும் அத்தியாவசியமான பயன் இருக்கும் பக்ஷத்தில், மாணவர்

களோடு விட்டுவிட மாட்டார்களே. ஆங்கில ஆசிரியர், தமிழ் ஆசிரியர், கணித ஆசிரியர், ஸையன்ஸ் ஆசிரியர் என்பவர்கள் எல்லோரும் பள்ளிக்கூடத்துக்குள் உலாவி வரத்தானே செய்கிறார்கள். அவர்களுக்கு "சரித்திரம்" தெரியாதே. நாலாவது பாரத்துப் பையனைக் கேட்கிற சரித்திரக் கேள்விக்கு விடை தெரியாது. கேள்விக்கு அர்த்தமே தெரியாது. அந்த ஆசிரியர்களை சரித்திர பாடத்தைக்கொண்டு துன்புறுத்தவேண்டும் என்பது என் நோக்கம் அல்ல. ஆனல் சரித்திர பாடம் பற்றி நிரக்ஷாரகுக்ஷிகளாய் இருந்தபோதிலும் அவர்களுக்கு ஒன்றும் குறைவில்லையே என்று தான் குறிப்பிடுகிறேன். ஆகவே "டிஸ்ஸிப்ளின்" ஒன்றுக்காகத் தான் சரித்திர பாடத்துக்கு பிள்ளைகளை உள்ளாக்குகிறார்கள் என்பது விளங்குகிறதல்லவா?

உண்மையில் சரித்திர உணர்ச்சி என்பது மக்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலேயும் பதிந்து கிடப்பதுதான். அந்த உணர்ச்சியானது அரிய ஆனந்தங்களை அனுபவிக்கச் செய்யவல்லது. ஆனல் பள்ளிக்கூடத்துப் பாடமானது அந்த உணர்ச்சியை வறண்டு போகச் செய்துவிடுகிறது. சரித்திர பாட புஸ்தகங்கள் செய்துவரும் தொண்டு இந்த அழகில் இருக்க,—

டாக்டர் ஏசுதாசன் எழுதியுள்ள "தமிழ்நாட்டுச் சரித்திரம்" நமக்கு ஆனந்தத்தையே கொடுக்கிறது. காரணம் என்ன? ஆனந்தத்திலிருந்தே விளைந்தது அது.

தமிழ் நாட்டையும், அதன் பண்பாட்டையும், நதி தீரங்களையும், புண்ணிய ஸ்தலங்களையும், கோயில்களையும் கோபுரங்களையும் பார்த்துப் பார்த்து அனுபவித்தவர்கள் டாக்டர் ஏசுதாசன். தமிழ் இலக்கியங்களிலும் பக்திப் பாடல்களிலும் தோய்ந்துநினைத்

தவர்கள் அவர்கள். தமிழ் மக்கள் எப்படி எப்படிக் கலைகளை எல்லாம் உண்டாக்கினார்கள், அனுபவித்தார்கள், பொன்னேபோல் அவை களைப் போற்றி வந்தார்கள், என்பதையெல்லாம் உள்ளூர உணர்ந்து அதிசயித்தவர்கள். அந்த அதிசய உணர்ச்சியின் பயனாகப் புஸ்தகம் வெளிவந்திருக்கிறது. புஸ்தகத்தைத் தமிழ் மக்கள் அனுபவிப் பார்கள்; முன்னோர்கள் சாதித்துள்ள பெரும் பெரும் காரியங் களைக் கண்டு எக்களிப்பு கொள்வார்கள்.

அந்த அரசன் கொள்ளை அடித்தான், இந்த அரசன் கொள்ளை அடித்தான், இந்த ஆண்டு முதல் இந்த ஆண்டு வரை இவர்கள் ஆண்டார்கள், அதாவது கொள்ளை அடித்தார்கள் என்ற கதையல்ல ஏசுதாசன் அவர்கள் எழுதியுள்ளது. தமிழ் மக்கள் — ஆடவர் பெண்டிர் குழந்தைகள் — எப்படி எப்படியெல்லாம் வாழ்ந்தார்கள், வாழ்க்கையின் நயங்களை அனுபவித்தார்கள் என்பதே புஸ்தகத்தின் விஷயம்.

இப்படி யெல்லாம் ஒரு நாட்டின் பண்பாட்டை அனுபவிப் பதற்கு ஒருவர் தமிழ் நாட்டைவிட்டு வெகு தூரம் போகவேண்டும் (இங்கிலாந்து), இதர பண்பாட்டைக் காணவேண்டும், இதர சமயத் திலேயே திளைத்து நின்று பார்க்கவேண்டும் என்று சொல்லத் தோன்றுகிறது.

இவ்வளவையும் செய்திருக்கிறார்கள் டாக்டர் ஏசுதாசன் அவர்கள். பரந்த நோக்கம் என்பது இது தான்.

தமிழ் வாழ்க.

டி. கே. சி.

# History of Tamil Nad.



A British friend who found me writing this book in Tamil protested that I should have written this in English as a knowledge of South India is very poor among the public — even among historians, and if I had written in English, the book would have been more profitable to a wider circle. This is not the only reason for this English introductory chapter! One feels pained to notice that even great historians who ought to have done some justice to South Indian History seem to write as if all history of India worth recording prominently centred round only the vast Gangetic plain in North India. This might be partly true perhaps of comparatively modern history and also, if history means history only of rise and fall of empires, of foreign invasions, political intrigues and diplomacy, of wars, their battle dates and causes (both "underlying and immediate" as used to be emphasised in my school days!) – a history of man's lust for land and man's hate of man and exploitation of the weak and the guileless. But if history, as it ought to mean, be a study of the arts of true civilisation and peace, the history of the common man and his evolutionary development, history of the great souls and Mahatmas who have richly contributed to the spiritual and material prosperity of their generation, of people who have made their influence spread far and wide among other countries and nations, and above all, of God's loving providence and His dealings with

human lives in ages past, then Tamil Nad must be ranked as a part of God's wide world which has made real history in the past. Though this introduction is in English for the sake of interested non-Tamils, I am convinced I have done right in writing this book in Tamil as first of all the ignorance of "educated" Tamil people themselves about their own history is appalling! I know even some Tamil people have a sneaking preference to read books written in English even when it concerns the history of their own land and forefathers! That mental perversion must be cured. When Deenabandhu C. F. Andrews stayed in our Ashram he told me how deeply impressed he was by the natural beauties of the Tamil Nad with its hills and valleys spread all over the land. He gave us one address on this very subject at our Sandhya time. He told me he saw nothing like this in North India. The great chain of the mountains that lie on the West and the East (Western and Eastern Ghats) linked by the gentler connecting hills that run across the country from East to West (The Javadi, Sherveroys, Anamalai and other hills) with their lovely water-falls as at Courtallam and Papanasam make the landscape very picturesque and beautiful. The rivers that run from West to East and the vast fertile plains and green fields add to the picture. The great ocean surrounds the land on almost all three sides, and the point at Cape Comorin where the three seas meet is a charming spot. These gifts of nature have influenced the Tamil people in their long and ancient historical development and hence I have described in the

beginning of this book the influence of nature on the history of our people. Surrounded on three sides by the great seas the Tamils became a sea faring people from the earliest known times. The sea borne trade and with it the Tamil civilisation extended as far West as ancient Greece, and Rome through Aden, Palestine, Egypt, and Phenicia. Roman coins discovered in Tamil Nad bear witness to this as well as our ancient poetical works and writings of Wes-tern travellers like the author of the Periplus, Ptolemy, the Xtian monk Cosmos Indico Plustees, Marco Polo, and others. It must not be forgotten that ancient Tamil Nad inlcuded the whole of what is now known as the Malayalam speaking areas as Tamil and Malayalam assumed the form of two separate languages with different scripts only during the past few centuries. It is not possible for me to repeat in this short introductory English introduction all the proofs I have profusely quoted in Tamil in this book from ancient "sasanas" (copper plates, stone inscriptions etc) Scholars have been at work in recent years, but though excavations at Mohenjodaro and Harappa have revealed very interesting discoveries of the spread of ancient Tamilian civi-lisation Northward, vast fresh discoveries await the experts who would commence exploratory excavations in ancient historic places of the South like Korkai, Kaveripoompatinam, Urayoor (near Thiruchirapally) and many other such places. All modern discoveries and research abundantly point to the fact that Tamils, as far as history goes back now, have been the original inhabitants of South India and not immigrants from other lands.

From their original home of Tamil Nad (or Tamil-agam) they spread their influence to a far wider region in all directions. Of the ancient languages of Hebrew, Latin, Sanskrit, Greek, and Tamil, Tamil alone is today a living (spoken) language. Hebrew and Greek words derived from Tamil bear abundant proof of its influence over ancient civilisation. The excavations and discoveries in Mohenja Daro and Harrappa in the North and the works of art, sculpture, and architecture in the Eastern islands of Java, Sumatra and Borneo, as well as the excavations in Mesopatomia, all bear witness to the wide spread of Tamil civilisation and its influence in distant lands. The "shadow pictures" (ancient moving pictures) of Java are really the result of Tamil people spreading their own plays in other lands. I have seen these acted in the very simple hamlets of our own neighbourhood of this Ashram. Javnese (Indonesian) culture bears also resemblance to our ancient culture. Again, intercourse between China and South India is proved by records kept by the Chinese pilgrims who visited Tamil Nad in ancient times. This book contains details of their visits. The contact between Palestine, Phenicia and South India is very ancient, and it is claimed, that Overi of Tamil Nad is really the Ophir of Solomon of the Bible, and that the very thin shroud that the body of Christ was wrapped after his death must have gone from Tamil Nad!

In ancient architecture and sculpture Tamil Nad can certainly hold its own before Greece or any other country. Let no iconoclast become blind to the fact that the

intricate skill, adeptness, and esthetic sense revealed in some of those ancient sculptural works will inspire and ravish human eyes that can relish real art. The rock cut temples and caves, the realistic frescos at Narthamalai that have challenged the rough storms and weather of centuries are there for the lover of art to see and enjoy. And what could one say of that human skill that could convert uncouth rough boulders and rocks into lovely little temples and shrines on the sandy beaches of Mahabalipuram. I am firmly convinced that true history must concern first and foremost with the common man, how he has been influenced by God and natural surroundings or environment, and also by the great and good men and women of his generation, his language (the outward expression of his being) as well as with the arts of peace and civilisation. In my second volume I shall try and give some select portions of the political history of the Tamil Kingdoms, and also an account of those majestic temples some of which are about 2000 years old as e. g. the Ekambaranather's temple at Kancheevaram. These rise high with their lofty and glorious towers revealing artistic mouldings and mathematical precision guided by a sense of proportion as they mount up tier after tier filling the reverent mind with a sense of awe and wonder. How delicately hugeness has been combined with softness and beauty by these so called "illiterate" architects who must have with great patience and dexterity worked out these perhaps in the process of several years. These works of sculpture and the inscriptions thereon have served also as historians for

us of these latter days — historians whom the moth and white ants could not destroy as they do our perishable manuscripts and printed books! My own greatest authorities have been these as I have personally wandered among these temples from Kancheevaram to Tenkasi, or in cities like Madura, Tanjore, or Tirunelvely, and ravished myself in their beauties and in reading the ancient inscriptions on some of these.

We have in Tamil a very rich and ancient literature. Even before the birth of Christ Tamil Sangam (university) poets of Madura were spreading deep and great truths through their literatures e. g. Thirukural, apty called the Tamil Veda, Tholkappiam and other works. The Tamil language lends itself to the expression of the deepest as well as the softest thoughts of man. Every shade of an idea could be expressed by it. Its words are phonetic and often very simple and derived from roots full of meaning. Though in latter days she fell into sad ways through foolish jealousy and internal dissensions, ancient (pre-Muslim) Tamil Nad had her own political glory also. Marco Polo compares the fleet of Raja Rajan of Tanjore as he saw them at sea at the port of Kaveripompatinam to a great forest filled with trees. Raja Rajan's empire extended Eastward as far as Nicobar islands and Burma and included practically the whole of the present Madras Presidency and parts of Mysore. I have devoted this first volume almost entirely to the description of the natural features and beauties of the Tamil Nad as they have influenced the Tamils, the

sources and authorities for my history, the lives of the poets, seers and Bakthas that have enriched the Tamils with their great personal example and teachings. I have done so because history as commonly written gives too prominent a place to kings and wars, and to the rise and fall of empires or dynasties and not to the vital things I have emphasised. Political antipathy and a narrow patriotism have played too disastrous a part in the past teaching of history. This is one fruitful source of international hatred and war. The right way of teaching history should show forth how during the long course of ages the Eternal Divine purpose has been working among mankind for his good. The difference in the history of the differing groups (nations) have been really like the differing musical notes that together produce the most lovely harmony. Thus a true knowledge of history should promote peace and goodwill among men showing how each group has been contributing its own share to the good of all. I have however given also an account of the political history of the Tamil Nad in the second volume.

In the midst of my labour among poor villagers as a medical man in this Ashram I have been trying to describe in a feeble measure the contributions of the Tamils to the history of men. If my poor efforts would stimulate others more gifted for such a task to write further and better history of the Tamils or of other groups in the spirit of peace makers, I should feel amply rewarded.

CHRISTU KULA ASHRAM,
TIRUPPATTUR, N. A.
1—11—1948.

*Savarirayan Jesudason.*



கன்னியா குமரி முனை.

குளிக்கும் இடம் (தமிழ் நாட்டு தென் எல்லை.)



பழவேற்காடு ஏரி.

கடலும் ஏரியும் சந்திக்குமிடம் (சங்கம்) தமிழ் நாட்டின் வட எல்லை.

## ஆதி காண்டம்.

# தமிழ் நாட்டுச் சரித்திரம்.

### இயற்கை வளம்.

இறைவன் நமது வாழ்க்கைக்கு அனுகூலமாக நமக்கு அன்போடு அருளியது இந்தத் தமிழ் நாடு. சென்னைக்கு வடக்கே பழவேற்காடு (Pulicat), தெற்கே கன்னியாகுமரி மட்டும் எல்லையுள்ள இந்நாட்டையும், தமிழ் மக்களின் குணநிச்சயம் வரலாறு முதலியவற்றையும் நன்கு நாம் அறிய அதன் இயற்கை வளத்தையும் கவனிக்க வேண்டும். ஓர் நாட்டின் மக்கள் அதன் இயற்கையமைப்பினாலும் வசப் படுத்தப்படுகிறார்கள். சீதோஷ்ணஸ்திதிகூட ஒருவன் மனப் பான்மையை வசப்படுத்தும்.

### மலைகள்.

தமிழ் நாட்டின் பலபாகங்களில் மலைத் தொடர்கள் இருக்கின்றன. மேற்கும், கிழக்கும் குறுக்கேயும் உயர்ந்து பரவியிருக்கும் மலைகள் கண்களுக்குத் தென்படும். மேற்குத் தொடர் மலைகள் வடக்கே பம்பாய் மாகாணத்திலிருந்து தெற்கே கன்னியாகுமரி மட்டும் தொடர்ந்திருக்கின்றன. இம்மலைத் தொடர் வடபாகத்தில் நீலகிரி என்றும், இடை பாகத்தில் பழனி மலை என்றும், தெற்கே பொதிய மலை என்றும் இப்படி பல பெயர்கள் கொண்ட பாகங்களுள்ளது. நீலகிரியில் இந்த மலையுச்சி சமுத்திர மட்டத்திற்குமேல் 8000 அடி உயரமானது. இதற்குத் தோதபத்தா என்று பெயர். ஏராளமான பெருமரங்களும், செடிவர்க்கங்களும் நிரம்பி இருக்கும். மிகக்குளிர்ச்சியான இடம். சிறுத்தை, புலிகள்,

யானைகள், காட்டுப் பன்றிகள் முதலிய பலவித காட்டு மிருகங்களும் உண்டு. மலைகளின் கீழ்பாகங்களில் கட்டிடங்களுக்கு உபயோகமான தேக்கு, பில்லை மருது, வேம்பு, இருள், பலா முதலிய பல மரங்களுண்டு. உயர்ந்த இடங்களில் தற்காலத்தில் ஏராளமான தேயிலை காப்பித் தோட்டங்கள், உருளைக் கிழங்கு, கோதுமை, "காஞ்சி" என்ற வாற்கோதுமை முதலிய தானியங்கள் பயிராகின்றன. பல பழவர்க்கங்களுமுண்டு. இங்கு தொதுவர், கோத்தர், வடுகர், தமிழ் மக்கள் முதலிய வகுப்பினர் வசிக்கிறார்கள். சற்று கீழ்ப்பாகங்களில் குறும்பர், இருளர் என்போர் குடியிருக்கிறார்கள். தொதுவர்கள், கோத்தர்கள் என்போர் இம்மலையின் ஆதிவாசிகள். வட்டமான கூண்டுபோன்ற ஓலைக் குடிசைகளே தொதுவர்களின் வீடுகள். இக்குடிசை வாயில் மிகவும் குறுகியது. குனிந்து தவழ்ந்து கொண்டுதான் உள்ளே போகக்கூடும். ஆண்களும், பெண்களும் நீண்ட துப்பட்டிப்போன்ற ஒரே துணியை போர்த்துக் கொள்வார்கள். தலைமயிர் நீளமாக வளர்ந்திருக்கும். ஆண்கள் தாடி வைத்திருப்பார்கள். நல்ல உயரமும் அழகியதோற்றமும் உள்ளவர்கள். எருமைகள்தான் இவர்களுடைய ஆஸ்தி. அதின் பால் இவர்களது பானம். இவர்கள் கடவுளை வழிபடும் ஆலயமும் கூண்டுபோன்ற ஒரு பெரிய குடிசையே. இவர்கள் பேச்சு ஏக அம்ச தொனி உள்ளது. இவர்களுக்குள் ஏதாவது மரணம் ஏற்படும்போது ஒருவனுடைய சம்பத்துக்கு ஏற்றபடி எருமைகளைக்கொன்று விருந்துண்பார்கள். ஓர் கிறிஸ்தவ சுவிசேஷ சங்கத்தார் இவர்களுக்குள் அநேக வருஷங்களாக வேலைசெய்து பள்ளிக்கூடம் ஏற்படுத்தி, இவர்களுக்கு அறிவு உண்டாகும்படி தொதுவர்மொழிக்கு அச்சரங்களும்

உண்டுபண்ணி, இவர்கள் முன்னேற்றமடையச் செய்திருக்கிறார்கள். எனினும் தற்காலத்தில் நீலகிரிக்குள் நவீன நாகரீகம் எனப்படும் மதுவஸ்து, துன்மார்க்கம் முதலிய துர்ப்பழக்கங்கள் புகுந்து விட்டதால் தொதுவர்களும் கோத்தர்களும் பலவிதமாகக் கெட்டு நிலைகுலைந்து குறுகிப்போயிருக்கிறார்கள். நீலகிரி மலையிலுள்ள பல ஊர்களில் வடுகர் (வடக்கத்தியார்) வசிக்கிறார்கள். பல நூற்றாண்டுகளுக்கு முன் மைசூரிலிருந்து இங்கு வந்திருக்கலாம். இவர்கள் தாய்மொழி கொச்சைக்கன்னடம். ஆனால் இவர்கள் கல்வியெல்லாம் தமிழ் மொழியிலேயே. தமிழ் மக்களும் ஏராளமாய் வசிக்கிறார்கள். தேயிலை காப்பித் தோட்டங்களில் ஏராளமானபேர்கள் வேலை செய்கிறார்கள். தற்காலத்தில் நீலகிரியில் தமிழ் மக்கள்தான் மற்றவர்களைவிட ஜனத்தொகையில் அதிகம். நீலகிரியில் கொஞ்சங்குறைய ஏழாயிரம் அடிக்குமேல் உதகமண்டலம் (ஒத்தகமந்து) என்று ஒரு நகர் இப்பொழுது இருக்கிறது. உதகம் என்ற பதம் நீர் என்று அர்த்தமாகும். எப்போதும் மழை பெய்வதாலும் நீர்வளம் அதிகமாயிருப்பதாலும் இப்பெயர் உண்டாயிருக்கலாம். அல்லது தொதுவர்களிருக்கிற இடம் மந்து என்று அழைக்கப்படுவதனால் ஒத்தகமந்து என்றும் வந்திருக்கலாம். வேனல்காலத்தில் இந்திய தனவான்களும், ஐரோப்பியர்களும் சுகத்திற்காகப் போய்த் தங்குவதற்கு வசதியுள்ள உதகமண்டலம், குன்னூர், கோத்தர்கிரி முதலிய பல நகரங்கள் இருக்கின்றன. இங்கு சீதோஷ்ண ஸ்திதி மிக வசீகரமாயிருக்கும். இம்மலைகளிலுள் அழகிய ஏரிகளும், மகத்துவமான நீர் வீழ்ச்சிகளும், ஆறுகளும், பட்டுப்போல்

பசும்புல் பரவிய மலைச்சார்புகளும், கண்கவரும் இப்படிப்பல காட்சிகள் செறிந்து கிடக்கின்றன. பாய்க்கரை என்ற பலத்த நீர் வீழ்ச்சியை பெரும் அணையினால் தடுத்து அதனால் வரும் ஜல சக்தியினால் இயந்திரங்களை ஓட்டி அரசாங்கத்தார் ஜலசக்தி மின்சாரம் உற்பத்தியாக்குகிறார்கள். தென் இந்தியாவின் பல பாகங்களுக்கு இதிலிருந்து மின்சாரம் சவாகஷணை செய்யப் படுகிறது. இங்கிருந்து ஓடும் மொய்யாறு பவானி நதியோடு கலந்துகொள்ளுகிறது.

பழனிமலை.

இம்மலைத்தொடர்பு மேற்குத்தொடர் மலைகளைச் சார்ந்து நிற்பது. இது மதுரை ஜில்லாவிலிருக்கிறது. நாற்பது மைல் நீளம், இருபத்தைந்து மைல் அகலம். இப்படி அகலமும் விஸ்தீரணமுமுள்ள இம்மலைப்பாகம் மேல் பழனி கீழ் பழனி என்ற இருபங்காகும். ஏழாயிரமடி உயரத்தில் மேல் பழனி இருக்கிறது. இங்குள்ள கொடைக்கானல் நகரம் பல தன வான்கள் வெயில் காலத்தில் சுகத்திற்காகப் போகிற இடம். இதற்குச் சமீபமாக 8218 அடி உயரமுள்ள வேம்பாடி சோலைமலை இருக்கிறது. இதற்கு வடபுறமாக மலைகள் சரிந்து படிப்படியாய் கீழே இறங்கிக்கொண்டிருக்கும். தென்பாகத் திலோ கம்பம் பள்ளத்தாக்கு இருக்கும் பாகங்களில் பழனி மலைத் தொடர்பு செங்குத்தான பல குன்றுகளாக முடிகிறது.

கோடைக்கானல்.

மேல் பழனிமலையில் பெரியகுளம் என்ற ஊருக்கு மேலே 7000 அடி உயரத்திலிருக்கிறது. வசிகரமான குளிர்ந்த சீதோஷ்ணஸ்திதியுள்ள இடம். இதற்கு சமீபமாயிருக்கும்

பெருமாள் மலை 7326 அடி உயரமானது. கொடைக்கானலின் கீழ்பாகத்தில் முன் காலத்தில் ஓடிக்கொண்டிருந்த ஒரு ஓடைக்கு அணைப்போட்டு அழகிய ஒரு ஏரியாக அந்த இடத்தை மாற்றியிருக்கிறார்கள். நட்சத்திர மீன் வடிவம் போன்ற இந்த ஏரி மூன்று மைல் சுற்றளவும் அரை மைல் அகலமுள்ளது. இதைச் சுற்றி உலாவுவதற்காக பல நல்ல பாதைகள் வெட்டப்பட்டிருக்கின்றன. பாறைக் கம்பங்கள், சவ்வாரி மலைச்சிகரம், வெள்ளி நீர்வீழ்ச்சி, பல அடர்ந்த சோலை வனங்கள் முதலிய எத்தனையோ அரிய இயற்கைக் காட்சிகள் இங்கு பார்க்கலாம். கொடைக்கானலில் முதலாவது வீடு கட்டினவர்கள் மதுரை அமெரிக்கன் மிஷன் பாதிரிமார்களே. சுகத்திற்காக இவர்கள்போக ஆரம்பித்தார்கள். தற்காலத்தில் பல இந்திய சீமான்களும், ஐரோப்பியர்களும் விசேஷமாக அமெரிக்கன் மிஷன், ரோமான் கத்தோலிக்க மிஷன் பாதிரி மார்களும் ஏராளமாக பங்களாக்கள் கட்டியிருக்கிறார்கள், ஓர் ஆண்டில் கொஞ்சங்குறைய 65-அங்குலம் மழை இங்கு பெய்கிறது. அதிக மழை அக்டோபர் மாதத்தில். கொடைக் கானலுக்குச் சற்றுக் கிழக்கே சேம்பகனூர் (சம்பகனூர்) இருக்கிறது. இங்கு ரோமான் கத்தோலிக்க ஏசு சபைக் குருக்களை பயிற்சி செய்யும் ஒரு பெரிய குருமடமிருக்கிறது ஐரோப்பிய வாலிபர், இந்திய வாலிபர்கள் பலர் இந்த குருமடத்தில் பயிற்சி பெறுகிறார்கள். கொடைக்கானல் மலையிலிருந்து கீழ்நாட்டு சமவெளியை சூரிய அஸ்தமன வேளையில் நோக்கினால் சூரிய கிரண வெளிச்சத்தினால் பல வருணமாகத் தோன்றும். தரைப்பாகங்களும், ஊடேஊடே அசைவாடும் வானமேகங்களின் நிழல்களும் எங்கும் சித்திர

மயமான ரத்தினக் கம்பளங்கள் விரித்தால்போல் கண்ணுக்குத் தோன்றும். இம்மலைகளின் பலபாகங்களில் ஆராய்ச்சி செய்தவர்கள் இங்கு பூர்வகாலத்தில் இருந்த பெட்டிபோன்ற கல்சிற்பங்களை கண்டுபிடித்திருக்கிறார்கள். இவை சுமைதாங்கி வடிவமாக தச்சுவேலைசெய்து ஏற்படுத்தப்பட்டவை. எட்டடி உயரம் மூன்றடி அகலமுள்ள கற்கள்மேல் கூரையாக பதினோரடி நீளமும் ஆறடி அகலமுள்ள கூரைக்கற்கள் வைக்கப்பட்டிருக்கும். இப்படிப்பல வரிசைகள் உண்டு. கல்லினால் செய்த அரிவாள் மண்பாண்டங்கள் முதலியனவும் கண்டுபிடித்திருக்கிறார்கள். மேலும் செத்தவர்களை அடக்கம் செய்யும் தாழியும் (பிரேதப்பாண்டங்கள்), சிறு பாத்திரங்களும், மாடுகள் அடைக்கும் இடங்கள், போர் அடிக்கும் களங்கள் இப்படிப்பட்டவைகள் அழிந்து கிடப்பதையும் காணலாம்.

மதுரை ஜில்லாவில் ஓடும் வைகை நதி வாருஷநாடு அதாவது மழைநாடு என்று அழைக்கப்படும் மலை பிராந்தியங்களிலிருந்து ஓடுவது. இது உற்பத்தியாகும் இடத்தில் பூர்வகாலத்தில் வைகை என்ற கிராமமிருந்தது. அதிகமான காய்ச்சல் நோய் இங்கு ஏற்பட்டதால் மக்கள் இங்கிருந்து ஓடிவிட்டார்கள். பல கிளை ஆறுகள் வைகை நதியோடு கலந்துகொள்கின்றன. தென்கிழக்காய் இது மதுரை நகரத்திற்குள் ஓடி, பின்பு ராமநாதபுரத்திற்கு சற்றுதூரத்தில் வங்காளக்குடாக்கடலில் கலந்துகொள்ளுகிறது. மதுரையின் பல பாகங்களிலுள்ள வயல்களுக்கு இதன் நீர் பயன்படுகிறது. மலையில் உற்பத்தியாகும் பெரியாறு என்ற நதி திருவாங்கூர் சமஸ்தானத்தின் பாகத்தில் உற்பத்தியாகிறது. இது மலையில்

இருந்து (எப்பொழுதும் ஏராளமாய் மழைபெய்யும்) மேல் பாகமாய் திருவாங்கூர் பக்கமாகவே ஓடுகிறது. இப்படி பிரயோஜனமில்லாமல் ஓடுகிற நதியை அணைபோட்டு மதுரை ஜில்லாவில் தண்ணீர் இல்லாமல் கஷ்டப்படும் பாகங்களுக்கு நீர் பாயும்படி செய்திருக்கிறார்கள். இதற்கு முதலாவது ஆலோசனை சொன்னவர் ராமநாதபுரத்து ராஜாவுக்கு மந்திரியாயிருந்த முத்து அருளப்ப பிள்ளைதான். 1798ம் வருஷம் சாமர்த்தியமுள்ள பன்னிருவரை தற்சமயம் அணை போட்டிருக்கும் இடத்திற்கு இவர் அனுப்பி இது கைகூடுமா என்று பார்த்துவரச் சொன்னார். 1887ம் ஆண்டில்தான் சென்னை சர்க்கார் திருவாங்கூர் சமஸ்தானத்திற்கு வருஷத்திற்கு நாற்பதினாயிரம் ரூபாய்கட்டுவதாகச் சம்மதித்து 999ம் வருஷம் ஒப்பந்தம் செய்துகொண்டார். 1895ம் வருஷம் இந்த அணை பூராவாகக்கட்டி முடிந்தது. 176 அடி உயரம், 1241 அடி நீளம், நீர் பள்ளத்தில் 144½ அடி அகலம், ஆனால் உச்சத்தில் 12 அடி அகலம்தான். இதனால் ஏற்பட்ட ஏரி 8000ம் ஏக்கர் நிலம் விஸ்தீரணம் உள்ளது. 176 அடி ஆழம்.

கீழ்ப் பழனி.

4000-த்திலிருந்து 5000 அடி உயாமுடையது. இங்கு சிறுமலை வாழைப்பழம் ஏராளமாய்க் கிடைக்கும். வாழைத் தோப்புகளும், ஏலஅரிசி, காப்பி, மஞ்சள், இஞ்சி முதலிய விளையும் தோட்டங்களும் தானிய வயல்களும் செறிந்து கிடக்கின்றன.

தென் பாகம்.

பொதிய (பொதிந்த அல்லது ஒதுங்கிய) மலை, மகேந்திரகிரி, மருத்துவ மலை என்ற பல பாகங்கள் இங்கு

உண்டு. பாபநாசம், குற்றாலம், என்னும் க்ஷேத்திரங்களுமிருக்கின்றன. திருநெல்வேலி ஜில்லாவின் நீர்வளம், நிலவளம், செழிப்புக்குக் காரணமாயிருக்கிறது இங்கிருந்து ஓடுகிற தாம்பிரவருணி நதியே. 6000 அடி உயரத்தில் பாபநாசத்திற்கு மேலேஇருக்கும் பெரிய பொதிய மலையிலிருந்து இது உற்பத்தி ஆகிறது. தென்பாகத்திற்கு இதுதான் உயர்ந்த சிகரம். பாண்டிய மன்னர்கள் பொதிய மலையை ஆண்டவன் என்ற பட்டப் பெயரால் அழைப்பதுண்டு. மற்ற மலைகளுக்கு 10 மைல் தூரத்துக்குப் பின்னேயே இது இருப்பதால் இதில் உற்பத்தியாகும் தாம்பிரவருணி கீழ்பூமி சேரும்முன் மலையின் பெரும்பாகத்தை கடந்துதான் வருகிறது. பாளையங் கோட்டையிலிருந்து இம்மலைச் சிகரம் தெரியும். ஆனால் திருவனந்தபுரத்திலிருந்து இன்னும் அதிகத் தெளிவாய்த் தெரியும். இதற்கு அகஸ்தியர் மலை யென்றும் பெயருண்டு. தமிழ் மொழிக்குச் சிறந்த மூலப்புலவராக இவர் எண்ணப் படுகிறார்.

"திங்கள் முடி சூடுமலை தென்றல் விளையாடு மலை
தங்குபுயல் சூழுமலை தமிழ் முனிவன் வாழும் மலை"

எனினும், வடநாட்டிலிருந்து வந்த இவர் காலத்திற்கு மிகவும் முன்னேயே ஏற்பட்ட பழைய தமிழ் மொழியை இவர் ஒழுங்கு படுத்தி ஓர் இலக்கியம் ஏற்படுத்தியிருக்கலாமே யன்றி மற்றபடியல்ல என்று தற்காலத்தில் சில அறிஞர் கருதுகிறார்கள். பொதிய மலை உச்சியில் ஓராண்டில் 300 அங்குல மழை பெய்கிறது. ஆனால் தாம்பிரவருணியின் உற்பத்திஸ்தானத்திற்கும், அது கடலில்சேரும் கொற்கைக்கு அருகான முகத்துவாரத்திற்கும், நடுவேயிருக்கிற பாளையங்



குற்றாலம் அருவி (நீர்வீழ்ச்சி.)
(மக்கள் குளிக்குமிடம்.)
அருவியின்மேல் பாகம் பொங்குமாங்கடல் எனப்படும்.



தமிழ் நாட்டுக் குறிஞ்சி நிலத்து ஆட்டுமந்தை.

கோட்டையில், ஓாண்டுக்கு 21 அங்குல மழை மாத்திரம்தான். பொதிய மலையின் உச்சியில் பெய்யும் அபரிமிதமான மழையின் நிமித்தமே, பசுமையான நெல்வயல்கள் செறிந்து நிற்கும் திருநெல்வேலி ஜில்லாவை இந்த ஆறு செழிப்பாக்குகிறதென்று விவரிக்க அவசியமில்லை. தாம்பிரவருணி ஆற்றின் நீளம் 70 மைல். சாதாரணமாக காலத்திற்கு இருமுறை கரைபுரண்டோடும். மகாபாரதம் ஆரய பர்வத்தில் முக்தியை நாடும் துறவிகள் தங்குமிடமாக இதைக் குறித்து கூறியிருக்கிறது. காளிதாசர் இயற்றிய காவியம் ரகுவம்சம் என்னும் பாகத்தில் முத்துக்குளிக்கும் சமுத்திரத்தில் விழும் தாம்பிரவருணி யென்று இதன் மகிமை வருணிக்கப்பட்டிருக்கிறது. காளிதாசர் காலம் கிறிஸ்துவுக்கு மூந்திய நூற்றுண்டு. பூர்விக மக்கள் இதை ஒரு பரிசுத்த நதியாக எண்ணினார்கள். பாபநாசத்தில் இந்த நதியின் ஒரு மேல் பாகம் கலியாண தீர்த்தம் என்ற பெயருள்ளது. நதி உற்பத்தி ஆகிற இடத்தில் பொதியமலைச் சரிவில் வன தீர்த்தம் என்ற பாகமிருக்கிறது. பாபநாசம் என்பது பாவத்தை நாசம் செய்யுமிடம் என்றர்த்தமாகும்.

## குற்றாலம்.

குற்றம் + அலம்புதல் என்பது ஸ்தல புராண அர்த்தம். ஆனல் குறு + ஆலம் = குறுகிய ஆலமரமிருந்த இடமென்றும் அர்த்தம் கூறப்படுகிறது. மலைகள் ஒரு குடைப்போல அரை வட்டமாக சூழ்ந்திருக்கிற சமபூமியில் குற்றாலமிருக்கிறது. தென்காசியிலிருந்து இது 3½ மைல் தூரம். மேற்கே செங்கோட்டை. இதற்கப்புறம் திருவாங்கூர்

செல்லும் கணவாயிருக்கிறது. இது ஓர் பூர்வீகக்ஷேத்திரம். விசேஷமாக ஐப்பசி விசுவு என்ற விழாவிற்கு இங்கு வரும் திரள் கூட்டமும், ஏராளமான கடைகளும் ஓர் பெருங்காட்சி. ஆனல் குற்றாலத்தின் முக்கிய விசேஷம் அதன் அருவிகளே. தென்மேற்கு பருவக் காற்று வீசும் நான்கு மாதங்களும் சாரல் காலமென்று அழைக்கப்படும். அப்போது சீதோஷ்ண ஸ்திதி மிகவும் வசீகரமாயிருக்கும். பல அருவிகள் உண்டு. மக்கள் ஏராளமாகக் கூடிக் குளித்து சுகமும், இன்பமும் அனுபவிக்கும் பெரிய அருவிக்கு குற்றால அருவி என்று பெயர். இதில் ஸ்நானம் பண்ணுவதால் வரும் ஆரோக்கியமும், சுகமும் அதன் நற்பலன் அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும்! இந்த அருவியில் இருபாகம் உண்டு. மேல்பாகம் பொங்குமாங் கடல் என்று அழைக்கப்படும். இது மலை உச்சியிலிருந்து கொஞ்சங்குறைய நாற்பது அடி கீழே விழுந்து மறுபடியும் இங்கிருந்து விசாலமாய்ப் பெருகி 142 அடி உயரத்திலிருந்து பல பிரிவாகக் கீழே விழுகிறது. மேல் அருவியாகிய பொங்கு மாங்கடல் கீழ்விழும் இடத்தில் பல நூற்றுண்டுகளாக விழும் நீர்வீழ்ச்சியின் பலத்தினல் பாறை ஓர் ஆழ்ந்த குழியாகக் குடையப்பட்டிருக்கிறது. இப்படி இருமுறை விழுந்து அம்ச அம்சமாகப் பிரிக்கப்படுகிறது. சாமரசியாக விழும் இந்த நீர் வீழ்ச்சியின் காட்சி பார்ப்போர் கண்ணுக்குப் பரவசமாய் இருக்கும். சுத்த வெண்மையான மல்லிகைப் பூமாலைகள் அணிந்த காட்சிபோல் மலைச்சார்வு தோன்றும். இப்படி பிரிக்கப்படுவதின் காரணத்தினலேயோ அல்லது உயரத்திலிருந்து வீழ்ந்து, ஸ்நானம் செய்வோர் உடல் உறுப்புகளை நன்றாகத்

தேய்த்து பலத்துடன் அமுக்குவதினாலோ (நீவுதலினாலோ) உடலுக்கு இதனால் வரும் நலனும், சுகமும், உற்சாகமும் அதிகமுண்டு. ஒரு நாளில் பலமுறை இவ்வருவியில் குளித்தாலும் உடல் நலத்திற்கு இது நன்றேயன்றி எது சுகக்கேடும் நேரிடாது. சென்ற நூற்றாண்டில் திருநெல்வேலி ஜில்லாவில் கிறிஸ்தவ அத்தியக்ஷக் குருவாயிருந்த கால்டுவெல் சாஸ்திரி, உடல்நலத்திற்கு இவ்வுலகத்திலுள்ள எல்லா அருவிகளிலும் இதுவே சிறந்ததென்று இதைப் புகழ்ந்து எழுதி இருக்கிறார். பொங்குமாங்கடலுக்கு மேலுள்ள நீரோட்டத்தைத்தொடர்ந்து மேலே சென்றால் செம்புகாதேவி என்ற பேரருவியைப் பார்க்கலாம். இதற்குமேலே உயரச்சென்றால், மிகுந்த உயரத்திலிருந்து தாழவிழும் தேனருவி ஒரு கண் கவரும் காட்சி. இது ஒரு பாறையைக் குடைந்து அறுத்து ஆழ்ந்து இடுக்கமான பாறைப் பிளவினுள் தாழவிழுகிறது. இங்கு பலதேன்கூண்டுகளும் தொங்குகின்றன. செம்புகாதேவி அருவிக்கு சற்று கிழக்கே புலி அருவியையும் பார்க்கலாம். வட மேற்கே கொஞ்சங்குறைய மூன்று மைல் தூரத்தில் அழகிய ஐந்து அருவி, மக்கள் குளிப்பதற்கும் வனபோஜனம் செய்வதற்கும் ஏற்ற தோப்புகள் சோலைகள் நடுவில், விழுந்து ஓடுகிறது. சரியான சாரல் காலத்தில் மலைமேலிருந்து ஐந்து பிரிவுகளாக இது விழுகிறது. ஆனால் மழை கனத்துவிட்டாலோ ஐந்தருவிகளும் ஏகமாய் கலந்து நயகாரவின் பெருவீழ்ச்சிபோல் இடிமுழக்க சத்த ஆரவாரத்தோடு விழுவதை என் கண்ணாலே பார்த்திருக்கிறேன். குற்றால அருவிக்குச் சமீபமாக பூர்வீக காலத்திலிருந்திருக்கும் ஒரு சிவன் கோயிலிருக்கிறது. இவ்வாலய மூலஸ்தானத்தில் பல

நூற்றாண்டுகளாக நிற்கும் மிகப்பழைய வயது முற்றின பலா மரத்தைப் பார்க்கலாம். இதைக்குறித்து திருஞானசம்பந்த மூர்த்தி குற்றாலம் சென்றபோது, பல நூற்றாண்டுகளுக்கு முன் பின் வருமாறு பாடியிருக்கிறார்.

பண் — காந்தாரம்.

திருக்குறும்பலா.

" திருந்தமதி சூடித் தண்ணீர் சடைகாய்ந்து தேவிபாகம்
பொருந்தப் பொருந்தாத வேடத்தார் காடுறைதல் புரிந்த செல்வ
ரிருந்தவிடம் வினவிலே லங்கமழ் சோலையின் வண்டு யாழ்செய்
குருந்தமண நாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே ".

குலைவாழைத் தீங்கனியும்
தேன் பிலிற்றுங்குறும்பலாவே.

குற்றாலம் (சாரலைக் குறிப்பிட்டு)

" போதும் பொன்று முந்தியருவி புடைசூழ்
கூதன்பாரி நுண்டுளி தூக்குங் குற்றாலம் ".

" கொம்பார் சோலைகோலவண்டு யாழ்செய் குற்றாலம் ".

மதுரை ஜில்லாவில் ஓடும் வைகை நதி பண்டைகாலச் சரித்திர சுவை பொருந்தியது. இந்த ஜில்லாவோடு சம்பந்தப் பட்டாலும் திருவாங்கூர் சமஸ்தானத்தின் ஆதிகத்திலிருக்கும் பெரிய ஆற்றில் அணையோட்டு அதனிருந்து வரும் நீர்க்கால் வாய்க்காலினால் மதுரை ஜில்லாவின் பெரும் பாகங்கள் செழிப் படைந்திருக்கின்றன. திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், சேலம் ஜில்லாவில் ஓடும் காவிரி நதி எக்காலமும் வற்றாத ஓர் பெரிய ஆறு. இந்த ஆறு மைசூர் சமஸ்தானத்துக் கடுத்த குடகு (Coorg) மலைகளில் உற்பத்தியாகி மேற்கூறிய மூன்று கோட்டங்களி (ஜில்லாக்க) னூடே சென்று காவிரிப்பூம்

பட்டினத்துக்கருகில் வங்காளக் குடாக்கடலில் சேருகிறது. சேலம் ஜில்லா மேட்டூரில் இவ்வாற்றில் ஒரு பெரிய அணை கட்டி அதிலிருந்து செல்லும் கால்வாய்களினால் தஞ்சாவூர் ஜில்லா மிகவும் நன்மை பெறுகிறது. இவ்வணையின்பின் விசாலமாய் பெருகி நிற்கும் ஆற்று நீர் ஒரு சமுத்திரம்போல் பெரிய பெரும் ஆழ்ந்த பரவிய பெரும் ஏரியாகக் காணும். இப்படித் திரண்டு ஆழமாய் நிற்கிற நீரின் ஓட்டத்தினால் உண்டாகிற சக்தி அணைக்கு அப்புறம் வைத்திருக்கிற சக்கர இயந்திரங்களைப் பலமாகச் சுழற்றும்படி செய்து ஜலசக்தி மின்சாரம் உற்பத்தி செய்கிறார்கள். பாய்க்கரை, பாவநாசம், மேட்டூர் இவ்விடங்களில் இவ்விதமாக உற்பத்தியாகும் ஜல சக்தி மின்சாரம் தமிழ் நாட்டின் பல பாகங்களுக்கு வெளிச்சம் கொடுக்கிறதோடல்லாமல் விவசாயத்திற்கு தண்ணீர் அடிக்கவும், கைத்தொழில்கள் விருத்தியாகவும் மிகவும் உதவியாய் இருக்கிறது.

தென் பெண்ணை ஆறு.

சேலம் ஜில்லா தென் ஆற்காடு ஜில்லா இவற்றினுள் இது ஓடி கடலூரில் சமுத்திரத்தோடு கலந்துகொள்கிறது. சேலம் ஜில்லா காவேரிப்பட்டணத்தினருகில் இந்த ஆற்றைச் சுற்றி செறிந்து நிற்கும் குன்று, சோலை, வனங்கள் அழகிய காட்சி.

பாலாறு.

வட ஆற்காடு, தென் ஆற்காடு ஜில்லாக்களைச் செழிப்பாக்கும் இது அழகிய பெயருடையதாயிருந்தாலும் தற்காலத்தில் இது உற்பத்தியாகும் மைசூரில் அணைகட்டி இதன் நீரை

உபயோகித்து விடுவதால் மழை காலத்தில்தான் இந்த ஆற்றில் சரியான நீரோட்டமிருக்கும். எனினும் இவ்வாற்றங்கரையில் வசிக்கும் மக்கள் கடும்பிரயாசத்தினால் ஏராளமான வயல்களும், தெங்குகளும் அடர்ந்து நிற்கின்றன. செங்கல்பட்டு கோட்டத்தில் மகாபலிபுரத்திலிது கடலில் விழுகிறது.

மேற்கூறிய ஆறுகளைத் தவிர ஏனைய சிற்றாறுகளும் தமிழ் நாட்டிலிருக்கின்றன.

" காவிரி தென்பண்ணை பாலாறு — தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதி — என
மேவிய ஆறுபல வோடத் — திரு
மேனிசெழித்த தமிழ்நாடு ".

மேற்கூறிய பல ஆற்று நீராலும், தென்மேற்கிலிருந்து வடகிழக்கிலிருந்தும் வீசி மழை பொழியும் பருவக் காற்றுகளினாலும் தமிழ் நாடு செழிப்பிக்கப்படுகிறது. நெல் வயல்கள் நன்செய்களும், கரும்புத்தோட்டங்களும், துவரை, சோளம், கம்பு, கேழ்வரகு, சாமை, தினை, வேர்க் கடலை, கிழங்குகள் முதலிய எத்தனையோ வஸ்துக்கள் விளையும் புன்செய்களும் பலவிதப் பழவர்க்கத் தோட்டங்களும் எங்கும் செறிந்து நிற்பது இத்தமிழ் நாடு.

கடல் காட்சி, துறைமுகங்கள்.

சென்னைக்கு வடக்கே பழவேற்காடு (Pulicat) முதல் தெற்கே கன்னியாகுமரி மட்டும் உள்ள தமிழ் நாட்டின் மூன்று பாகங்கள் கடல் சூழ்ந்தவையாதலால் அதுமிக நீண்ட கடற்கரை உள்ளது. பல துறைமுகங்களிருக்கின்றன. தென் முனையிலுள்ள கன்னியாகுமரி அழகிய கடல் காட்சி

வாய்ந்த இடம், சீதோஷ்ண ஸ்திதியும் வசீகரமானது. இது இந்தியாவின் தென்கோடி முனை. கடற்கரையோரத்தில் கடல் மணல் பலவித வருணமாயிருக்கும். செந்தவிடு தீட்டிய அரிசி இவற்றைப் போன்ற மணல் வகைகளும், அணுசக்தி உற்பத்தி செய்யும் உலோக வஸ்துக்கள் கலந்த தோரியம் என்னும் வேறுவித மணலும் இங்கு ஏராளமாய் உண்டு. இம்முனை கிழக்கு, தெற்கு, மேற்கு மூன்று பாகங்களிலும் சமுத்திரத்தினால் சூழ்ந்திருப்பதை ஒரே நேரத்தில் பார்க்கலாம். காலை கடலிலிருந்து சூரியன் மகத்துவமாய் கிழக்கே உதிப்பதையும் மாலை அதி அழகிய வட்டமாய் ஓர் பெருங் கனி போல் மேற்கே சமுத்திரத்தில் முங்கி ஆழ்ந்து மறைவதையும் கடற்கரையிலிருந்து அந்திவேளை நோக்குவது பார்ப்போர் மனதைப் பரவசப்படுத்தும். முனையின் தென் கோடியில் இயற்கையாகவே பாறைகளால் சூழ்ந்ததும் எவரும் ஸ்நானம் செய்ய சௌகரியமானதுமான தீர்த்தமிருக்கிறது. ஏராளமான மீன்படவர்கள் கடலோரத்தில் வசிக்கிறார்கள், அதிகாலையில் மிக இருட்டோடே (சிலர் நடு இரவில் கூட) கட்டைமரங்களில் வெகுதூரம் சென்று மீன் பிடிக்கப் போவார்கள். காலையில் இவர்கள் படகுகள் ஒரு படைபோல் கடலில் மிதக்கும் காட்சி கண்ணைக்கவரும். நீண்ட வாள் போன்ற முன் கொம்புகளுள்ள கொம்பஞ் சுறாக்கள், மஞ்சள், சிகப்பு இப்படிப் பலவர்ணமுள்ள பெரிய மீன்கள், மிகவும் தடித்து கொழுத்து கனத்தவையும், பெரும் விசிறிகள் அல்லது விசாலமான யானைக் காதுகள்போன்ற செதில்கள் உள்ளதுமான கருங்கடல் ஆமைகளும், இப்படிப் பலவிதமானவற்றை மீன்படவர்கள் தங்கள் கட்டை மரங்களில் கொண்டு

வந்து கடற்கரையில் பரப்பியிருப்பார்கள். இவர்கள் சமுத்திரத்தில் செல்லும் கட்டைமரங்கள் கயிற்று வடங்களினல் ஒன்ருக இருக்கக்கட்டப்பட்டவைகளேயாயினும் பலத்த பெரும் அலைகள் கொந்தளிக்கும் நடுச்சமுத்திரத்தின் ஆழ்ந்த பாகங்களில் பயமின்றி இவர்கள் சென்று இரவெல்லாம் உழைப்பது மிகவும் போற்றத்தக்கதே. சிற்சில வேலைகளில் சமுத்திரத்தில் ஓர் சிறிய பாறைத் தீவுபோல் நீர்மேல் தோன்றும் திமிங்கல முதுகை இவர்கள் பார்த்து கிட்டி தடவிக்கொடுத்ததாக என்னிடம் சொல்லியிருக்கிருர்கள். இவர்கள் தைரியம், சாமர்த்தியம் என்னே!

திருநெல்வேலி ஜில்லாவில் தாம்பிரவருணி நதி கடலைசேருமிடத்திற்கருகில் கொற்கை என்னும் பூர்வீகத் துறைமுகமிருக்கிறது. பாண்டிய மன்னர் காலத்தில் இது பெயர் பெற்ற இடம். முத்துக் குளிக்கும் துறைமுகம். தற்காலத்தில் கடல் மணல் விஸ்தீரணமாகப் பெருகி கடலிலிருந்து ஊரைத்தூரமாக்கிவிட்டது. நான் இங்கு 20—8—1931ல் சென்றபோது தாம்பிரவருணி ஆற்றைக் கடந்து அக்கரை சென்றவுடன் அப்பாகத்தின் பெயர் மு க் கா ணி என்று அழைக்கப்பட்டதாக அறிந்தேன். பல நூற்றுண்டுகளுக்கு முன் அங்கு வந்த யாத்திரியாகிய மார்கோ போலோ என்ற இத்தாலிய தேசத்தினர் அவர் வந்த சமயத்தில் காயல் துறைமுகமாக இருந்ததாகக் கூறுகிருர். முத்துக் குளிக்கும் முறையையும் விரிவாக வருணித்திருக்கிருர். கொற்கை பக்கத்தில் அக்கசாலை என்ற ஒரு பாகமிருக்கிறது. பூர்வீக காலத்தில் இது நாணயம் அடிக்குமிடம். இங்கிருந்த ஒரு வயோதிப

உபாத்தியாயர் பழையகாலத்து பாண்டிய இராஜ்ய காசுகள் சில எனக்குக் கொடுத்தார். இங்கு இப்படிப்பட்ட பண்டையக் காசுகள், இறந்தவர்களை உள்வைத்துப் புதைக்கும் மண் தாழிகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இத் தாழிகள் குதில்போல் இருக்கும். பிரேதத்தோடு ஆகாரம் முதலியனவும் வைத்துப் புதைப்பார்களாம். கல்வெட்டு சாசனங்களுள்ள ஒரு சிவன் கோயிலும் இங்கு பார்த்தேன். பண்டைய காலத்தில் இங்கிருந்து தமிழ் நாட்டுக் கப்பல்கள் சீனு, யாவதீவு (ஜாவா) முதலிய நாடுகளுக்கு வியாபாரம் செய்யப் போய்க்கொண்டிருந்தன. சிற்பம், நாகரீகத்தில் யாவதீவு நாகரீகம் தமிழ் நாட்டிற்கு ஒப்பாகவே இருக்கிறது. கொற்கையில் மண்ணில் நாட்டப்பெற்ற அநுமான் (மாருதி) சிலையொன்று நிற்கிறது. ஊரார் இங்கு ஒரு கோவில் கட்ட ஆரம்பித்து தளத்தோடே விடப்பட்டிருக்கிறது. பூதம் ஒருவரையும் இக்கட்டிடத்தை முடிக்க விடுகிறதில்லையென்று ஒருவர் என்னிடம் வியாக்கியானம் சொன்னர்! வடக்கே, மதுரை ஜில்லாவில், பாண்டிய மன்னர் காலத்தில், திருப்பெருந்துறை என்ற ஊர் துறைமுகமாய் இருந்தது. அரபி நாடுகளிலிருந்து ஏராளமான குதிரைகள் இங்கு இறக்குமதியாகும். வாகுண பாண்டிய மன்னனுக்கு குதிரைகள் வாங்கும்படி இத்துறை முகத்துக்கு திரவியத்துடன் சென்ற மந்திரியாகிய மாணிக்க வாசகர், வழியில் சிவாலயத்தில் சுவாமி தரிசனம் கண்டு, பரவசமடைந்து, திரவியத்தை எல்லாம் கோவிலுக்கு கொடுத்து விட்டது முதலியனவான வரலாறுகளை, இந்த நூலின் பின் பாகத்தில் விவரமாய் வாசித்தறியலாம்.

திருநெல்வேலி ஜில்லாவிலிருக்கும் தூத்துக்குடி தற்காலத்தில் இலங்கை செல்ல ஒரு முக்கிய துறைமுகம். தஞ்சாவூர் ஜில்லாவிலிருக்கும் நாகப்பட்டணமும் தற்காலத்தில் ஒரு முக்கிய துறைமுகம். இங்கிருந்து இலங்கை, பினங்கு முதலிய இடங்களுக்கு கப்பல்கள் செல்கின்றன. இதே ஜில்லாவில், தஞ்சாவூர் நகரத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன் ஆண்ட இராஜேந்திரன், ராஜராஜன் முதலிய கீர்த்தி பெற்ற ஏகாதிபத்திய சக்கரவர்த்திகள் காலத்தில், காவிரிப்பூம் பட்டிணம் விசேஷித்த பெரும் துறைமுகமாக கீர்த்தி பெற்றிருந்தது. இராஜராஜனுக்கு கடாரம் மட்டும் சென்ற பெருங்கடல் படை இருந்தது. இதைக் கண்ணுற்ற மார்கோ போலோ என்ற இத்தாலிய யாத்திரிகன் மன்னனின் படைக் கப்பல்கள் இத்துறைமுகத்தில் அடர்ந்த மரங்கள் செறிந்து நிற்கும் சோலைபோல் விளங்கினவென்று எழுதிஇருக்கிறான். சிறிது காலத்திற்கு முன் ஓர் ஆங்கில அதிகாரி தன் தேசந்தான் இந்தியாவிற்கு கப்பல் ஓட்டும் வித்தையும் கடல் படையைப் பற்றிய அறிவையும் இந்தியாவிற்கு கற்றுக் கொடுத்தது என்று கூறியதை நான் வாசித்தது எனக்கு விநோதமும் வேடிக்கையுமாயிருந்தது. இந்திய சரித்திரத்தைப்பற்றி இவருடைய அறிவீனம் என்னே! என்னே! காவிரிப்பூம்பட்டிணம் பெயர் பெற்ற வியாபாரஸ்தலமாய் அக்காலத்தில் சிறப்படைந்திருந்தது. இங்கிருந்த பெரிய வியாபாரிகளில் ஒருவராகிய பட்டிணத்துப் பிள்ளையார்தான் தமிழ்நாட்டு பக்த கவிராய சிரோமணியாக விளங்கியவர்.

இங்கு காவேரி நதி கடலைச் சேரும் சங்கம் இருக்கிறது. ஊருக்கும் கடலுக்குமிடையில் வெகுதூரத்திற்கு மணல் பரவியிருக்கிறது. நான் இங்கு இருந்தபோது பட்டிணத்துப் பிள்ளையார் உற்சவம் நடந்துகொண்டிருந்தது. கப்பல்போல மரக்கலம் ஒன்று செய்து கடலில் விடுகிறார்கள். கூடி வந்த ஜனங்களோடு நானும் சங்கத்தில் குளித்து மகிழ்ந்தேன். இன்னும் அதிக விவரங்கள் இச்சரித்திரத்தின் பின்னாலே பார்க்கலாம்.

வடக்கே விழுப்புரத்துக்குச் சமீபமாக புதுச்சேரி என்னும் துறைமுகமிருக்கிறது. தற்காலத்தில் இது பிரஞ்சுக்காரர்கள் ஆட்சிக்குள் இருக்கிறது. இங்கிருந்து பிரஞ்சுக்காரர்கள் கப்பல்கள் ஐரோப்பாவிற்கு செல்லுகின்றன. வடக்கே செங்கற்பட்டு ஜில்லாவிலிருக்கும் மகாபலிபுரம் (மாமல்லபுரம்) பல்லவமன்னர்கள் காஞ்சிபுரத்தில் ஆண்ட காலத்தில் அரும் பெரும் துறைமுகமாக விளங்கியது. இதற்கும் மன்னரின் பிரதான நகரமாகிய காஞ்சிபுரத்திற்கும் தொடர்ச்சியாக பல ஊர்களிருந்தன. மகாபலிபுரத்திற்கு நான் இருமுறை போயிருக்கிறேன். அழகிய கல்வெட்டு ரதங்கள் என்று சொல்லப்படும் கோயில்கள் இங்கு இருக்கின்றன. பூர்வீகத்தில் துறைமுகமாயிருந்த பாகங்களைக் கடல் இப்பொழுது மூடியிருக்கிறது. கடலில் ஆழ்ந்த ஒரு கோயிலின் கோபுரமும் கண்ணுக்குத் தெரியும். இன்னும் இதைப்பற்றிய பல விவரங்கள் இந்த நூலின் பின்பாகத்தில் பார்க்கலாம்.

தற்காலத்தில், தமிழ்நாட்டின் விசேஷித்த பெரிய துறைமுகம் மதரூஸ் என்று அழைக்கப்படும் சென்னை நகர்தான். கொஞ்சங் குறைய பத்து லட்க்ஷம் மக்கள் வசிக்கும் இந்த நகர் இந்தியாவின் பெரிய நகரங்களில் மூன்றாவதாகும். பல்கலைக்கழகத்தின் அரங்கசாலைகள், பெருங் கல்லூரிகள், பொருட்காட்சி உயிர்காட்சி ஸ்தாபனங்கள், பெரும் வைத்திய சாலைகள், சித்திரசாலைகள், பல ஆலயங்கள் இப்படி எத்தனை எத்தனையோ ஸ்தாபனங்கள் இங்கு செறிந்து நிறைந்து இருக்கின்றன. இந்த நகரத்தில் பெருங் கப்பல்கள் வந்து தங்கும்படி நல்ல துறைமுகமிருக்கிறது. (Harbour). பெருங்கப்பல்கள் துறைமுகத்திலிருக்கும் பாலங்களை (Docks) ஒட்டியே சேர்ந்து நின்று பிரயாணிகள் இலகுவாக அதற்குள் ஏறிக்கொள்ள வசதிகளுமுண்டு. மேல் நாடுகளுக்கும் கீழ் நாடுகளுக்கும் இங்கிருந்து கப்பல்கள் அடிக்கடி செல்லுகின்றன. மைலாப்பூர் என்ற சென்னையின் ஒருபாகம்தான் பூர்வகாலத்தில் துறைமுகமாகவும் ஊராகவும் விசேஷித்திருந்தது. கூவம், அடையாறு சென்னையிலோடும் ஆறுகள். கன்னியாகுமரி, தூத்துக்குடி, ஆறுமுகநேரி, வேதாரணியம், சென்னையின் வடபாகம், இப்படி கடலோர மிருக்கும் பலஇடங்களில் ஏராளமான உப்பளங்களிருக்கின்றன.

கடல்நீர் சூழ்ந்த க்ஷேத்திரஸ்தலமாகிய ராமேஸ்வரம், மண்டபம் அழகிய காட்சிதரும். இங்குள்ள குருசடித்தீவில் விசித்திர விநோதமான பலவித கடல் ஜெந்துக்களுண்டு. சென்னை போன்ற சர்வகலாசாலை மாணவர்கள் உயிர்சாஸ்திரம்

கோடியாகக்கற்க தங்கள் ஆசிரியருடன் இங்கு யாத்திரை போகிறார்கள். சென்னையிலும் கடலோரத்தில் நீரில் வாழும் பல்வகை பிராணிகளுள்ள நீர் காட்சிசாலையுண்டு.

## பொதியமலை அல்லது அகஸ்தியமலை வாசிகள்.

மேல்காத்துமலைத் தொடர்ச்சியின் எல்லை தெற்கே ஏறக்குறைய கன்னியாகுமரி முனை வரை நீண்டிருக்கிறது. அது திருநெல்வேலி தாலுக்காவை வளைந்து அதற்கு ஒரு பாதுகாப்பு போலவும் ஏற்படுகிறது. இந்தத் தொடர்ச்சியின் முடிவிலே பொதிகை மலையிருக்கிறது. அகஸ்தியமாமுனிவர் இங்கிருந்ததாக எண்ணப்படுவதாக இந்த பொதிகை மலை இந்துக்களுக்கு ஒரு பரிசுத்த ஸ்தலமாக விளங்குகின்றது. தாழ்ந்த குன்றுகளில் இருந்து மேலே நோக்குகையில் குவிந்த வடிவமுள்ள பொதிகைமலையின் உச்சி எவ்வளவோ சிறப்பான ஓர் மகத்துவ காட்சியை அளிக்கிறது. அநேக வருஷங்களுக்கு முன்னே பாண்டிய நாட்டிலிருந்து ஜனங்கள் அடைக்கலமாக இந்த பொதிகை மலைச்சரிவுகளிலும் சுற்றுப் பக்கத்திலுள்ள மலைகளிலும் வந்து புகுந்தார்கள். இவர்கள் தங்கள் சத்துருக்களால் துரத்தப்பட்டு இப்பிரதேசங்களுக்கு ஓடிவந்தார்கள். இப்படி வந்த அகதிகள் வாவா மலை உச்சிகளைத் தங்களுக்கு சொந்தமாக்கிக்கொண்டு மலை அரசர் என்று பெயர் வகித்துக் கொண்டார்கள். சில ஜாதியார் பளினி (பணியர் = மலை ஊழியர்), மலைக்குறவர் மண்ணார் அல்லது வண்ணார் என்றும் பெயர் வகித்துக்கொண்டு தங்கள் இஷ்டப்படி தெரிந்துக்கொண்ட இடங்களில் குடியேறினார்கள்.

அவர்கள் குடியிருந்த இடங்களைப் பின்கண்டபடி ஒருவாறு கூறலாம். மலைஅரசரும் பளினியரும் சிங்கம்பட்டி பாவநாசம் பக்கங்களிலும், மலைக்குறவர் செங்கோட்டைத் தாலுக்காவிலும் கொல்லம்பக்கத்திலும், மன்னர்கள் புலியன்குடிவாசுதேவ நல்லூர் மலைப்பக்கங்களிலும் குடியேறினார்கள். மலை அரசர்கள் தாழையூத்து வழுக்கம்பாறை, கொசு ஓடை, கோடை அருவி, இஞ்சி, தாவலம் பட்டன்காடு, ஐந்தருவி முதலிய பாகங்களில் இருந்தார்கள். ஆனால் அவர்கள் முக்கிய வாசஸ்தலம் பொதிகை மலைச்சுற்றிலுமே. மெய்யாகவே அவர்கள் அரசர்களே. ஆனால் அரசபுரிய நகரங்களாவது ரதகஜ துரக பதாதிகளடங்கிய சேனைகளாவது அவர்களுக்கு இருக்கவில்லை. அவர்களைச் சுற்றியிருக்கும் மலைகளே அவர்களின் கொத்தளம், மலைச் சிகரங்களே அவர்களின் அரண்மனைக் கோபுரங்கள், காடுகளிலுள்ள மரங்களே அவர்களின் காவல் கோபுரங்கள், காட்டுமிருகங்களே அவர்களின் காவலாளர். மற்ற மலை ஜாதியார் இந்த மலை அரசர்களை மிகவும் கண்ணியமாக மதித்து வந்ததினால் இவர்களுக்கு தேன் பிள்ளை சந்தன அரசர் என்ற கௌரவப்பட்டம் வழங்கினது.

மலை உச்சிகளிலும் சரிவுகளிலும் அடர்ந்த காடுகள் இருந்தன. இங்கு யானைகள், புலிகள், சிறுத்தைகள், சிவிங்கிகள், கழுதைப்புலிகள், காட்டெருமைகள், காடிகள், காட்டு நாய்கள், நரிகள் வசித்தன. என்றாலும் திறந்த வெளிகளில் மான்கள் கலைமான்கள் காட்டு ஆடுகள் முதலிய அமைதியாகப் புல் மேய்ந்து கொண்டிருப்பதையும் காணலாம். காட்டு

மரங்களின் கிளைகளினிடையே மலைப்பாம்புகள் வளைந்து சுற்றிக்கொண்டிருக்கும் நீண்ட புல் புதருக்குள் மறைந்து நகர்ந்து சென்றுக்கொண்டிருக்கும் விஷப்பாம்புகளும் உண்டு. சமயா சமயங்களில் புலி இனத்தில் மிகவும் கொடிதான வேங்கையின் பயங்கரமான கெர்ஜனை காடு முழுவதையுமே அதிரச் செய்யும் சாதுவான மிருகங்களை கலங்கடித்து உயிர் விடும்படியும் செய்துவிடும். மலைகளிலிருந்து வரும் கெர்ஜனையின் எதிரொளி மலைகளையும்கூட பயந்து நடுங்கும்படி செய்வதுபோல இருக்கும். மலைவாசிகள் அதின் பெயரைக் கூட உச்சரிக்கப் பயப்படுவார்கள். "பூச்சி" என்று பயத்துடனும் நடுக்கத்துடனும் ஒருவருக்கொருவர் இரகசியமாய்ப் பேசிக்கொள்ளுவார்கள். பயங்கரமாக அது தன் இரைமேல் பாய்ந்து க்ஷணப்பொழுதில் தன் கெப்பிக்குக் கொண்டுபோய் விடும். நீரோடையில் தண்ணீர் எடுக்கப்போயிருக்கும் பெண்களையும் காடுகளில் மரம் வெட்ட போயிருக்கும் ஆண்களையும் கூட இந்த பயங்கரமான மிருகம் உயிரோடு பிடித்துக்கொண்டு போய்விடும்.

தேன்பிள்ளை சந்தனர் தங்களுடைய வீடுகளை அமைக்க மலையிலுள்ள உயர்ந்த இடங்களையே தெரிந்து கொண்டார்கள். காடுகளில் ஏற்படுகிற அபாயங்கள் இருந்த போதிலும் தலைமுறை தலைமுறையாக அங்கேயே வசித்து வந்தனர். தங்களைச் சுற்றியிருக்கும் அழகிய காட்சிகளையே அவர்கள் விரும்பினார்கள். வளர்ந்தோங்கிய சிறந்த மரங்கள், கணக்கில்லாத நீரோடைகளினால் எங்கும் பசுசென்று செழித்திருக்கும் பசுமை, அருவிகளின் இனிய ஓசை, வீசுகின்ற

குளிர் காற்று, பட்சிகளின் பாடல், பூக்களின் நறுமணம் ஆகிய இவைகளையே அவர்கள் விரும்பினது. இவைகளின் மத்தியில் சந்தோஷமாக சுயாதீன ஜீவியம் செய்துவந்தார்கள். இவர்களுடைய உடைமைகளை வாதாடுவதற்கு எவருங் கிடையாது. பயிரிடுவதற்கு நிலங்களைத் தெரிந்தெடுக்கும் போது, உறுதியான நல்ல நிலமாக இருக்கவேண்டும். பக்கத்திலே நீரூற்று இருக்கவேண்டும், கிணறுகள் வெட்டக் கூடிய இடமாக இருக்கவேண்டுமென்று மிகுந்த கவனம் செலுத்துவார்கள். அதன்பின்பு வீடு கட்டுவதற்கு தோட்டம் உண்டாக்குவதற்கு, காடுகளிலுள்ள மரம் செடிகளை வெட்டி ஒழித்தார்கள். யானைகள் வந்து நாசம் பண்ணுதபடிக்கு, கொம்புகளைக் கொண்டு பலமான வேலி கட்டி சுற்றிலும் அடைத்து விடுவார்கள். நிலத்தைப் பண்படுத்தி விதை விதைத்த பின்பு, விதையும் மண்ணும் ஒன்றாகக் கலக்கும் படிக்கு ஒரு வளைந்த கொம்பினாலே உழுது அப்பால் சில சிறு கிளைகளினாலே நிலத்தை மேலாக சமப்படுத்திக் கொள்வார்கள்.

இந்தத்தோட்டங்களிலே மலைஅாசர் தானியங்களையும், கிழங்குகளையும் பற்பலவிதமான வாழைகளையும் புகையிலைச் செடியையும் பயிரிட்டு, வருஷத்துக்கு இருமுறை விளைச்சலை அநுபவிப்பதுண்டு. இவர்கள் தெரிந்தெடுத்த இந்த நல்ல இடங்களைச் சுற்றி அரசமரம், இலவம்பஞ்சு மரம், வேப்பமரம், தோதகத்தி மரம் முதலிய காட்டு மரங்கள் தங்கள் கிளைகளை ஆட்டி அழகாக அசைத்துக் கொண்டிருக்கும்.

3-வருஷங்களுக்கு ஒருமுறை தாங்களிருந்த இடத்தை விட்டு விட்டு, அதாவது அந்த இடம் பலனற்றதாக காணப்

பட்ட பின்பு அதை விட்டுவிட்டு, தங்களுக்கு இருக்கும் விஸ்தாரமான ராஜ்ஜியத்தில் இஷ்டம்போல எங்கேயாவது ஓர் இடத்தை நோக்கிச் செல்லுவார்கள். தங்கள் வீடுகளைக் கட்டும்போது அதற்கு வேண்டிய சாமான்களை கவனமாக சேகரிப்பார்கள். உத்தரங்கள், தூண்கள், கதவுகள், சன்னல்கள் முதலியவற்றுக்கு வேண்டிய மரம், கூரை மேய்வதற்கு வேண்டிய புல் இவைகளை முதலில் சேகரிப்பார்கள். மெல்லிய மரக்கம்புகள் வரிசைகளினால் கூரை கட்டி, ஓர்வித வாசனையிருக்கும் புல்லினால், அல்லது சுக்கு நாறிப்புல்லினால், அல்லது பெரிய வாழை இலையினால் கூரையே மேய்ந்து கொள்ளுவார்கள். வீட்டின் தளம் மண்தரையாகவேதான் இருக்கும். வீட்டு மத்தியில் கணப்புப் போட்டிருக்கும். அறையின் ஒரு மூலையில் ஒருவிதமான மேல்தளம் போடப் பட்டிருக்கும். படுத்து உறங்குவதற்காவது, வீட்டிலுள்ள தட்டுமுட்டு சாமான்கள், ஆகார வஸ்துக்கள் வைத்துக் கொள்வதற்காவது இது உபயோகிக்கப்படும். சிறு கம்புகளை ஒன்றோடொன்று சேர்த்துக்கட்டி பலகைபோல செய்து, 4 அல்லது 6 கப்புவிட்ட கம்புகளால் (கவட்டை கம்புகளால்) கால்கள் வைத்துக் கட்டி உட்காரும் ஆசனங்களாகவும், படுக்கும் கட்டில்களாகவும் செய்துகொள்ளுவார்கள். கனத்த மழையையும், கடுங்காற்றுகளையும், எதிர்த்து நிற்கத்தக்கதாக அவர்களுடைய வீடு பலமாகக் கட்டப்பட்டிருக்கும்.

வழி தெரியாத அந்தக் காடுகளிலே மலை அரசர் ஒரு இடம் விட்டு இன்னொரு இடத்துக்கு அலைந்து திரியும்போது

மறுபடி தங்கள் வழியைக் கண்டு கொள்ளுவதற்காக வழி நெடுக மரக்கொம்புகளையும், குச்சிகளையும் ஒடித்துப் போட்டுக் கொண்டே செல்வதுண்டு.

## குடி வாழ்க்கை.

மலை அரசர் வாழ்க்கை மிகவும் எளிய வாழ்க்கை. ஒரு ஆணானாலும்சரி பெண்ணானாலும்சரி ஒரு ஆளுக்கு 3 கெஜம் துணியே போதுமானது. தாழ்வான கீழ்பூமி பாகங்களில் வசிக்கும் ஜனங்களைப்போலவே இவர்களும் தங்கத்தினாலும் பித்தளையினாலும் ஆபரணங்கள் அணிந்து கொள்ளுவார்கள். ஆண்கள் தங்கக் கடுக்கனும், பித்தளைக் கம்பியில் ஓர் பச்சைக்கல் பதித்து காதின் மேல்பாகத்தில் ஒரு கொப்பும் போட்டுக்கொள்ளுவார்கள். சிலர் இதோடுகூட வைதீக சம்பந்தமாக கழுத்தில் ஒரு பவள மாலையும் அணிந்து கொள்வதுண்டு. பெண்கள் காது வடித்து, அதில் ஈயம் அல்லது இரும்பு வளையங்களை மாட்டிக்கொள்ளுவார்கள். காதின் மேற்பாகத்தில் ஒரு தங்கக் கொப்பு, மூக்கில் மூக்குத்தி அல்லது விசிறி முருகு, கழுத்தில் பவளம் அல்லது பாசி மாலைகள், கைகளில் பித்தளை காப்புகள், அதற்கு சற்று மேலே தோள் பக்கமாக தோலினால் செய்த தோள் காப்புகள் முதலியன அணிந்திருப்பார்கள். கை விரல்களில் கால் விரல்களில் பற்பலவிதமான மோதிரங்களும், கால்களில் பற்பலவிதமான நகைகளும் அலங்காரமாகப் போட்டுக் கொள்ளுவார்கள்.

அவர்களுடைய வீடுகளிலுள்ள தூசியினாலும் புகையினாலும் அவர்களுடைய சாமான்களையாவது துணிகளை

யாவது அவர்கள் சுத்தமாகக் காத்துக்கொள்வது அரிது. தூசி பிடித்த அந்த தரையிலே அவர்கள் படுத்து எழுந்திருக்கும்போது, சற்றெங்கிலும் அக்கரைப்படாமல், அந்த தூசியை சந்தனத்தூளைத் தட்டிவிடுவதுபோல தங்கள்மேல் படிந்திருக்கும் மண்தூசியை, கையினல் தட்டித் துடைத்துக் கொள்ளுவார்கள்!

ஆண்கள் சில வேளைகளில் தங்கள் வஸ்திரங்களைத் துவைப்பதுண்டு. ஆனல் பெண்கள் துவைப்பது மிக அபூர்வமாகத்தானிருக்கும். தண்ணீர் பாயும் இடங்களில் வசித்தபோதிலும் நதியின் தேவதைகளின் தூக்கத்தைக் கலைக்கக்கூடாதென்பதும், தேவதைகள் அந்தரங்கமாகக் குளிக்கிற இடத்தில் அவமரியாதையாக நுழையக் கூடாதென்பதும் அவர்கள் எண்ணம். தாங்கள் அந்த நதியில் போய் குளித்து அந்த ஜலம் தீட்டாகிவிட்டால் தங்களுக்கு எதுவும் தீங்கு நேரிடுமென்று பயந்தார்கள். ஆகையினலே அவர்கள் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் மொண்டு நடுக்கு தூரமாகக்கொண்டு போய் அங்கு தங்கள் வஸ்திரங்களைத் துவைத்துக்கொள்ளுவதுண்டு. எந்தக் காலத்திலாவது இவர்களுடைய வஸ்திரங்கள் வெள்ளாவியில் வைத்து வெளுக்கப்பட்டதே கிடையாது.

பெண்களே வீட்டு வேலை யாவும் செய்வார்கள். தங்களுடைய வீட்டைவிட்டு எங்கும் வெளியே செல்லுவது கிடையாது. ஒருவித நாணல், கோரை முதலியவற்றைக் கொண்டு பற்பல விதமான பெட்டிகள், கூடைகள், தட்டுகள், பாய்கள் முதலியன வெகு சாமார்த்தியமாக முடைவார்கள். ஒரு கம்பத்தை நாட்டி, அதில் முடிச்சுகள்போட்டு, நாட்கள்,

வாரங்கள், வருஷங்களைக் கணக்கிடுவார்கள். குழந்தை பிறந்த தினம், குடும்பத்தில் ஏற்பட்ட அபசகுனங்கள், வியாதிகள் முதலிய வர்த்தமானம் யாவும் இந்த முறையாகவே கணக்கிடப்பட்டு வந்தது. ஒரு குடும்பத்தினர் இன்னொரு குடும்பத்தினரை விருந்துக்கு அழைக்கும்போது இடையில் இருக்கும் நாட்களின் கணக்குகளுக்குத் தக்கதாக கம்பத்தில் முடிச்சுகள் கட்டுவார்கள். ஒவ்வொருநாளும் ஒரு முடிச்சு அறுபடும். கடைசி முடிச்சு அறுபடும்போது விருந்தினரும் சரியானபடி அந்த நாளிலே வந்து சேர்ந்து விடுவார்கள்.

சாப்பிடுவது மலைஅரசருக்கு நேரம் என்பது ஒரு கணக்கில்லை. பகல் இரவு என்பதை பொருட்படுத்துவது கிடையாது. இரவில் பசியிருந்தால், எழும்பி அவித்த சீனிக் கிழங்கு, சமைத்த காய் கறிகள் எதுவும் சாப்பிட்டு தண்ணீர் அருந்துவார்கள். சாப்பிட்டபின்பு புகைபிடிக்கிற வழக்கம் உண்டு. அவர்கள் பேசும் பாஷை மலையாளமும் தமிழும் கலந்த பாஷை. ஆதியில் பாண்டிய நாட்டு சம்பந்தமும், பாண்டிய நாட்டுக்கு திருவாங்கூர் சமீபமாக இருந்ததினாலும் இருபாஷைகளும் கலந்துபோயிருந்தன. வெளியே பாண்டிய நாட்டிலிருந்து மலை அரசரைப்பார்க்க வருபவர்களை இவர்கள் நன்கு உபசரித்து மரியாதை செய்வதுண்டு. வந்த உடனே தங்குவதற்கு அவர்களுக்கு ஒரு இடமும் படுக்க ஓர் கட்டிலும் கொடுத்து ஆகாரமும் கொண்டுவந்து வைப்பார்கள். கூட்டமாக வந்தால் அவர்களுடைய அந்தஸ்துப்படி முக்கிய மானவர்களை ஆசனங்களிலும் மற்றவர்களைத் தரையிலும்

உட்காரவைத்து, அவர்கள்முன் வாழை இலைகளைப்போட்டு அதில் பழம், உருளைக்கிழங்கு, மற்றவித கிழங்குகள், வறுத்த பயறு, தேன், மாவு முதலியன பறிமாறுவார்கள். வாழை களைக் குலைகளோடு வெட்டிக்கொண்டு வந்து வைப்பார்கள். பார்க்க வந்திருக்கும் விருந்தினரும் மலை அரசருக்கு அரிசி உப்பு, துணி, ஆகாராதிகள் முதலியன இனமாகக் கொண்டு வருவார்கள். மலை அரசரும் தங்கள் தங்கள் விருப்பத்திற்கு [illegible] அவைகளைத் தங்களுக்கு எடுத்துக்கொள்ளு வார்கள்.

வர்த்தகரும் வருவதுண்டு. பித்தளைப் பாத்திரங்கள் துணிகள், நகைகளை விலைக்குக் கொண்டுவருவார்கள். மலை அரசர்கள் தங்கள் விளைச்சலிலிருந்து அல்லது மற்ற இடங் களிலிருந்து அவர்கள் சேகரித்ததிலிருந்துள்ள இஞ்சி, மஞ்சள், மை தயாரிக்கப்படும் கொட்டை, வைத்தியத்துக்கு உதவும் காய்கள், வாசனைத் திரவியங்கள், தேன், மிளகு, பிசின், சாம்பிராணி, மிளகாய், தந்தம், மான் கொம்புகள், கலைமான் கொம்புகள், காய்கள், கிழங்குகள், தடிகள், பிரம்புகள் முதலியனவற்றை அவர்களுக்கு விற்பார்கள். ஆனால் அந்த வர்த்தகரோ இவர்களை ஏமாற்றி இவர்களுடைய சாமான் களுக்குக் குறைவாக விலைபோட்டு, தங்கள் சாமான்களை இரண்டுமடங்காக விலைபோட்டு, பண்டமாற்றி, களங்கமற்ற இந்த மலை அரசரை வஞ்சித்துவிடுவார்கள்.

வைதீக சடங்காசாரங்களும் பற்பல வழக்கங்களும்.

மலை அரசர் பிசாசுகளை வணங்கி வந்தார்கள். அவை களில் பிரதானமானது 'பூதாத்தன்'. இவர்களுக்கு விசேஷித்த

கோவில்கள் கிடையாது. ஒரு பெரிய மரத்தின் அடியில் ஒரு பீடத்தைக் கட்டி அதில் ஒரு கல்லை நாட்டியிருப்பார்கள். அதற்கு எண்ணெய் மஞ்சள் அபிஷேகம் செய்வார்கள். பகவதி (காளி அல்லது துருக்கை) என்னும் தேவியையும் பற்பனுதன் என்ற தெய்வத்தையும் வணங்கி வந்தார்கள்.

தங்களுடைய நிலங்களிலுண்டான விளைச்சலை அறுவடை செய்யும்போது தெய்வத்துக்கு நைவேத்தியம் அல்லது காணிக்கையாக முதலாவது படைத்த அந்த நாளை சந்தோஷமாக ஆசரிப்பார்கள். தெய்வத்துக்குப் படைக்குமுன் தங்கள் உபயோகத்துக்காக ஒன்றும் எடுக்க மாட்டார்கள். முதல் கனிகள், தானியங்கள், கிழங்குகள், எண்ணெய் வித்துகள், பாக்கு முதலியவற்றை பீடத்துக்கு முன்னுல் ஒரு விளக்கேற்றிப் படைப்பார்கள். கள், புளிப்பில்லா பானம் இவற்றை நைவேத்தியமாக பீடத்தின்மேல் ஊற்றுவார்கள். பீடத்தைச் சுற்றி பாட்டுப்பாடி நடனம் செய்வார்கள். அதன் பின்பு, தாங்கள் படைத்த காணிக்கைகளை வந்திருந்த யாவருக்கும் பங்கிட்டு கொடுப்பார்கள். அவர்களுடைய வருஷ ஆரம்பத்தில் (ஆகஸ்து மாசம்) நெல் வயல் அறுவடையாகும் சமயத்திலும் இதே மாதிரியாக மிகுந்த சந்தோஷத்துடன் ஆசரிப்பார்கள்.

கலியாண முதலிய விசேஷித்த சமயங்களில் ஆடு அடித்து சமையல் செய்வார்கள். தங்களுடைய பிரதான தெய்வத்துக்கு வாழைப்பழம், தேங்காய், பலாப்பழம், சக்கரங்கள் (ஒரு சக்கரம் = தம்படி) முதலியவை படைக்கப்

படும். மலை அரசரில் ஒருவன் பூசாரியாக இருந்து படைக்கப் பட்டவைகளில் ஓர் பாகத்தைத் தனக்கெடுத்துக்கொண்டு மீதியை ஜனங்களுக்குக் கொடுத்துவிடுவான்.

கலியாணத்துக்குக் குறிக்கப்பட்ட தினத்திலே பெண் வீட்டார் ஸ்ரீதனமாக அரிசி, காய்கள், பாக்கு முதலிய வற்றைக்கொண்டு வருவார்கள். மேளதாளங்களின் சத்தத் தைக் கேட்டதும் இன ஜனத்தார் யாவரும் திரளாகக் கூடு வார்கள். கலியாணமான பெண்கள் கைகோர்த்து நின்று சத்தமாகப் பாட்டுப்பாடி கும்மியடிப்பார்கள். சந்தோஷ ஆரவாரத்தினிடையே பெண்ணின் கழுத்தில் தாலி கட்டப் படும்.

மலை அரசருக்குள் மாப்பிள்ளை பெண் வயது வேற் றுமையைப் பற்றிப் பாராட்டுவது கிடையாது. ஒரு மனிதன் தன் இஷ்டம்போல ஒன்று அல்லது இரண்டு மனைவிகள் வைத்துக்கொள்ளலாம். விதவைகள் மறுவிவாகம் செய்ய அநுமதியிருந்தபோதிலும் அந்த ஜனங்களுக்குள் விதவையைக் காண்பதரிது. அவர்களுடைய ஜாதியில் விபசாரம் மிகவும் அருவருக்கப்படுகிற பாவம். அந்தக் குற்றத்தில் யாராவது அகப்பட்டதாக கண்டுபிடிக்கப்பட்டால் அல்லது களவு செய்ததாக காணப்பட்டால் அல்லது தலைவனுக்கு கீழ்ப் படியாமைகாட்டினால் குரூரமான தண்டனை விதிக்கப்படும். கைகளைப் பின்னால் கட்டிவைத்து அடிகள் கொடுப்பது சாதாரணமான தண்டனை. காதுக்குள் பெரிய சிவப்பு எறும்பை விட்டு கடிக்கச்செய்வதுண்டு. தங்களுடைய

குற்றத்தை அறிக்கையிட்டு மன்னிப்புக் கேட்டால் எச்சரித்து விடுதலை பண்ணுவார்கள். இக் குற்றங்களை ஒருவன் மறுபடியும் செய்வானானல் அவனை நாடு கடத்தி விடுவார்கள் கொலைபாதகனையோ கொலை செய்துவிடுவார்கள்.

தேன்பிள்ளை சந்தன அரசர் நேர்மையும் யோக்கியமுமுள்ளவர்கள். அன்பும் பட்சமும் உள்ளவர்கள். தங்கள் மார்க்கத்தில் பக்தியுள்ளவர்கள். தங்களுடைய தேவதையைப் பூஜிக்க பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்வதில் அதிகப் பிரீதியுண்டு. அகஸ்தியமாமுனிவர் இருந்த இடத்தில் அவர்கள் ஜீவித்ததால் சைவ மதத்தில் ஓர் விசேஷித்த வகுப்பினராக கருதப்பட்டார்கள்.

அவர்கள் ஒரு நல்ல ஒழுங்குக்குக்கட்டுப் பட்ட பிரஜைகள். அவர்களுடைய தலைவனுக்கு 'காணி' என்று பெயர். யாவரும் தங்களால் ஆனமட்டும் அவனுடைய அரசாட்சிக்கு அடங்கி இருந்தார்கள். 'காணி' காரனுக்குக் கீழ்படியாமை காட்டினல் பெரிய குற்றமாகும். அவனுக்கு நேரே அடியில் 'கட்டுக்காரன்' என்றொருவனுண்டு. அவனுடைய வேலை என்னவென்றால் தலைவன் கொடுத்த கட்டளைகளை ஜனங்களுக்குக் கொடுத்து, அவர்கள் அக்கட்டளைகளை நிறைவேற்றும்படி நடத்துவது. பிரதானியான அந்த தலைவன் வீட்டையும் அவனுடைய தோட்டத்தையும் கவனித்துப் பார்த்துக்கொள்வது ஜனங்களின் வேலை. தலைவரோ ஜனங்களுடைய காவலனும் துணையாளும் அவர்களுடைய காரியங்களுக்காக போராடுகிறவனுமாக இருந்தான். மேலும் அவர்

களுடைய நிலங்கள் உடைமைகள் முதலிய அவர்களின் பொது நலன்களையும் கவனித்து வந்தான். சுயாதீனமுள்ள ஜனங்களாக இருந்த போதிலும் திருவாங்கூர் அரசனைத் தங்களுக்கு மேலதிகாரியாக அங்கீகரித்து அவருக்குத் தங்கள் வணக்கத்தைச் செலுத்த சமயா சமயங்களில் அவரைக் காணப் போய் வருவதுண்டு. தங்களுக்குப் பெரியவராகிய அவருக்கு விசேஷித்த பொக்கிஷங்களை அல்லது தங்கள் காட்டிலுள்ள தந்தம், மான் கொம்புகள், பற்பலவித கிழங்குகள் பற்பல விசேஷித்த வகையான வாழைப் பழங்கள், தேன் கூட்டிலுள்ளதேன், ஆகிய இவைகளைக்கொண்டுபோய் காணிக்கை செலுத்துவார்கள். மாட்சிமை தங்கிய அவரின் சமுகத்தின்முன் வந்ததும் தங்கள் மேல்வேஷ்டியை உரித்து தலைகளில் கட்டிக்கொண்டு, கையில் அம்பும் வில்லும் பிடித்தவர்களாக நின்று 'எங்கள் பொன்னு தம்பிரானே நீர் வாழ்க' என்று வாழ்த்துவார்கள். அப்பால் தங்கள் கைகளைக்கட்டி வாயைப் பொத்திக்கொண்டு அவர் முன் குனிந்து வணங்குவார்கள். அரசனும் அவர்கள் தன்னைப் பார்க்க வந்ததினால் தனக்குண்டான சந்தோஷத்தைத் தெரிவித்து, அவர்கள்கொண்டுவந்த காணிக்கைகளை ஏற்றுக் கொண்டு பட்சமாக அவர்களுடன் பேசுவான். அதன்பின்பு அவர்களுக்கு வஸ்திரங்களும் சாப்பாடும் வழங்கப்படும் அப்பால் வழியனுப்பிக்கொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் தங்கள் இடத்துக்குத் திரும்புவார்கள். மலை அரசர் தங்களுடைய பிரயாணங்களுக்கு சாப்பாடு அல்லது தானியம் கொண்டுபோவதற்கு உபயோகிக்கிற பை ஓர் வித மரப்பட்

கொடியினால் செய்யப்பட்டிருக்கும். தண்டு பாகத்தை நன்றாக அடித்து, இரண்டாகப் பிளந்து ஒரு பைபோல பலமாய்த் தைத்துக்கொள்ளுவார்கள்.

மலை அரசர் இருக்கும் இடங்கள் சுகத்துக்கேற்ற இடங்களாக சுற்றிலும் இருந்தபோதிலும் காலாகாலங்களில் அவர்கள் இருக்கும் இடங்களிலும் நோய்கள் வருவதுண்டு. சாதாரண நோய்களுக்கு தங்கள் சொந்த அற்ப மருந்தைக் கொடுத்துக்கொள்வார்கள். நோயாளிகளுக்கு சுகம் அருளும் படி தங்கள் தெய்வங்களுக்கு பிரார்த்தனை செய்வார்கள். நோயாளிகளை பட்சமாய் கவனித்து சிகிச்சை செய்வார்கள். ஆனால் விஷபேதி வைசூரி வந்துவிட்டால் அவர்கள் தைரியம் அவர்களைவிட்டு ஓடிப்போய்விடும். பயந்து நடுங்கு வார்கள். வியாதியின் பெயரைக்கூட வாய்விட்டு சொல்ல முடியாது. அந்த வியாதிக்கு 'கசப்பு' என்று சொல்லுவார்கள். புலியைக்கண்ட மான் போலவும், நாயைக் கண்ட முயல் போலவும், ராஜாளியைக்கண்ட குருவியைப்போலவும், பருந் தைக்கண்ட பாம்பு போலவும் ஆகிவிடுவார்கள். தங்கள் வீட்டிலுள்ள ஒரு ஆளுக்கு இந்த வியாதிகண்டால் உடனே வீடு முழுவதும் ஏக குழப்பம். குடும்பத்தினர் வீட்டை விட்டு உடனே வெளியேறிவிடுவார்கள். இந்த துர் அதிர் ஷ்டம் யாருக்கு நேர்ந்தாலும் சரிதான். புருஷன் மனைவியை விட்டு விட்டு ஓடிவிடுவான்; மனைவி புருஷனை விட்டு விட்டு ஓடிவிடுவாள்; தாய் தன் பிள்ளையை விட்டு விட்டு ஓடிவிடு வாள். பிள்ளை தன் தாயை விட்டு விட்டு ஓடிவிடுவான்.

ஒரு மண் பாண்டத்தில் தண்ணீரையும் ஒரு காடு முடான கொட்டாங்காச்சியையும் நோயாளியின் பக்கத்தில் வைத்துவிட்டு "உனக்குத் தாகமாயிருந்தால் இதைக் குடி" என்று சொல்லிவிட்டு தங்களுடைய உயிர் பிழைத்ததே என்று திரும்பிப் பாராமல் ஓரோட்டமாக ஓடிவிடுவார்கள். அங்குள்ள நாட்டு வைத்தியனிடம் 1¼ அணா கொடுத்து நோயாளியை கவனித்துக்கொள்ளவும், ஒருவேளை நோயாளி சாகநேரிட்டால் புதைத்துவிடும்படியும் சொல்லிப் போகலாம். ஆனால் அவர்களோ அந்த நோயாளி சுகமடைந்து வருகிறானா அல்லது அவனுக்கு ஒரு மரியாதையான அடக்கம் இருந்ததா என்பதைப் பார்க்கவே வருவது கிடையாது. சிலர் தங்களுக்கு யாதொரு கவனிப்பாவது வைத்தியமாவது கிடையாமலிருந்த போதிலும் அற்புதமாகப் பிழைத்துக் கொள்ளுவார்கள். மற்றவர்கள் தங்கள் கொடிய வேதனையில் தனிமையாகக் கிடந்து இறந்துபோவார்கள்.

ஒரு சாவு நேரிடும்போது மகனும், மருமகனும்தான் எல்லாக்காரியங்களுக்கும் ஏற்பாடு செய்யவேண்டும். பிரேதத்தைப் புதைத்த பின்பு 16 நாட்களுக்கு வீட்டுக்குள்ளேயே அவர்கள் இருக்கவேண்டும். எவரையாவது பார்க்கவாவது தொடவாவது கூடாது. அந்த நாட்களுக்கு அப்பால் மற்ற இனத்தார் தேங்காய்ப் பாலையும் சாணித் தண்ணீரையும் கொண்டுவந்து அவர்கள்மேல் தெளித்து சடங்காசார சுத்திகரிப்பு நடைபெறும். இதற்கப்புறம்தான் அவர்கள் மற்றெல்லாரோடும் கூட ஒன்றாயிருந்து சாப்பிடு

வார்கள். மலை அரசருக்கு வருங்கால ஜீவனைக்குறித்து விபரீதமான எண்ணங்கள் உண்டு. சரீரம் மண்ணுக்கு மண்ணாய்ப் போய்விடுகிறதென்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனால் ஆத்துமா காற்றோடு காற்றாகப் போய்விடுகிறதென்பது அவர்கள் நினைவு. மரித்துப்போகிற சிலர் தெய்வமாய்விடுகிறார்களென்று ஒரு நம்பிக்கை அவர்களுக்கு இருந்ததினால், தெய்வங்களைப் பூஜிக்கிறமாதிரி அவர்களுக்கும் பூஜை செய்தார்கள்.



## அத்தியாயம் 2.

பூர்வீக ஆதாரங்கள்.

இந்திய சரித்திரம் முழுவதையும் படியாமல் தமிழ் மக்களின் சரித்திரம் மாத்திரம் படிப்பது நமது அறிவை மட்டுப் படுத்துகிறதாயிருக்கும். இந்தியாவில் மக்கள் பல மொழிகளைப் பேசினாலும் கலை ஒற்றுமையுண்டு. அடிப்படையாக இந்திய நாகரீகமொன்றே. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்தியாவில் வட பாகத்திற்கும், தென் பாகத்திற்கும் நெருங்கிய சம்பந்தமிருக்கிறது. வடமொழியும், தமிழ் மொழியும் கலந்து இணைக்கப்பட்டிருக்கிறது. எனினும் தமிழ் மக்கள் தங்கள் நாட்டு சரித்திரத்தை நன்கறியவேண்டும். அரசியல்விஷயத்தில் தமிழ் நாட்டுச் சரித்திரம் பலநூற்றாண்டுகளாக தனியே பிரிந்திருந்தது. கொஞ்சங்குறைய கி. பி. 1500 அல்லது விஜயநகர் ராஜ்ய காலமட்டும் தமிழ் நாடு தனி அரசியல் சுதந்திரத்தை முற்றிலும் இழக்கவில்லை. மேலும், தென்இந்தியாவிலுள்ள ஆந்திரர், கன்னடத்தார், மலையாளிகள் இவர்களும், தமிழ் மக்களும், திராவிடர் என்று வழங்குகிற பதத்தின்படி ஒரே இனத்தினரே. இவர்கள் பேசுகிற பாஷைகளும் துளுமொழியும் ஒரே மூலபாஷையிலிருந்து பிரிந்தவைகளே. முக்கியமாக மலையாளமும் தமிழும் இரண்டாகப் பிரிந்தது சில நூற்றாண்டுகளுக்கு முன்தான். தமிழ் மொழி பூர்வீக பாஷைகளின் ஒன்று. சமஸ்கிருதம், எபிரேயு, லத்தின், கிரேக்கு, தமிழ் இவற்றில் தமிழ் மொழி மாத்திரந்தான் இந்நாள் மட்டும் உயிருள்ள மொழியாக வழங்கப்படுகிறது,

மற்ற மொழிகள் பேச்சில் வழங்காத செத்த் பாஷைகள் என்று அழைக்கப்படும். இந்திய சரித்திரமெல்லாம் விவரமாக இங்கு படிப்பது இந்த நூலின் நோக்கமல்ல. தமிழ் மக்கள் சரித்திரம் மாத்திரம் இங்கு படிப்போம். எனினும் எங்கெல்லாம் இவர்கள் சரித்திரம் ஏனைய இந்திய மக்கள் சரித்திரத்துடன் கலந்து வருகிறதோ அச்சமயங்களிலெல்லாம் அவர்கள் சரித்திரத்தையும் கவனித்துக் கொள்வோம்.

சரித்திரம் என்றால் என்ன?

1. சரித்திர புஸ்தகங்கள் சாதாரணமாக முக்கிய படுத்துபவைகள் என்ன? யுத்தங்கள், கொலைகள், அழிச்சாட்டங்கள், கொள்ளைகள், அழகிய கன்னிகளை வசப்படுத்த சண்டைகள், பழிவாங்குதல், அல்லது அரசர்களின் சட்டங்கள் வம்ச தொடர்புகள், ஏகாதிபத்தியங்களின் விவரங்கள் முதலியனவைகளே. ஆனால் சரித்திரத்தின் விசேஷம் இவையல்ல.

2. பூலோக அமைப்பின் பலனாக மக்கள் பல வருணமுள்ளவர்களும், வித்தியாசமான பாஷை பேசுகிறவர்களாகவும் இருக்கிறார்கள். ஆண்டுகள் செல்லச் செல்ல இவர்களால் ஏற்படுகிற நாகரீகங்களும், கலைகளும், அரசியல் முறைகளும் வித்தியாசமாய் வளர்ந்துகொண்டே போகின்றன. எனவே சரித்திரம் கற்போர் பூகோள சாஸ்திரம், ஜனங்களின் இயற்கை தோற்றம் அதாவது அவர்கள் சரீர வடிவு, வருணம், பாஷை, கலைகள், நாகரீகம் இவைகளையும் கவனிக்கவேண்டும்.

சங்கீதத்தில் வாத்தியங்கள் அம்சதொனிகள் பல இருக்கின்றன. வீணை, கின்னாரம், சுரமண்டலம், யாழ் முதலிய நரம்பு வாத்தியங்களோடு மிருதங்கம், கைத்தாளம் முதலியன சேர்ந்து, பலர் தங்கள் குரல்களை மேற்கூறிய வாத்தியங்களுக்கேற்க பொருந்திய இராகம், தகுந்த தாளம், ஏற்ற சுருதியோடு பாடும்போது காதுக்கு எத்தனை இனிமையாயிருக்கும்! இவ்விதமாக தமது மகத்துவம் விளங்கவும், மக்களுக்கு ஆசீர்வாதம் பெருகவும், மானிட வர்க்கத்தை பலவிதநிறம் தோற்றமுள்ளவர்களாகவும், பற்பல பாஷைகள் பேசுகிறவர்களாகவும், ஒருவரோடு ஒருவர் ஐக்கியமாகவும் கூட்டுறவாகவும் பொருந்திக் கலந்து வாழ நோக்கம் கொண்டு கடவுள் படைத்திருக்கிறார். ஆண்டுகள் செல்லச் செல்ல மக்களை கடவுள் எவ்வாறு நடத்தி வருகிறார்? அவருடைய மகத்துவும் காருண்ணியமும் மக்களை எவ்வாறு பாரமரித்து வருகின்றன, எத்துனை உன்னத பக்த சிரோமணிகள் மூலமாய் தம்மை வெளிப்படுத்தியிருக்கிறார்? இந்த விஷயங்களையும் சரித்திர மூலமாய் அறியலாம்.

3. மனுஷனின் முன்னேற்றம், சமுதாய வளர்ச்சி விஞ்ஞான சாஸ்திர அறிவு வளர்ச்சி, கலைஞானம் முதலியவற்றில் எவ்வாறு மக்கள் விர்த்தியடைந்து வளர்ந்திருக்கிறார்கள் என்பதையும் அறியலாம். கடவுளைப் பற்றிய அறிவு, சமயங்கள், தத்துவஞானம், பக்தர் போதகம் இவற்றையும் படிக்கவேண்டும். பக்தர்கள், பெரியோர்கள் சரித்திரமும் அறிய வேண்டும்.

தமிழ் நாட்டுச் சரித்திரம் படிக்க பூர்வீக ஆதாரங்கள் என்ன?

1. சாசனங்கள். கல்வெட்டெழுத்துக்கள், சிற்பங்கள், செம்பு சாசனங்கள், செப்பு தகடுகளால் வெட்டப்பட்ட எழுத்துக்கள்.

2. புராதன தமிழ் நூற்கள்:— தொல்காப்பியம், சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள், அகநானூறு, புறநானூறு.

1. ஆரிய நூற்கள்:— வேதம், இதிகாசம், ராமாயணம் இவைகள் கூறுபவை. வடநாட்டுக்கும், தென்னாட்டிற்கும் இருந்த சம்பந்தங்கள் பற்றி இவை கூறும் விஷயங்கள். கௌடல்யர் இயற்றிய அர்த்த சாஸ்திரத்தில் பாண்டிய கவாடகம் என்ற முத்து, மதுரம் என்ற பஞ்சாடை இவற்றைப்பற்றிய குறிப்புகள் தென்படுகின்றன.

2. பாலிபாஷை:—புத்த மதத்தின் பூர்வீக பாஷை. இலங்கை ராஜாக்களின் சரிதை பாலி மொழியிலேழுதப் பட்டிருக்கும். மகாவம்சம் என்னும் பழைய நூல் ஒரு நல்ல ஆதாரம்.

3. பூமியில் மறைந்து வெட்டி வெளியானவைகள். (உ. ம்.) குகைக் கோவில்கள், சித்தன் வாசல், பழைய ஊர்கள், கட்டிடங்கள், தாழிகள் (கொற்கை).

4. புராதன ஆலயங்கள், ஆலயங்களிலுள்ள எழுத்துக்கள், சித்திரங்களும், சிலைகளும் — தஞ்சாவூர், மதுரை திருநெல்வேலி முதலிய இடங்களிலுள்ளவை.

5. அந்நியர்கள் எழுதிவைத்தவை:— விசேஷமாக கிரேக்கர்கள், சீனர், ரோமர் இவர்கள் அதிக உதவியாயிருக்கிறார்கள். பெரிப்ளஸ் என்ற பூர்வீக கிரேக்கநூல் இந்தியாவைப் பற்றிக் கூறுகிறது. (கி. பி. 60). டாலிமி என்ற கிரேக்க பிரயாணியும், மார்க்கோப்போலோ என்ற இத்தாலிய பிரயாணியும் எழுதிவைத்த நூல்களும் ஆதாரமே. பிளினி என்ற ரோம அதிபதி ரோமப் பெண்களின் ஆடம்பர ஆபரணங்கள் உடை நடையால் இந்தியாவுக்கு ஏராளமான ரோம நாணயங்கள் போய்விடுவதாக முறையிடுகிறார். ரோம நாணயங்கள் விசேஷமாக அகஸ்துாயன் காலத்து நாணயங்கள் தென் இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

6. சீன இந்திய சம்பந்தம்:— ஹயூன்தசங்கு என்ற சீனயாத்திரீகர் தமிழ் நாட்டிற்கு வந்து திரும்பியபின் எழுதியிருக்கும் சீன நூலைப்பற்றி பின்னே விவரமாய்க் கூறுகிறேன்.

சீன இந்திய சம்பந்தம்.

"லோயாங் என்ற சீன மன்னன் புத்த மதத்தைத் தழுவிய காலத்திலிருந்துதான் சீனாவில் புத்தமதம் வேரூன்றியது என்னலாம் (அதாவது சுமார் கி. மு. 67). அதன் பிறகே சீனாவிலிருந்து இந்தியாவுக்கு யாத்ரீகர்களும், இந்தியாவில் இருந்து சீனாவுக்கு புத்த மதத்துறவிகளும் போக ஆரம்பித்தனர். இந்தியாவுக்கு வந்த சீன யாத்ரீகர்களில் பாஹியான், ஹூவன்சாங், இட்ஸிங் முதலியோர் முக்கியமானவர்கள். சீனாவிற்குச் சென்ற இந்தியத் துறவிகளுள் கஸ்யப மாதங்கர், குமார ஜீவா, குணவர்த்தன முதலியோர் பிரபலியமானவராவர்.

சீனாவில் புத்தரின் நாமத்தை அறிமுகப்படுத்தியவரும், முதன் முதல் புத்த சங்கத்தோடு சென்று பிரசாரம் செய்தவருமான கஸ்யப மாதங்கர் மிகவும் முக்கியமானவர். குமாரஜீவாவும், குணவர்த்தனுவும் புத்த ஆகமங்களை சமஸ்கிருதத்திலிருந்து சீன மொழியில் திருப்பினார்கள். இவர்களில் குமாரஜீவா என்பவர் மட்டும் சுமார் 94 புத்தகங்களை மொழிபெயர்த்திருக்கிறார். குணவர்த்தனுவும் சுமார் 64 புத்தகங்களை மொழிபெயர்த்தார்.

பாஹியான் என்ற சீன யாத்திரீகர் புத்தமத ஆராச்சிக்காக இந்தியாவுக்கு வந்தார். ஹுவன்சாங் என்பவர் புத்தமத வேதமாகிய திரிபிடகத்தை சீன மொழியில் திருப்பினார். மேலும் இந்தியாவிலிருந்து சுமார் 857 புத்தகங்களைச் சேகரித்து சீனாவிற்குக் கொண்டுபோய் அவற்றில் 73 புத்தகங்களைச் சீனத்தில் மொழிபெயர்த்தார். இட்சிங் என்பவர் சுமார் 400 புத்தகங்களைச் சேகரித்து, அவற்றில் 56 புத்தகங்களைச் சீனமொழியில் திருப்பினார்.

இந்தியத் தொடர்பினால் சீனரின் கலைஞான வளர்ச்சிக்கே ஒரு பெரிய உதவியாயிருந்ததென்பதோடு மட்டுமன்றி உலக நாகரீக சரித்திரத்திலேயே இது ஒரு பெரிய வெற்றியுமாகும். இவ்விரண்டு பெரிய நாடுகளுக்கும் இடையே இந்த அழியாத தொடர்பையும் சிநேகத்தையும் வளர்த்தவர்கள் எல்லாம் துறந்த சந்யாசிகளே என்னும்போது நாம் ஆச்சரியப்படாமலிருக்க முடியாது.

(From the Sino Indian Journal.)

சிரியா, பாலஸ்தீன தேசங்களுக்கும் தமிழ் நாட்டிற்கும் சம்பந்தம் :— கி. பி. 72-ம் ஆண்டில் பாலஸ்தீன ரோமரால் தாக்கப்பட்டு, அதன் தலைநகராகிய எருசேலம் தீத்துராயனால் அழிக்கப்பட்டது. இக்காலத்தில் யூத ஜாதியினரில் சிலர் தமிழ் நாட்டின் மேல்பாகமான கேரள நாட்டில் வந்து குடியேறினார்கள். இவர்கள் வம்சத்தினர் இன்றும் கொச்சிப் பிராந்தியங்களில் வசித்து வருகிறார்கள். மலையாளம்தான் இவர்கள் பேசும்மொழி. வெள்ளை யூதர் என்றழைக்கப் படுகிறார்கள். இவர்கள் கட்டிய யூத ஆலயம் ஒன்று கொச்சியிலிருக்கிறது.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து தமிழ் நாட்டின் மேல் பாகத்தில் சீரிய கிறிஸ்தவர்கள் என்கிற கிறிஸ்தவசபை அத்யக்ஷர்கள், குருக்கள் (அக்ஷன்மார்) இருந்திருக்கிறார்கள். முதலாவது நூற்றாண்டிலேயே கிறிஸ்துவின் சிஷரில் ஒருவரான தோமா என்ற பெரியார் தமிழ்நாடு வந்து கிறிஸ்தவ சபையை நாட்டினதாகப் பாரம்பரிய சரித்திரங்கள் கூறுகின்றன.

9. பாஷைகள் சம்பந்தம் :— கிரேக்கு, எபிரேயு, தமிழ் இப்பாஷைகளுக்கு உள்ள சம்பந்தம். கிறிஸ்தவ வேதாகமத்தில் 1 ராஜாக்கள் 10: 11–18. 2-நாளாகமம் 9: 21 இதில் வரும் சில பதங்கள் தமிழ்ப் பதங்களே.

| தமிழ் | எபிரேயு |
|---|---|
| தோகை | துக்கிம் |
| அகில் | அகல் (வாசனை திரவியம்). |

| தமிழ் | கிரேக்கு |
|---|---|
| கர்ப்பூரம் | கார்பியா (பார்ப்பியன்). |
| இஞ்சி | ஜின்ஜிபர் |
| தந்தம் | தந்தம் |
| வைடூரியம் | பெரில் |
| அரிசி | அரிசா |

தென்னிந்தியாவுக்கும் பாலஸ்தீன எகிப்து தேசத்திற்கும் அரேபியா மூலமாக வியாபாரம் நடந்தது. குதிரை வியாபாரம் விசேஷம் (உ. ம். மாணிக்கவாசகர் சரித்திரம்.)

10. மேல் நாடுகளின் சம்பந்தம் :—

"பின்வரும் சரித்திர குறிப்பு காஸ்மாஸ் இண்டிகோ பிளாஸ்டிஸ் என்னும் ஆரும் நூற்றூண்டு பைசாண்டிய துறவி எழுதிய 'கிறிஸ்தவ தேச வர்த்தமானத்தில்' காணப்படுகிறது. (பண்டைய காலத்தில் இலங்கை தமிழ் நாட்டோடு இணைக்கப்பட்ட பூமியாயிருந்ததாகவும் தாம்பிரபருணி ஆறு அதற்குள் பிரவேசித்து ஓடினதாகவும் எண்ணப்படுகிறது.) அவர் எழுதிருப்பதாவது, "தாப்ரோபேனில் (இலங்கையில்) கிறிஸ்தவர்களுக்கும், குருக்களுக்கும், விசுவாசிகளுக்கும் ஒரு சபை இருக்கிறது. மிளகு பயிராகும் மாலியிலும் ஒரு சபை இருக்கிறது. பாரசீகத்தில் பிரதிஷ்டை பண்ணப்பட்ட அத்தியட்சர் காலியாணு என்ற பட்டணத்தில் இருக்கிறார்." மாலி என்பது மலேயாளம். ஆனால் காலியாணுவை அப்படி ரூபிக்க முடியாது. ஆரும் நூற்றுண்டில் இப்பெயரையுடைய

இடங்கள் இரண்டு அல்லது மூன்று இருந்தன, "செங்கடலின் பெரிப்ளஸ்" என்ற நூலில் காலியாணா என்பது பழுதாய்ப் போன ஒரு துறைமுகமாயிருந்தது என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இந்த அரிய நூலை பிரசுரிப்பவர் காஸ்மாஸ் நூலிலிருந்து கொடுக்கும் மேற்கோளில் ஆறாம் நூற்றாண்டில் இந்த இடத்திலிருந்து ஏற்றுமதி செய்த முக்கியமான பொருள்கள் இரும்பும், பருத்தியும், துணியும் என்று குறித்திருக்கிறார். தென் கலியாணா என்றுதான் இது யூகிக்கப்படுகிறது. ஏனென்றால் எஃகு தக்காணத்தின் தெற்கு பாகத்திலுள்ள மைசூரிலும், சேலத்திலும் இருந்ததாகத் தெரிகிறது. ஒன்று தக்காணத்தில் சாளுக்கிய இராஜ்ஜியத்தின் தலைநகரமாயிருந்தது, மற்றொன்று இந்தியாவின் மேற்குக் கரையில் ஒரு துறைமுகமாயிருந்தது, மேலே குறிப்பிட்ட இரண்டு துறைமுகங்களில் ஒன்று பம்பாயிக்கருகிலும் மற்றொன்று மங்களூருக்கு சுமார் 32 மைலுக்கு வடக்கேயுள்ள உடுப்பிக்கு அருகிலும்இருக்கின்றன. கடைசியாக சொல்லப்பட்ட இடம் தற்போது ஒரு குக்கிராமமாயிருக்கிறது. ஆனால் காஸ்மாஸ் குறித்திருப்பது பெரும்பாலும் இதுவாகதான் இருக்கலாம்.

தென்னிந்தியாவிலிருந்ததாக கருதப்படும் பாலவி சாசனங்களும், அவை காணப்படும் இடங்களுக்கு இடையே உள்ள தூரமும், பாரசீகர்கள் குடியேறியிருந்ததின் முக்கியத் தைக் காட்டப் போதிய சான்றுகளாகும். தற்போது திருவாங்கூரிலுள்ள கோட்டயத்திலும் சென்னைக்கு அருகிலுள்ள பாங்கி மலையிலு திருஷ்டாந்தங்கள் உண்டு. இவைப்

போன்ற பல திருவாங்கூரில் மாத்திரமல்ல, இந்தியாவின் பல பாகங்களிலும் இருக்கின்றன. மேலே சொன்னபடி பாலவி எழுத்துக்கள் பம்பாயிக்கருகிலுள்ள குகைகளில் காணப்படுகின்றன. இதனால் பாரசிகர்கள் இந்த இடங்களுக்கு வந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது.

சென்னையிலிருக்கும் பரங்கிமலையிலுள்ள சிலுவையைத் தவிர, தென் மேற்கு இந்தியாவில் அநேக சிலுவைகள் இருந்தன. ஆக பாரசிகர்கள் இந்தியாவின் தென்பாகத்தில் வசித்து வந்ததோடல்லாமல் கிராங்கனூரை விலாக்கியம் பெற்றவர்களாயுமிருந்தார்கள்.

அநேக ஞாபகசின்னங்கள், அழிந்து போய்விட்டன. ஆனால் பிரசித்திபெற்ற பரங்கிமலை பீடம்போல் சிலகண்டுபிடிக்கப்படலாம். இந்த மலைபீடம் 1547-ம் ஆண்டு போர்த்துகீஸியர்களால் கண்டு பிடிக்கப்பட்டது. பரிசுத்த தோமா என்கிற அப்போஸ்தலர் இரத்த சாட்சியாக மரித்த இடத்திலுள்ள, ஒரு மடத்தில் அஸ்திபாரத்தைக் கண்டுபிடிக்க தோண்டிய காலத்தில் இந்த மலைபீடம் கண்டுபிடிக்கப்பட்டது. பீடத்தில் ஒரு பாகத்தில் ஒரு சிலுவையும் அதன் மேல் விரிக்கப்பட்ட சிறகுகளுள்ள ஒரு புறாவைப்போன்ற பறவையும் இருந்தன. இது பரிசுத்த ஆவியானவர் இயேசுகிறிஸ்து ஞானஸ்நானம் பெற்ற சமயத்தில் இறங்குவதையோ, அல்லது தேவமாதாவிற்கு அறிவிக்கப்பட்டபோது பரிசுத்த ஆவியானவர் அவள்மேல் இறங்கினதையோ குறிக்கும். இந்த சிலுவை புதிதாக கட்டப்பட்ட ஆலயத்தின் மூலஸ்தானத்தில் வைக்கப்

பட்டது என்று லூசீனு என்ற போர்த்துகீஸிய ஆசிரியர் கூறுகிறார். மேலே சொல்லப்பட்டவை முற்றிலும் உண்மை. போர்த்துகீஸியர்கள் முதலாவதாக பரங்கி மலைக்கு வந்தபோது அங்குள்ள கிறிஸ்தவ கோவில் பாழடைந்திருப்பதையும், அங்கே ஒரு மகமதிய சன்னியாசி (பக்கிரி) இருந்ததையும் கண்டார்கள். அந்த பீடத்தைப்பற்றி சொல்லப்படுவதும் உண்மையே. அங்கே இருந்த கிறிஸ்தவ சமுதாயத்தின் அழிவிற்குக் காரணம் என்னவென்பது சரியாக தெரியவில்லை. ஒருவேலை வடக்கே இருந்த முகம்மதியர்களுக்கும் இந்து இராஜ்ஜியமாகிய விஜயநகரத்திற்கும் ஏற்பட்ட சண்டையாய் இருக்கலாம்.

காரணயத்தின் மேலுள்ள வாசகத்தை ஆராயும்போது இந்த எழுத்துகள் 7 அல்லது 8-ம் நூற்றாண்டின் காலமாய் இருக்கலாம். முதலாவதாக எழுதப்பட்டவை சென்னையில் உள்ள பரங்கி மலையிலும் கோட்டயத்திலுள்ள பழைய கோவிலின் மதிலிலும் காணப்படுகின்றன. பின்னால் எழுதப் பட்டவை அதே கோவிலின் பக்கத்திலுள்ள பீடத்தின்பின்னால் எழுதப்பட்டிருக்கின்றன. அந்த பீடத்தில் சிரியா தேச மொழியின் ஒரு வாக்கியமும் காணப்படுகிறது. இதிலிருந்து இவை 10-ம் நூற்றாண்டிற்கு முற்பட்டதென்று சொல்வதற்கு இல்லை. எப்படியிருந்தாலும் சிலுவைகளெல்லாம் தோமா அப்போஸ்தலனுக்கு பின்னால் வந்தவை என்பது நிச்சயம். அங்கே எழுதப்பட்டிருப்பவை என்னவென்றால், "இவர் சிலுவையின் பாடே அடைந்த தண்டனை. அவர் உத்தம கிறிஸ்து, உன்னத தெய்வம், தூய வழிகாட்டி."

தென்னிந்தியாவில் பாலவி எழுத்துக்கள் எழுதப்பட்டிருந்த ஒரு செப்பு தகடு கண்டுபிடிக்கப்பட்டது. இது மலையாள கரையிலுள்ள கிறிஸ்தவர்களின் உரிமைகளைப்பற்றி குறிப்பிடும் ஒரு மானியத்தின் ஒரு பகுதி. அந்த மானியம் ஆறு செப்புதகடுகளில் எழுதப்பட்டிருக்கிறது. ஐந்து செப்பு தகடுகள் தமிழ் வட்டெழுத்துக்களால் எழுதப்பட்டிருக்கிறது. தன் நாட்டில் வாழ்ந்து வந்த கிறிஸ்தவ சபையாருக்காக இந்த மானியம் ஒரு அரசனால் கொடுக்கப்பட்டது."

(From the Indian Antiquary.)

இந்தியாவின் பூர்வீக சம்பந்தம் கிரேக்கர்களோடு அவர்களுக்கு தமிழில் யவனர் என்னும் பெயர் இருந்ததுண்டு.

யவனர் நன்கலம் தந்த தண் கமழ் தேறல்
பொன் செய் புனைகலந் தேந்தி நாளும்
மொண்டு ஒடிமகளிர் மடுப்ப. (புறநானூறு)

பலுச்சிஸ்தானத்தில் பிராகி என்ற ஒரு வகை ஜாதியார் இருக்கின்றனர். இவர்கள் பாஷைக்கும் தமிழ் மொழிக்கும் சம்பந்தம் இருக்கிறது.

சிந்து நதி சமீபமாயுள்ள மொஹஞ்ச-தாரோ என்ற அழிந்த புதைநகர் வெட்டு ஆராய்ச்சியில் தென்னிந்திய நாகரீகம் வடக்கே பரவியிருந்ததென்பதற்கு ஆதாரமான பலவற்றைக் கண்டு பிரமித்திருக்கிறார்கள். மெசப்பத் தோமியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் பழைய காலத்தில் சம்பந்தம் இருந்தது. அங்கே தற்காலத்தில் கண்டு பிடிக்கப்பட்ட சாசனங்கள் தென்னிந்திய நாகரீகத்தை காட்டுபவை — (உ. ம்.) சிலைகள், தேக்கு மர வேலைகள்.

இதனாலே சிலர் தென்னிந்தியர்களை மெசபத்தோமியாவில் இருந்து வந்த சுமேரியர்வம்சத்தினர்களென்று கூறுகிறார்கள். ஆனால் இது சரியல்ல. பெரிபிளஸ் என்ற பிரயாண நூலில் அதின் கிரேக்க ஆசிரியர் எழுதியிருப்பதாவது:— மேல் தமிழ் நாடாகிய கேரளநாட்டின் (கேரளபுத்ரா) முக்கிய துறை முகம் முசிரி. பாண்டிய நாட்டின் முக்கிய துறைமுகம் நெல்கிந்தா. முசிரியில் கப்பல் தங்குமிடம் சரியாயில்லா மையாலும், கடற்கொள்ளைக்காரர்கள் இருந்ததாலும் யாத்திரி கர்கள் அங்கு வருவதில்லை. முசிரி என்பது (முயுரிகோட்டா) தற்காலத்தில் கடுங்கலூர் (கிராங்கனூர்) என்று வழங் கப்படுகிறது. கொச்சி காயல்களில் முகத்துவாரத்தில் பிளினி குறிப்பிட்ட பராக்கே இருந்தது. நெல்கிந்தா (நீல்கந்தா) அந்தக் காலத்தில் இந்தியாவின் முக்கிய துறைமுகமாய் இருந்தது. புரோச்சியின் கப்பல்களால் வடக்கு தக்காணக்கரை அடைப்பட்டிருந்தது — இதன் முக்கியத்திற்கு ஒருவாறு இது காரணமாகலாம். ஆனால் அதன் முக்கியத்திற்கு நெல்கிந்தாவின் பிரபலஸ்தானமான விசேஷத்திற்குக் காரணம் மிளகு வியாபாரம் பிற்காலத்தில் இதனால் புரோச்சின் பெயர் முற்றிலும் அழிந்துபோய்விட்டது. நெல்கிந்தாவிலிருந்து ஏற்றுமதியான சரக்குகள் பலதரப்பட்டவை. முக்கியமாக ஏற்றுமதியான பொருள்கள் மிளகு. தொடுசுவைகள், மசாலை வஸ்துக்கள், வெட்டிவேர், வாசனைத்திரவியங்கள், மருந்து வகைகள், கோமேதகம், முத்து, வைரம், நீலமணி, யானைத் தந்தம், பட்டு, ஆமையோடு முதலியன. முதலாம் நூற் றாண்டில் தென்னிந்தியாவோடு வியாபாரம் அதிகமாய் நடை

பெற்று வந்ததென்பதற்கு அங்கே மிகுதியாகக் காணப்படும் ரோம நாணயங்களே போதிய சான்றாகும். படிப்படியாக ரோம வியாபாரிகள் குடியேறியிருந்த இடங்கள் சென்னை மாகாணத்தில் இருந்தன என்பதற்கு சந்தேகமே இல்லை. முசிரியிலுள்ள பியூடிங்கர் பீடங்கள் அகஸ்துவினுடைய கோவிலைக் குறிக்கின்றன. காவேரி நதியின் முகத்துவாரத்தில் யவனர்களுடைய (கிரேக்கர்) குடியேற்ற பூமி இருந்தது. மதுரை ஜில்லாவில் வசித்து வந்த யவன (கிரேக்க) ஜனங்களைச் சந்தித்ததாக தாலமி கூறுகிறார். அங்கு காணப்பட்ட நாணயங்களும் அதையே குறிக்கின்றன. ரோம வீரர்களும் வீரமுள்ள யவனர்களும் யுத்த ஆயுதங்களை அணிந்து சுதேச மன்னர்களின் மெய்க்காப்பாளர்களாய் இருந்தார்களென்று தமிழ் நூல்களில் கூறப்படுகிறது. “கடிமதில்வாயில் காவலிற் சிறந்த வடல்வாள் யவனர்.” (சிலப்பதிகாரம்). நெல்கிந்தாவைத்தாண்டி பெரிப்ளஸ் நூலாசிரியர் போகவில்லை. தன் காலத்து அநேக இந்திய வியாபாரிகளைப்போல இவரும் கரையோரமாகவே அரபிக்கரை, பாரசீக வளைகுடா, மெக்ரான் வழியாக சிந்து நதியின் முகத்துவாரம், பிறகு இந்தியாவின் கீழ் பாகத்தில் கொச்சிவரைக்கும் பிரயாணம் செய்திருக்கிறார். இவை அவருடைய சொந்த அனுபவத்தில் இருந்து எழுதப்பட்டன. நெல்கிந்தாவில் அவர் தன் சரக்குகளை விற்று, மிளகு, கருவாப்பட்டை, பட்டு, மஸ்லின், ஒன்றிரண்டு பெட்டிகள் நிறைய முத்து, நீலமணி, ஆமையோடு இவற்றை கப்பலில் ஏற்றிக்கொண்டு பாய்மரங்களை விரித்து செங்கடலுக்குப் போகும் தன் நீண்ட பிரயாணத்தைத்

துவங்க மார்கழி மாதத்தில் வீசும் வடகிழக்குப்பருவக்காற்றிற் காகக்காத்திருந்தார். அவர் புறப்படுமுன் அங்கே தங்கியிருந்த மற்ற மாலுமிகளிடமிருந்து கங்கைவரை இந்தியாவின் கிழக்குக்கரையைப் பற்றி அநேக அரிய காரியங்களை தெரிந்து குறித்து வைத்திருக்கிறார். தன் பிரயாணத்தை தொடர்ந்து கன்னியாகுமரிவரை போனார். குமரி தேவி என்ற பெண் தெய்வம் அங்கு கோவில் கொண்டிருக்கிறது. அங்கு ஒரு கோயிலும் மடமும் உண்டு. அங்கு ஆண்களும் பெண்களும் தேவியின் போரல் தூயவாழ்க்கைக்கு தங்களை பிரதிஷ்டை செய்து கொள்ளுகிறார்கள். அங்கே அவர்கள் நீராடுவதும் உண்டு. இன்றும் அந்த புனித இடத்திற்குப் போகும் யாத்ரிகர்கள் இவ்விதம் செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. குமரி முனைக்கு அடுத்தாற்போல் சோழ மண்டலத்தை ஒட்டிய தற்போதைய கொங்கணக்கரை (கோரமண்டலம்) வருகிறது. அதின் துறைமுகம் காவேரி நதியின் முகத்துவாரத்திலுள்ள தாலமி குறிப்பிட்ட காமாரா — (போடுக — அதாவது புதுச்சேரி.) அழகிய நகரமென்று பொருள்படும் சுபட்டினம் சென்னை.) இங்கே முத்து, மஸ்லின் வியாபாரம் அதிகரித்திருக்கிறது. வங்காளத்தில் இருந்து கப்பல்கள் அடிக்கடி இங்கு வருவதுண்டு. யாத்ரிகர்கள் அங்கு காணப்படும் கட்டுமரங்கள் (கட்டுமரம் = ஒருவிததோணி) வியப்படைவதுண்டு. ரோமாபுரியிலிருந்து வரும் சாக்குகளின் மிகுதியான பாகம் கொங்கணக் கரைக்குப் போவதுண்டு என்று அவர்கூறுகிறார்.

(From Inter-course betWeen India and the Western world by Rawbinson).

தென்னிந்தியாவின் நாகரீகம் ஆதிபூர்வீகமானது. ஏதேன், அரேபியா, பாரசிகருடா போக்கு வரத்து நாடாகும்.

சரித்திர ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்த மட்டும் பூர்வீக சம்பந்தம் எகிப்து மார்க்கமாக கிரேக்கர்களோடும், ரோமர்களோடும் தமிழ் மக்களுக்கிருந்திருந்தது என்று தான் சொல்லவேண்டும். அகுஸ்து ராயன் கி. மு. 30 எகிப்து தேசத்தை ஜெயித்தான். அதன் பிறகு தமிழ் நாட்டுக்கு ரோமரோடு நேர் சம்பந்தம். பாண்டிய ராஜன் ஒருவன் அகுஸ்து ராயனுக்கு ஸ்தானாதிபதிகளை அனுப்பினதாக சரித்திரம் கூறுகிறது.

ஏற்றுமதிகள் :— பஞ்சு வஸ்திரங்கள், மஸ்லீன், யானைகள், குரங்குகள், மயில்கள், கிளிகள், நல்லெண்ணெய், முத்துகள், தேக்குமரம், வாசனைத்திரவியங்கள்.

தென்னிந்தியாவில் ரோம நாணயங்கள் வெட்டி எடுக்கப்பட்டிருக்கின்றன. ரோமர் தங்கள் நாணயங்களைக்கொண்டு வந்து கொடுத்துவிட்டு இங்கிருந்து சாமான்கள் வாங்கிச் சென்றனர். ரோம நாணயங்கள் ஏராளமாய் இந்தியாவுக்கு வந்தன. இதைக் குறித்து திபேரியு சக்ரவர்த்தி சீர்திருத்தத்தை எங்கே தொடங்கலாம்? நமது பெண்களின் வீண் டம்பத்தைக் குறித்து என்ன் சொல்லுவேன்? முக்கியமாக பொன் ஆபரணங்கள் நகைகளுக்காக நம்முடைய ரோமர் பணம் அந்நிய நாட்டுக்குச் செல்வதினால் நாம் நஷ்டம் அடைகிறோம், என்று தன் சொந்த சட்டசபைக்கு எழுதி

முறையிடுகிறான். பிளினி என்ற ரோமதேசாதிபதி வியாபாரத்தின் மூலமாய் ரோமரிடத்திலிருந்து இத்தியாவுக்கு 1½ கோடி ரூபாய் ஓர் வருஷத்தில் போய்விடுவதாகச் சொல்லுகிறார். மெல்லிய பட்டும் மேல் நாட்டுக்கு ஏற்றுமதி ஆயிற்று.

## சாசனங்கள்.

கல்வெட்டுகள்:-

1. வேள்விக்குடி சாசனம் :-பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி என்பவன் பரிசு கொடுத்தது.

2. களப்பிரர்காலம்வரையில் பரிசு பெற்றவர்கள் வேள்விக்குடி கிராமத்தைச் சொந்தமாக அநுபவித்தார்கள்.

3. களப்பிரருக்குப்பின் கடுங்கோன் பாண்டியன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றினான்.

4. கடுங்கோனின் பேரன் செங்கோற் சேந்தன்.

5. பெரியசின்னமனூர் செம்புத்தகடுகள் பாண்டியர்கள் தலையாலங்காலம் போரில் வென்றார்கள்

சங்கத்தை ஏற்படுத்தியிருந்தார்கள், பாரதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தார்கள் என்பதை இச்சாசனம் கூறுகிறது.

பிரிஹிர்த செம்புச்சாசனங்களை மூன்றுபிரிவாகப் பிரிக்கலாம் :

1. மாயுதவேளாளித் தட்டு. 2. கியூரத் தட்டு. 3. பிரிட்டிஷ் காட்சிசாலையில் இருக்கும் தட்டு.

சின்னமனூர் செம்புத்தகடு எழுத்துச் சாசனங்களும் வேள்விக்குடி தன்கொடை சாசனங்களும் பாண்டிய மன்னர் ஆதிச் சரித்திரங்களும் நல்ல ஆதாரம். சென்னை பொருட் காட்சிச்சாலையில் ஜதிலவர்மன் தகடுகளிருக்கின்றன. மதுரை சமீபத்திலுள்ள யானைமலையென்றயிடத்தில் கண்டுப்பிடிக்கப் பட்ட கல் வெட்டெழுத்துக்களில் 'சக்கலி ஆண்டுகள்' என்ற காலக் குறிப்புகள் இருப்பதால் மேற்கூறிய செம்புச் சாசனங்கள், மதுரை மன்னவர்கள் அரசாண்ட காலத்ததைக் குறிப்பிடுபவைகள். (சர்க்கார் வெட்டெழுத்து அறிவிப்புக்கள் 1907–1908.)

கி. மு. 30ல் மகா சக்கரவர்த்தியாகிய அசோகன் செய்த விளம்பரங்கள் அடங்கிய கல் வெட்டெழுத்துக்கள் இருக்கின்றன. அவன் செய்த இரண்டாவது விளம்பரத்தின் மூலமாய் சோழ ராஜ்ஜியம் அசோகன் மன்னன் ஆளுகைக்கு கீழ் படியவில்லையென்று அறிகிறோம். பதிமூன்றாவது விளம் பரம் தமிழ் மக்கள் புத்தமத போதகங்களை மதிப்புடன் எண்ணுவதாகத் தெரிவிக்கிறது.

ஆறாவது நூற்றாண்டில் தமிழ் நாட்டில் கற்களினால் ஞாபகச் சின்னங்களும் தெய்வாலயத்தில் அமைக்கப்பட்டன. சிவன் கோயில்கள், விஷ்ணு கோயில், பிரம்மாவின் ஆலயங்கள்

தென்னிந்தியாவில் எழும்பின, பல்லவ அரசர்கள் சமஸ்கிருத பாஷையை மிகவும் ஆதரித்து வந்தார்கள். இதற்கு முன்னிருந்த சாசனங்கள் செம்பில்இருந்தன. இதற்குப்பின் கற்சாசனங்கள் உண்டாயின. இச் சாசனங்கள் பல்லவ ராஜ்யத்தில் பல இடங்களில் பார்க்கலாம். ஆலயமாளிகையுமுண்டு. பொன், நிலம், வைதீக அல்லது லௌகிக கல்விக்காகவும், இன்னும் வேறு காரணத்தின் நிமித்தம் பெரியவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஈவுகளையும் பற்றி இச்சாசனங்களில் பார்க்கலாம். இவற்றில் கொடுத்த மன்னனின்பெயர்காலம் முதலியவை கூறப்பட்டிருக்கிறன. சாளுக்கியர், பாண்டியர் ராட்சஷதக் கர்த்தர் கடம்பர், பாணர், முத்தரயர் இப்பேர்ப்பட்ட இக்காலத்தில் ஆண்ட மன்னர்கள் வைத்துப் போயிருக்கும் சாசனங்கள் மூலமாயும் பல்லவர்களைப் பற்றி அறியலாம். காஞ்சிபுறத்திலுள்ள கைலாசநாதர் ஆலயத்திலும், தென்னாற்காடு, செங்கல்பட்டு மகாபலிபுறத்துக் குகை ஆலயங்களிலும் பல்லவ சாசனங்கள் பலவுண்டு. இவைகள் முக்கியமாக மகேஸ்வா வர்மன் காலத்தில் உள்ளவைகள்.

அசோக அரசன் ஆண்ட காலத்தில் அவர் தமது பிரஜைகளுக்கு வெளியிட்ட கல் வெட்டு அறிவிப்புகளில் சேர, சோழ, பாண்டிய நாடுகளை தமது ராஜ்ஜியத்தில் எல்லை நாடுகளாக கூறியிருக்கிறார். அசோகன் புத்த வைராக்கிய முள்ளவர். அவருடைய மகன் மாகிகிதனும் சகோதரியும் தென் நாடுகள் வந்து இலங்கை மட்டும் சென்று புத்தமதத்தைப் பிரசாரம் செய்ததாக சொல்லப்பட்டு வருகிறது. தென்

இந்தியாவில் நம் முன்னோர்கள் கிறிஸ்து பிறந்த காலத்தில் புத்தமார்க்கத்தினராய் இருந்தார்கள் என்று சொல்வதற்கு ஆதி தமிழ் நூற்களில் ஆதாரங்கள் உண்டு.

## தமிழ் மக்கள் யாவர்?

ஆதி பூமி சாஸ்திர ஆராய்ச்சியாளர் தென்இந்தியா, ஆபிரிக்கா, இலங்கை, சாவகம், சுமத்திரா போன்ற கீழ் திசைத் தீவுகள், ஆஸ்திரேலியா, எல்லாம் ஒருங்காய் நிலத்தால் இணைக்கப்பட்டிருந்திருக்க வேண்டுமென்று யூகிக்கிறார்கள். ஆதி மக்கள் எல்லோரும் ஒரே இனத்தினர் என்பதற்கு வேண்டிய ஆதாரங்களுண்டு. கன்னியாகுமரிக்குத் தெற்கே குமரி நாடு என்ற பாகமும் இருந்ததாம். இப்படி இணைக்கப் பட்டிருந்த நாவலம் அல்லது லெமூரியா பூமியின் நடுவே மேரு இருந்ததாம். இலங்கை ஆதியில் தமிழ் நாட்டுடன் இணைக்கப்பட்டு ஒன்றாயிருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை.

மேருநடுநாடி மிக்கிடைபிங்கலை
கூடும்மலாவிலங்கைக் குறியுஞ்
சாருந்திலை வனத்தணமாம லையத்து
டேறுஞ் சுழுனையிவை சிவபூமியே.

திருமந்திர அடிகள்.

தென்னாடு சிவபூமி என்றழைக்கப்பட்டிருக்கிறது. ஆதியில் இந்தியாவின் வடபாகமாகிய இமயமலைப் பாகங்கள் கடலாக இருந்ததாகவும் நாவலந்தீவு என்றழைக்கப்பட்ட

தென்பகுதி கடுந்தரையாக இருந்த தாகவும் எண்ணப்படுகிறது. மெகஸ்தனீஸ் எனும் கிரேக்க எழுத்தாளர் நமது நாட்டில் பெண்கள் அரசு புரிந்ததாகக் கூறுகிருர். தமிழ் மக்களின் ஆதி உற்பத்தி என்ன? தமிழர் தென் இந்தியாவின் ஆதிக் குடிகளே என்பதுதான் தற்காலத்தில் பாண்டித்திய மடைந்த சகல ஆராய்ச்சியாளரின் உறுதியான கோட்பாடு. தமிழர் வேறெங்கிருந்தும் தென் இந்தியாவுக்கு வந்தவர் களல்ல. ஆனால் இவர்களே இந்த நாட்டின் ஆதிவாசிகள். தமிழ்க்கலை நாகரீகம் தெற்கே இருந்து வடக்கே பரவியிருந்தது என்பதற்கு பல புதிய உறுதியான ஆதாரங்களை ஆராய்ச்சி யாளர் கண்டு பிடித்திருக்கிருர்கள். அசீரியா, சுமேரியா, பாபிலோன், முதலிய நாடுகள் மட்டும் தமிழரின் நாகரீகம் பரவிற்று. தென்னிந்திய ஆலயங்களின் அமைப்பும் பூர்விக அசீரியா நாட்டினர் கட்டிடங்களும் சிற்ப ஒற்றுமை காட்டு கின்றன. தாமரை மொட்டு, மலர்போன்ற சித்திரம் பார்க் கலாம். பாபிலோனிலும் கிழக்கு இந்தியத் தீவுகளிலும் சங்கு வாத்தியங்கள் முத்து ஜோடிப்புகள் இருப்பவையும் இதற்கு ஆதாரம். தென்னிந்தியா எழுத்துகளுக்கும் சிந்து, சுமேரியர் எழுத்துகளுக்கும் சில ஒற்றுமைகள் காணப்படுகின்றன. தென் இந்திய நாகரீகம் சிந்து வாயலாக சுமேரியா தெற்கு பாபிலோன் நாடுகள் சென்றிருக்கலாம்.

தென் இந்தியாவிலிருந்த மக்களே மத்திய இந்தியா கங்கை யமுனை பிராந்தியங்கள் சென்று பூர்வீக காலத்தில் குடியேறினர்களென்பது தற்கால ஆராய்ச்சியாளர் துணிபு.

தற்காலத்தில் பக்கிஸ்தானம் என்று இந்தியாவில் இருந்து பிரிக்கப்பட்டிருக்கும் சிந்துவில் தோண்டப்பட்டு கண்டுபிடிக்கப்பட்டிருக்கிற ஆரப்பா மகஞ்சதாரோ நகரங்கள், தமிழ் நாட்டின் செல்வாக்கு எத்துணையாக அக்காலத்தில் வடக்கே பாவி எட்டி மக்களை வசப்படுத்திருக்கிறதென்பதை மிகத் தெளிவாக்குகின்றன. இக்காலம் கி. மு. 3500 போலிருக்கலாமென்று கருதப்படுகிறது. சிந்துநதி சமீபமாக இந்த நகரங்கள் வடிவாக அமைக்கப்பட்டிருக்கின்றன. மேல் மாடிகளுடைய வீடுகள், கிணறுகள் நீர் ஓடும் கால்வாய்கள், நல்ல வீதிகள் இருந்ததாகக்கண்டு பிடித்திருக்கிறார்கள். வில், அம்பு, செம்பு வெண்கலக் கோடாரிகள், ஈட்டிகள், சவாகன் கத்திகள் ஆதிகாலத்தில் உபயோகிக்கப்பட்டதாகத்தெரிகிறது அழகான மண்டபங்கள் இருந்தன. அம்மன், சூரியன், ரிஷபம், மரம் முதலியன அவர்கள் வணங்கினதாகப் பார்க்கிறோம். பல விதங்களிலும் இந்த நாகரீகம் நமது தென் நாட்டிலிருந்து வடக்கே பரவிய நாகரீகமே என்று ஆராய்ச்சியாளர் கூறுகிறார்கள்.

ஆரியர் வடமேற்கேயிருந்து இந்தியாவின் வடபாகங்களுக்கு முதலில் வர ஆரம்பித்தார்கள். பின்காலத்தில் இவர்கள் தென் இந்தியாவிலும் குடியேறி தென்னாட்டு மக்களோடு விவாகம் செய்து கலந்துகொண்டார்கள். ஆரிய மொழியாகிய சமஸ்கிருதம் அல்லது வடமொழி தமிழோடு நெருங்கிக் கலந்து ஒன்றையொன்று வசப்படுத்தி விட்டது. இது கிறிஸ்துவுக்கு முந்தின காலங்களிலேயே நடந்த காரியம்.

வடகலையும், தென்கலையும் படிப்படியாக ஒன்றிலிருந்தொன்றை பிரிக்கக்கூடாத பிரகாரமாகக் கலந்து விட்டது. எனினும் தமிழ் வடமொழி உதவியின்றிதானே தனியே நிற்க வன்மையுள்ளதும், பற்பல ஒலிகள் கருத்துகளை உச்சரித்து வெளிப்படுத்தக்கூடிய தன்மையுள்ளதுமானது.

தமிழ் என்ற பதம் இனிமையென்ற அர்த்தங் கொள்ளும் "இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்" பிங்கலம்.

தம் + இல் = தன்னைப்போல் வேறு இல்லை, தன்னிகரில்லாதது என்றும் பொருள்படும் என்பாருமுண்டு. தென் + மொழி = தெம்மொழி, தமிழ் என்றதிரிபு என்பாருமுண்டு. தமிழ்மொழியை ஞாயிறு அல்லது சூரியபகவானைப் போல் பாவித்து மக்கள் வந்திருந்தார்கள்.

சந்தனமும் புனுகுந்தண் பவனி நீருடனே
கொங்கலர் சண்பகமுங் கொண்டு வணங்கினேன்
வந்தடிடும் வல்வினை நோய் மாற்றுவதுன்பதமே
செந்தமிழ் காவே சிவ சூரியனே (பழையபாடல்.)

தமிழ் மொழியை எழுதுவதற்கு எழுத்து என்றும் அம்மொழியாலியற்றப்பட்ட நூலுக்குச் சுவடி என்றும் பெயர்.

மனிதன் தன் மனத்திலுள்ளதை வெளிப்படுத்தும் வழிகள் பல உண்டு. இப்படி வெளிப்படுத்தும் உபகரணமே மொழி. பொதுவாக உள் கருத்தை வெளியாக்க நூல்

வளையிலுள்ள மெல்லிய தசைநார்கள் தங்கள் சுருங்கல் நீளல் முதலிய பலவித அசைவுகளினாலே காற்றை பலமாக தங்களிடையே செல்லச் செய்து பலவித தொனிகளை மொழியாக மாற்றுகின்றன. எனினும் முகக்குறி, தனி உருப்புகளை பலவிதமாக அசைத்தல், கண் சிமிட்டல், தலை அசைத்தல், முதலிய உடல்நிலை இப்படி பலவிதமாகவும் மனிதன் தன் உள்கருத்தை வெளிப்படுத்துவதுண்டு. இதிலும் தமிழனுக்குத் தனித்தனி போக்குண்டு.

மனிதன் உடல் வளர்ச்சி, சமுதாய வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, கலை நாகரீக வளர்ச்சி இப்படி பல காரியங்களில் மானிடவர்க்கம் விர்த்தி அடைந்து கொண்டுபோவதுபோல் மொழியும் வளர்ச்சி அடைகிறது.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த தமிழ் எழுத்துக்கு வட்டெழுத்து என்று பெயர். இந்த வட்டெழுத்துக்கு கோல் எழுத்து, கண் எழுத்து என்றிப்படி பூர்வீக நூல்கள் பெயரிட்டன. சித்திரம்போல் அவையிருந்ததால் இப்பெயர்கள் வந்தன. ஆதியெழுத்துகள் ஒலி ஓவியமுறையாக இருந்ததென்பதற்கு தற்கால சீனதேச எழுத்துக்கள் ஒரு நல்ல உதாரணம். சீனதேச எழுத்துகளாகிய ஒரு நவீன தற்காலஎழுத்து ஒரு தொனியைக் குறிப்பிடும். ஓவியஎழுத்து ஒரு உட்கருத்தை ஒரே எழுத்தில் காட்டும். சிறு கோடுகளினால் தலை உடல் இருகால்கள் காட்டி சீனமொழி மனிதனை குறிப்பிடும். தமிழ் வட்டெழுத்து கி. பி. எட்டாம் நூற்றாண்டுகள் மட்டுமுள்ள கல் வெட்டெழுத்துகளில்

காண்கிறோம். இதுதான் தமிழரின் பழைய எழுத்து. வட இந்தியா மட்டும் தமிழ்க்கலை நாகரீகம் பரவி இருந்தது என்பதுதான் தற்கால ஆராச்சியாளர் துணிபு. சிந்து நாட்டில் வெட்டிக் கண்டுபிடிக்கப் பட்டிருக்கும் மொகஞ்சதாரோ என்ற இடத்தில் இவ்வித திராவிட நாகரீகம் காட்டும் ஓவிய எழுத்துக்களுள்ள சாசனங்களில் தமிழ் காணப்படுகிறது. திராவிட மொழிகளில் தமிழ் பூர்வீகமானதென்றறியலாம்.

பின் காலத்தில் வடமொழி தென்னாட்டில் பரவ ஆரம்பித்தது. இந்த வடமொழி நிரம்பிய கிரந்த எழுத்து தமிழ் நாட்டில் பரவிற்று. நவீன நாகரீகம் மக்களின் மனதைக் கவருகிறது இயற்கையல்லவோ? முஸ்லீம்கள் ஆண்டகாலத்தில் உருது மொழியும் தற்காலத்தில் ஆங்கில மொழி மோகமும் தமிழ் மக்களை எவ்வாறு வசப்படுத்தி தமிழ் மொழியைக் கலக்கி விட்டதென்று விவரிக்க அவசியமில்லை. தமிழ் நாட்டிலும் கொச்சி திருவாங்கூர் சமஸ்தானங்களிலும் உள்ள கல்வெட்டு சாசனங்களில் சிலவற்றில் வட்டெழுத்தும் மற்றவற்றில் கிரந்தெழுத்துக்களுமிருக்கின்றன.

மகா கீர்த்தி பெற்ற வட இந்திய அசோக சக்ரவர்த்தி காலத்தில் புத்த மார்க்கம் தென் இந்தியாவில் பரவி இருந்தது. புத்தர்கள் பிராமி என்ற எழுத்துக்களை தென் இந்தியாவில் பரவச் செய்தார்கள். பல்லவ மன்னர்கள் தமிழ் நாட்டை ஆண்ட காலத்தில் இந்த பிராமி எழுத்து எங்கும் பரவிற்று. இதன் காலம் கி. பி. 650 மட்டுமே. தொண்டை மண்ட

லத்திலும், சோழ ராஜ்யத்திலும், பல்லவ ஏகாதிபத்தியம் பரவி இருந்ததால் இங்குதான் அதிகம் பார்க்கக்கூடும். வட்டெழுத்து குறைவு. ஆனால் பாண்டிய நாட்டிலும், சேர நாட்டிலும் வட்டெழுத்துக்களே பிரதானம். கிரந்த எழுத்துக்கள் குறைவு.

கேரளநாடு தமிழ்நாட்டின் ஒருபாகமாகவே இருந்தது. தமிழ் மன்னர்கள் மலேயாள நாட்டை ஆண்டகாலமுண்டு. மலேயாளம் தமிழ் இரண்டும் ஒரே மொழியாக பல நூற்றூண்டுகளாயிருந்தன. பின் காலத்திலே தனித்தனி மொழிகளாகப் பிரிந்துவிட்டன. இதற்கு நல்ல சான்று திசைகளுக்கு இருமொழிகளும் உபயோகிக்கும் பதங்களே. தமிழ் நாட்டிற்கு கிழக்கே பூமி இறக்கமாகக் கீழே சென்று கடல் மட்டு மெட்டுகிறது. இதனுல் கீழ் என்ற அர்த்தமே கொள்ளும் கிழக்கு என்ற பதம் உற்பத்தியாயிற்று. தமிழ் நாட்டிற்கு மேற்கே மிக உயர்ந்த மலேதொடர்களிருக்கின்றன. இதனுல் மேல் உயரமானது என்றர்த்தங்கொள்ளும் மேற்கு என்றபதம் உற்பத்தியாயிற்று. மலேயாளநாட்டிலோ இதற்கு நேர் எதிராக கிழக்கே உயர்ந்த மலேத்தொடர்பும், மேற்கே கீழே இறங்கி கடல் எட்டுகிற தரை இருந்தாலும் தமிழ் மக்கள் மாதிரியே அவர்கள் அதே அர்த்தத்தில் மேற்கு கிழக்கு என்கிறுர்கள். இதனுல் அவர்கள் பூர்வீகததில் தமிழ் மக்கள் ஒரே மொழி பேசினவர்களே என்றறியலாம். தற்கால இலக்கிய மலேயாளம் வடமொழியிலிருந்து ஏராளமாக கடன் வாங்கி வடமொழி மயமாக மாறிவருகிறது.

சம்பாஷணை முறையாக தமிழன் சாதாரணமாகப் பேசுவதை கொடுந்தமிழ் என்றும் இலக்கியத் தமிழை செந்தமிழ் என்றும் அழைப்பதுண்டு.

மலையாளத்திலும் பூர்வீக காலத்தில் தமிழ்மொழியே வழங்கினதென்பதற்கு பின்னே நான் கூறுவது ஒரு திடமான சான்றாகும். கொச்சி நாட்டிலுள்ள கடுங்கல்லூரில் (Cranganore) கிறிஸ்துவிற்குபின் 72-ம் ஆண்டில் பலஸ்தீனாவிலிருந்து யூதர்கள் குடியேறினதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறேன். இந்த யூதருக்கு பழைய காலத்தில் அங்கு ஆண்ட ஒரு மன்னன் கொடுத்த நன்கொடை பத்திரம் அடங்கிய தகடுகள் இன்னும்மட்டும் கொச்சியிலுள்ள ஒரு பெரியாரிடமிருக்கிறது. அது தமிழில் எழுதப்பட்டிருக்கிறது. மலையாளம் என்று வேறு மொழியாக அவர்கள் மொழிபிரித்து மலையாளமொழி ஏற்படுமுன்னே அப்படி தமிழில் எழுதப் பட்டது. அக்காலத்தில் தமிழ் நாடெங்கும் தென்மேற்கிலுள்ள மலையாள நாட்டிலும் வழங்கப்பட்ட பூர்வீக தமிழ் வட்டெழுத்திலேயே இந்த சாசனம் எழுதப்பட்டிருக்கிறது. இதுவே அக்காலத்தில் இப்போதும் மலையாளபூமி என்று அழைக்கப்படும் இடங்களிலும் தமிழ் நாடெங்கும் சாதாரணமாக எங்கும் வழங்கிய தமிழ் வட்டெழுத்து. பின்காலத்தில் தான் இவை இரண்டுமொழிகளாகப் பிரிந்துவிட்டன. மலையாளத்தார் அவ்வட்டெழுத்தை விட்டுவிட்டார்கள். தமிழ் எழுத்தும் தற்காலத்தில் சற்று மாறிவிட்டது. இந்த ராஜாக்கள் இவ்விதமாக நன்கொடைசாசனம் கொடுத்தார்கள்.

(From the Indian antiquary Vol III-1874).

மொழியில் வழக்கு மொழி, செய்யுள் மொழி என இருபாகங்களுண்டு. வழக்கு அதாவது சாதாரணமாக நாம் வழங்கும் போக்கில் வசனம் அல்லது எழுத்து நடை, உரை அல்லது பேச்சு நடை என்ற இருவகையுண்டு. இதனால் தமிழன் எழுதும் போக்குக்கும் பேசும் போக்குக்கும் மிக வித்தியாசம் ஏற்பட்டிருக்கிறது.

ஒருவன் உள்ளத்திலிருந்து இன்ப துன்ப சமயங்களில் உண்டாகும் கிளர்ச்சி தூண்டுதல்களினால், மொழியின் தொனி பலவிதமாக வளர்ந்து நீண்டு, அலை அலைகளாக அல்லது அம்ச அம்சங்களாகப் பிரிந்து ஓடிப் பாவி, இனியதாகமாறும் போது அது பாடல்களாகிவிடுகின்றன. இவ்வித ஓசையை மட்டுப் படுத்தி அளந்து ஒருகட்டு திட்டத்தினிடையே யாப்பிலக் கணமுறையாகச் செய்வதே செய்யுள். செய்யுள் என்றால் செய்யப்பட்டது. வசனநடையில் அதிகம் விவரித்துக் கூறுவதை செய்யுள் மிகச் சுருக்கமாகச் சொல்லி விடும். பழைய காலத்தில் தற்காலத்தில்போல் ஏராளமான காகிதம் போன்ற எழுதுவதற்கு உபகரணங்கள் கிடையாது. நமது நாட்டில் பனை ஓலை ஏடுகளிலேயே எழுத்தாணியால் எழுதினார்கள். இதனால் எழுதுவதைச் சுருக்கமாக்குவதே அவர்களுக்குப் பேருதவி. இதனால்தான் முக்காலத்து நூல்கள் செய்யுள் போக்காய் எழுதப்பட்டதென்பதற்கு இது ஒரு முக்கிய காரணமென்னலாம்.

சில தமிழ் பதங்களின் உற்பத்தி.

வாரங்களில் ஏழு நாட்களின் பெயர்கள் எப்படி வந்தன? வானமண்டலங்கள் நக்ஷத்திரங்கள் பெயரால்

ஒவை அழைக்கப்பட்டன. அந்தந்த நாளின் முதல் மணி நேரத்தை ஆளும் மண்டலம் நக்ஷத்திரத்தின் பெயரால் அந்த நாள் அழைக்கப்பட்டது.

ஞாயிறு = சூரியன் (Sun, Sol).

திங்கள் = சந்திரன் (Moon).

செவ்வாய் = செவ்வாய் மண்டலம் (Mars).

புதன் = புதன் நக்ஷத்திரம் நவக்கிரஹங்களிலொன்று, சந்திரன் மகன் (Mercury).

வியாழன் = வியாழன் மண்டலம் (Jupiter).

வெள்ளி = விடி வெள்ளி நக்ஷத்திரம் = சுக்கிரன் (Venus).

சனி = சனியென்றகிரஹகம் (Saturn).

வீடு என்ற பதம் சாதாரணமாக நமது இல்லத்தைக் குறிக்க உபயோகிக்கிறோம். ஆனால் அதற்கு மிக உன்னதமான அர்த்தமுண்டு. வீடு என்பது விடுதலையைக்குறிக்கும். முக்தி அல்லது மோக்ஷம் என்ற வடமொழியில் சொல்லப்படும் உன்னத விடுதலைநிலையை யொட்டி தமிழ்மொழியில் வீடு எனப்பெறும். அறம் பொருள் இன்பம் வீடு என்பதில் வீடு இந்த மண்ணாசை பொன்னாசை பெண்ணாசையிலிருந்து விடுதலை பெற்று ஆத்மீக பரமநிலை ஒருவனடையும் உன்னத ஸ்திதியைக் குறிப்பிடும்.

---

## தமிழ் நூற்கள்.

பாண்டிய நாட்டின் அரசியலுக்கு பிரதம நகரமான மதுரையில் மூன்று தமிழ் சங்கங்கள் இருந்தன. முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம். முதல் இரண்டு சங்கங்களைப்பற்றி அதிகமாக நமக்குத் தெரியாது. இப்பொழுதிருக்கிற ஆதி நூற்கள் கடைச் சங்க காலத்தைச் சேர்ந்தவைதான். அதாவது கி. பி. முதல் ஐந்துநூற்றாண்டு காலம். பூர்வீக காவியங்களில் முக்கியமான சில பின் குறிப்பிட்டவை :—

1. தொல்காப்பியம்.
2. சிலப்பதிகாரம்.
3. மணிமேகலை.
4. அகநானூறு.
5. புறநானூறு.
6. பதிற்றுப்பத்து.
7. பரிபாடல்.
8. திருக்குறள்.

சங்க காலத்துக்கு முன் காலத்தில் கடவுளைப்பற்றி தமிழருக்குள் இருந்த அறிவு எவ்வளவு தூரம் இருந்தது என்று தெரியாது. ஆனால் கடவுளை ஒரு ஆவி என்று எண்ணி வந்ததாகத் தோன்றுகிறது. பொதுவாக பூர்வீகத் தமிழர் உலகத்தின் தோற்றங்களில் தங்கள் கண்களுக்கு முன்னாக இருந்தவைகளே முக்கியப்படுத்தி, ஆனந்தித்துக் களிப்புடன் பாடி வந்தார்கள். நாக வணக்கம் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். இந்த நாக வணக்கம் பின் காலத்தில்

முருகன் வணக்கமாயும் ஆரிய கலப்பு வந்தபின் சுப்பிரமணியன் என்பதாகவும் இப்படி மாறி வந்தது. மா வணக்கம் சிவன் வணக்கமாக மாறியதாம். மலை நாட்டில் கடவுளுக்குச் செய்யோன் (சிவம்பு) என்று பெயர். சிவன் என்ற பதம் சிவப்பு என்பதின் திரிபு என்பாருமுண்டு. முல்லை நாட்டுக் கடவுளுக்கு மய்யொன் (கறுத்தான்) என்று பெயர். கடவுள் நன்ருக ஆடுகிறவன். நெய்தல் கடவுள் கறுப்பு — கடலாண்டவன். மருதத்தில் நாகரீகமும் காதலும் அதிக மாகும்.

## தொல்காப்பியம்.

தொல்காப்பியம் என்பது பழைய இலக்கண நூல், 1610 நூற்பாக்கள் அடங்கியது. இது சரித்திரசம்பந்தமான தல்ல. மூன்று இலக்கணத்தைப்பற்றி ஆசிரியர் சொல்லியிருக் கிறார். அந்த மூன்றின் பெயராவன. 1. எழுத்து இலக்கணம். 2. சொல் இலக்கணம். 3. பொருள் இலக்கணம். இந்த மூன்று இலக்கணமும் மூன்று அதிகாரமாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. அதாவது (1) எழுத்து இலக்கணம் எழுத்து அதிகாரம் என்றும், (2) சொல் இலக்கணம் சொல்லதிகாரம் என்றும், (3) பொருள் இலக்கணம் பொருள் அதிகாரம் என்றும் மூவகையாகப் பிரிக்கப்பட்டு இருக்கிறது. இதில் முதல் இரண்டு அதிகாரங்கள் அவ்வளவு விசேஷித்தவையல்ல, மூன்றாவது அதிகாரம் அதாவது பொருள் அதிகாரம் என்பதுதான் சரித்திர ஆராய்ச்சியாளருக்கு அதிக விசேஷமானது.

தொல்காப்பியம் என்றால் அர்த்தம் என்ன? தொல் + காப்பு + இயம். தொல் = பழமை, காப்பு = பாதுகாத்தல், இயைபு = நூல், பழமையைப் பாதுகாக்கும் நூல் என்றர்த்தமாகும். தொல்காப்பியம் என்ற பெயர் வழங்கப்பட்டதின் காரணமிதுவே. இந்த நூலின்காலம் இடைச்சங்க ஆரம்ப காலம் (கி. மு. 350 போல்) இடைச்சங்கம் இருந்த இடம் கபாடபுரம். இந்த நாடு தற்போதைய இந்து மகா சமுத்திரத்தில் ஒரு நாடாக இருந்தது. முன் காலத்தில் அது குமரி நாட்டில் இருந்தது என்று சொல்லு வார்கள். வால்மீகி தம் இராமாயணத்தில் (சமஸ்கிருதம்) இந்த கபாடபுரத்தைப்பற்றிப் புகழுகிறார். கி. மு. 300 வருஷங்களுக்கு முன் எப்படி கடல் இதை மூடிக் கொண்டது என்று இலங்கை சரித்திரத்திலிருந்து தெரிகிறது. இடைச் சங்க காலம் 2500 வருஷங்களுக்குமுன் இருந்த தாகத்தெரிகிறது. இந்த வால்மீகி ராமாயணம் 2300 வருஷங்களுக்குமுன் எழுதினது. தொல்காப்பியம் நிலந்தரு திருவிற்பாண்டியன் சபையில் அரங்கேறியது. அகஸ் தியருக்கு முன் புலவர்கள் அநேகம்பேர் இருந்தார்கள். அகஸ்தியருடைய மாணாக்கர்கள் அந்தகாலத்தில் இருந் தார்கள். அவர்களில் தொல்காப்பியர் செம்பூட்செய், வாமனர் பனம்பாரனர் முதலிய புலவர்கள் இருந்தார்கள். தொல் காப்பியத்திற்கு முன்னும் வேறு நூற்கள் இருந்திருக்க வேண்டும் என்பது நன்கு தெளிவாகிறது. எப்படியென்றால் தொல்காப்பியர் எழுதும்போது "என்பர்," "என்பார்கள்," "பெரியோர் சொல்லுவார்கள்" என்று எழுதியிருக்கிறார்.

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து,
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு, முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல் ;
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி,
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

(பனம்பாரனார்)

## பொருளதிகாரம்.

பொருளதிகாரத்தை இருவகையாகப் பிரிக்கலாம் :—

அதாவது. 1. அகப்பொருள். 2. புறப்பொருள். அகப்பொருள் என்பது இல்லற சம்பந்தமானது. புறப் பொருள் என்பது உலகியலைப் பற்றிச்சொல்லுகிறது.

மக்களுக்கு அவர்கள் தொழில்களால் பெயர் வைத் தார்களே யொழிய ஜாதியை ஒட்டி பெயர் வைக்கவேயில்லை.

1. அந்தணர் :— துறவிகள், சமயபோதனை செய்யும் பெரியார், உலகத்தொழிலில் ஈடுபடமாட்டார்கள்.

2. க்ஷத்திரியர் :— அல்லது அரசர் — அடக்கி ஆளுபவர்கள் போர்செய்பவர்கள்.

3. வணிகர் :— வைசியர், வியாபாரம் செய்பவர்கள்.

4. வேளாளர் :— உழவர்கள், வேளாண்மை செய்பவர்கள்.

ஆகையால் ஜாதியைப்பற்றி பிரிவினையில்லை. ஆனல் அந்த காலத்தில் அடிமைகள் இருந்திருக்கிருர்கள். இதுதான் தமிழ் நாட்டில் அக்காலத்தில் இருந்த குறை.

மணம் ஆனபிறகு கல்விக்காக மூன்று வருஷம் புருஷன் மனைவியை விட்டு பிரிந்து வெளிதேசங்களுக்கு போய் வருவான். அக்காலத்தில் கேள்வி படிப்புதான் விசேஷமாகயிருந்தது. ஆகையினல் "கற்றிலனாயினும் கேட்க" என்று திருவள்ளுவர் சொல்லியபடி அவர்கள் கேட்டுப் படிப்பதையே பிரதானமாக கொண்டார்கள். திரைகடல் ஓடியும் திரவியம் தேடு என்றாற் போல் அவர்கள் கப்பல் வியாபாரம் செய்து வந்தனர். ஓலை (ஏடு) களின்மூலமாய் எழுதிப்படித்தார்கள்.

மணம் :— மணம் மூன்றுவகை. (1) பெரியோர்கள் சம்பந்தப்பட்டு நடப்பது ஒன்று. (2) காதல் மணம், தாங்களே செய்வது ஒன்று. (3) களவு மணம் — அதனல் பாலிய மணம் இல்லையென்றுத் தெரிகிறது. "களவுங் கற்று மற"

களவு — பெற்றோர் அறியாமல் தலைவனும் தலைவியும் ஒழுகுதல்.

கற்றுமற — ஒரு தடவைச் செய்து பின் அடியோடு மறந்து விடு.

ஆதலால் மணம் செய்தபின் இவ்விதம் களவு ஒழுக்கம் வைத்திருத்தல் கூடாது, இரண்டாவது மணம் செய்தல் கூடாது என்பது இதனால் தெரிகிறது. பரத்தையர் வழக்கம் உண்டு என்பதும் தெரிகிறது. திருவள்ளுவர் பரத்தையர் வழக்கத்தைக் கண்டித்து பேசியிருக்கிறார். இதை எல்லாம் பார்த்து, கடைசியில் இந்த வாழ்க்கையில் முடிவாக துறவறத்தைப் பூண்டு ஆண்டவரின் திருப்பாதத்தை தேடுவதிலேயே அகப்பொருள் முடிவடைகிறது.

புறப்பொருள் — புறத்திணை :— அறம், பொருள் என்ற இந்த இரண்டைப்பற்றி சொல்லுவதை புறம் என்று சொல்லுவார்கள். உலகியல், உலகப்பொருள் இவைகள் எல்லாவற்றையும் கூறுவது புறப்பொருள். புறத்திணை ஏழுவகையாகப் பிரித்திருக்கிறார்கள்.

1. வெட்சித்திணை :— படை எடுத்து செல்வதற்கு முன்னே மாற்றாருடைய பசுக்களை கவர்ந்து வருதல். வெட்சிப்பூவை சூட்டிக்கொண்டு போவார்கள். அந்த அரசனும் பிறகு திரும்பி வந்து அதை மீட்டுக்கொண்டுச் செல்வான்.

2. வஞ்சித்திணை:— அடுத்தார்போல் பூமியின் மேல் ஆசைப்பட்டு படையெடுத்து செல்லுதல். அப்பொழுது வஞ்சிப்பூவை அணிந்துக்கொண்டு போவார்கள்.

3. உழிஞைத்திணை :— பிறகு மதிலை முற்றுகைச் செய்தல். அப்பொழுது உழிஞைபூவை போட்டுக்கொள்ளுவார்கள்.

4. தும்பைத்திணை :— கோட்டையை விட்டு போர்க்களத்தை ஏற்படுத்திக்கொண்டு போர் செய்தல். அப்பொழுது தும்பை பூ மாலையை அணிந்துக்கொள்ளுவார்கள்.

5. வாகைத்திணை :— ஒருவன் தோற்று ஒருவன் வெற்றிப் பெறுவான். அப்பொழுது வாகைமாலையை சூட்டிக் கொள்ளுவார்கள்.

6. காஞ்சித்திணை :— உலகம் நிலையில்லாதது என்பதை உணர்வது. என்றாகிலும் காலன் வருவான் என்று அறிந்து துறவம் பூண்டு கடவுளைத் தேடல்.

7. பாடாண்திணை :— அரசர் முதலியவர்களை எல்லாம் சிறப்பித்து பாடுதல். பாடகர்கள் பரிசு பெறுதல். இதில் கடவுள் வாழ்த்து அடங்கியிருக்கிறது.

பாண்டியனுக்கு வேம்புமாலை.
சோழனுக்கு ஆத்திப்பூ.
சேரனுக்கு பனம்பூ (போந்தை).

அக்காலத்தில் அநேக சிற்றரசர்களும் இருந்தார்கள். சிற்றரசர்களுக்கு குறு நில மன்னர் என்றுப் பெயர். எல்லாக்

குடிகளும் வீரர்களாயிருந்தார்கள். ஒற்றர்களும் (வேவு காரர்கள்) இருந்திருக்கிறார்கள். தூதுவர் இருந்திருக்கிறார்கள். வீரர்களில் போரில் வெற்றி பெற்றவர்களுக்கு ஏனாதி, காவிதி, என்ற சிறப்புப் பட்டங்கள் கொடுப்பதுண்டு. வீரர்களுக்கு ஊர்களையும் பரிசாகக் கொடுப்பதும் உண்டு. இப்படிப் பேர்பெற்ற வீரர்களோடு அரசன் உண்டு களித் திருப்பான். தமிழ்நாட்டின் வடக்கு எல்லையாகிய தடா என்ற இடமருகில் (சென்னைக்கு வடக்கே 45 மைல்) ஏ னா தி க ள் என்று மேற் கூறிய பெயருடைய மக்கள் இன்னும் வசிக்கிறார்கள். பழவேற்காடு ஏரி சமீபமான தடா என்பது தடாகம் என்பதின் திரிபாயிருக்கலாம்.

அரண் :— கோட்டை பாதுகாப்புக்கு அரண் என்றுப் பெயர். அதற்குள் அரண்மனை, மதில், அகழி, காவற்காடு, முதலியவைகள் சுற்றிலும் இருக்கும். இத்துடன் பலவகை யான வஞ்சனை வைப்பார்கள். பலவகையான முள்கள் தைப்பார்கள். ஆழமான அகழில் சுறாமீன்களும், முதலைகளும் வசிக்கும். மதிலில் இரு வகையுண்டு. புறமதில், அகமதில் என்று இருக்கும். புறமதிலில் பலவகையான பொறிகள் இருக்கும். மறைந்து அம்பு எய்வதற்கு ஞாயில் என்று பெயர் கதவு ஏழு சிப்பு என்பவற்றால் பாதுகாக்கப்பட்டது. இந்த வாயில் மதிலை யவனர் நன்றாக பாதுகாப்பார்களாம்.

பொறிகள் :— "விளைவிற்பொறி" — எப்போதும் அம்பு போடும், "கருவிரல் ஊகம்" — எப்போதும் பிடித்துக் கொண்டிருக்கும் குறங்கு, "கல்உமிழ்கவண்" — கல்லை

எறிந்துகொண்டிருக்கும், "வெண்ணெய்" — கொதித்துக் கொண்டிருக்கும் கொப்பரை, "கல்லிடு கோடை" — கூடையிலிருந்து கல் போய்க் கொண்டேயிருக்கும், "கை பெயர் ஊசி" — ஊசியால் சுவற்றிலிருந்து குத்தும், சென்றரிசிறல்" — பறவைகள் ஆணிபோல் உள்ள ஆயுதத்தால் குத்துமாம். "பன்றிப்பொறி" — பனைபொறி அடித்துக்கொண்டிருக்கும்,

மாண்ட வீரன் கல்லறைமேல் வீரனது பெயர் பட்டம் வெட்டிய "நடுகல்" நடுவார்கள். வீரர்களோடு அரசன் விருந்துண்பான்.

அரசாங்கம் :— வெள்ளணி. அரசன் பிறந்த நாளில் கொண்டாடும் விழா. அச்சமயம் கைதிகளை விடுவித்தல். தண்டனைகளை குறைத்தல். பட்டங்கள் சூடுதல் நடைபெறும். எல்லாரும் வெள்ளை ஆடையை மங்கலமாக அணிவார்கள்.

## எட்டுத் தொகை.

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு,
பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை
அகநானூறு, புறநானூறு.

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒற்ற பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம் புறம் என்று
இத்திறத்த எட்டுத்தொகை.

## பூர்வீக தமிழ்நாட்டுப் பிரிவுகள்.

ஐந்திணைகள் :— குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்.

1. குறிஞ்சி :— மலை நாடுகள்.
2. பாலை :— பாலை வனங்கள்.
3. முல்லை :— மலைச்சாரில் மாச்சோலையான காடுகள்.
4. மருதம் :— ஆற்றோரமுள்ள வயல் உண்டாவதற்கேற்ற நிலம்.
5. நெய்தல் :— கடலோரம்.

குறிஞ்சி :— குறிஞ்சியாகிய மலை நாட்டில் வசித்தோர் குகை வாசம் செய்தார்கள். கல்லினால் தங்களுக்கு வேண்டிய கருவிகளைச் செய்துகொண்டார்கள். அவர்களுடைய ஆகாரம் கிழங்கு, வேர்க்கிழங்கு, தேன். இதனால் இதற்கு கல்யுகம் (Stone Age) என்று பெயர் வந்தது. இவர்கள் மாமிசம் புசித்தார்கள். இதனால் வேடராய் இருந்தார்கள். மிருக பயத்தினாலும் அவைகளைக் கொன்றார்கள். குறவர்கள் இவ்வினத்தைச் சேர்ந்தவர்களே. மூங்கிலினாலும், காய்ந்த படர்களினாலும், வில், அம்பு செய்து கொண்டார்கள். மூங்கில் உரசும்போது நெருப்பு உண்டானதைப் பார்த்து அதை அபிவிருத்தி செய்தார்கள். வீடு கிடையாது.

பாலை :— இதிலிருந்தவர்கள் மறவர்கள். மறம் = வீரியம், ஆனால் அறம் என்பதற்கு மாறான கெடுதி என்ற அர்த்தமுமுண்டு! மறவர்கள் என்பதற்கு தைரியமுடையோர்

என்றும் துணிபுடையோர் என்று பெயர். கள்வர் என்றால் பலமுடையோர் என்று அர்த்தம். இவர்கள் துணிவுள்ளவர்கள். இதற்கு திருடர் என்றும் அர்த்தமுண்டு! இவர்கள் தெய்வம் காளி.

முல்லை :— மலைச்சார்பிலுள்ள காடு. முல்லை பிரதேசத்தில் மேய்ப்பவர்களாகிய இடையர் வசித்து வந்தார்கள். இவர்கள் நாயும், எருமைகளும் விசேஷமாக வைத்திருந்தார்கள். குறும்பர்களும் இவர்களைச் சேர்ந்தவர்களே கம்பளி நெய்வார்கள்.

மருதம் :— சமபூமி. இங்கிருந்தவர்கள் உழவர்கள். பயிரிட்டு ஜீவனம் செய்து வந்தார்கள். தானியவகைகளும், பழ வகைகளும் பயிரிட்டு வந்தார்கள். இவர்களுக்கு வெள்ளாளர் என்று பெயர். வெள்ளத்தை ஆளுபவர்கள் என்று அர்த்தங்கொள்ளும். காராளர் அதாவது கார்மேகத்தை ஆளுபவர்கள். இவர்கள் மழையைப் பார்த்து ஏரிகளையும் கால்வாய்களையும் உண்டு பண்ணுவார்கள்.

நெய்தல் :— இதில் வசித்தவர்கள் செம்படவர்கள், இவர்கள் முதலாவது கட்டு மரத்தை உபயோகித்தார்கள். பின்பு தோணியுண்டாக்கினார்கள். பின்பு பரிசல் என்ற பிரம்பினால் பின்னி உள்ளே தோல் பரப்பிய தோணிகளைச் செய்தார்கள். இவர்கள் வியாபாரிகள். முக்கியமாக மீனிலும் உப்பிலும் வியாபாரம் செய்தார்கள். இவர்கள்தான் கடல் கடந்து அந்நிய நாட்டிற்கும் வியாபாரத்திற்குப் போனார்கள். இவர்கள் திடகாத்திரமுள்ளவர்கள்.

விவாகம் :— பூர்வீகத்தில் பெண்ணைக்கண்டு காதல் கொண்டவுடன் மணம் புரிந்தார்கள். களவு மணம் என்ற ஒருவித கலியாணம் நடந்தது. இவர்கள் தங்கள் வேட்டையில் கிடைத்த புலி நகங்கள் தந்தம், சிப்பி, இறகு முதலியவைகளை பெண்ணுக்கு வெகுமதியாகக் கொடுத்தார்கள். பெண்கள் இதைக் கோர்த்து கழுத்தில் போட்டுக் கொண்டார்கள். இதுவே தாலியின் ஆரம்பம். அக்காலத்தில் ஸ்திரிகள்தான் குடும்ப விஷயத்தில் தலைமை வகித்து வந்தார்கள். இதன் பின் கற்பு கலியாணம் நடந்தது. கற்பு கலியாணம் என்றால், கலியாணத்தை திட்டவட்டமாய் நிச்சயித்து, பந்தல் போட்டு ஜனங்களுக்கு முன்பாக, அவர்கள் சாட்சியாக கலியாணம் செய்து கொள்வது. புருஷன் மனைவி ஒருவருக்கொருவர் உண்மையாய் இருக்கவேண்டும்.

## தமிழ் இலக்கிய ஆரம்பம்.

ஆரம்பத்தில் இலக்கியம் காவியமாகவே இருந்தது. பண் என்கிற பதத்திற்கு பாட்டு என்று அர்த்தம். பாணர் — பாடும் ஓர் ஜாதியார். இவர்கள் மதுபானம் உபயோகித்து கெட்டுப் போனார்கள். அதினாலே தீண்டாத ஜாதியாகி விட்டனர். முதலாவதாக பாடல்கள் காதல் சம்பந்தமாக இயற்றப்பட்டன. அதேமாதிரி பாடல்கள் வெற்றி அடைந்த சந்தர்ப்பத்திலும் இயற்கை சந்தோஷத்திலும் உண்டானவைகளே. இவைகள் இயற்கையாய் மனுஷன் பாடும் சமயங்கள். காதல் பாட்டுகள் அந்தந்த

பூமியில் அதனதன் இயற்கைக்கேற்றாற்போல் இருந்தது. நெய்தலில் கருப்பழுகைபற்றி மெச்சிப் பாடுகிறார்கள். கருப்பழுகும், கருவாட்டு வாசனையும் இங்கு பிரியமானவை! கடலில் பிரயாணம் செய்யும்போது பிரிந்திருக்கும் சமயத்தில் விசனத்தோடு கலந்த பாடல்களும், களவு, கலியாண சம்பந்தமான பாட்டுகளும், கற்பு கலியாண பாட்டுகளும், வெற்றி பாட்டுகளும் அந்தந்த சமயங்களில் பாடுவார்கள்.

குறிஞ்சி:— இதிலிருந்துதான் குறவஞ்சி என்ற ஓர் பாட்டின் பெயர் வந்தது. குறிஞ்சிக்கு அடுத்தது முல்லை. குறிஞ்சியிலுள்ளவர்கள் முல்லையில் போய் ஆடு மாடுகளை திருடிக்கொண்டு சந்தோஷமாய் வரும்போது வஞ்சி மாலைகளை அணிந்துகொண்டு வருவார்கள்.

மருதம்:— மருதத்தில் அரசர்கள் கோட்டை கட்டிக்கொண்டார்கள். இவர்கள் உழிஞைப்படர்களைத் தரித்துக்கொண்டு வெற்றி வேந்தராய் பாடினார்கள். அதனால் இப்பாடல்களுக்கு உழிஞைப் பாடல் என்றுப் பெயர்.

குடை மங்கலம், வாள் மங்கலம் என்று குடையையும் வாளையும் கொண்டாடுவார்கள். சகுனம் பார்க்கும் வழக்கம் உண்டு என்பதும் தெரிகிறது.

போரில் முதுகில் காயம்பட்டோர் தோல்வியும் அவமானமுமடைந்தவர்களாக கருதப்பட்டனர்.

மார்பிலே பட்ட புண்ணுக்கு விழுப்புண் என்று பெயர். அது வீரர்களுக்கு சிறப்பு. மதிலை அழித்த பிறகு

கழுதைகளால் ஏர் உழுது கொள் முதலியவைகளை விதைப்பார்கள். அரசன் திறை கொடுத்து விட்டால் திரும்பி வந்து விடுவார்கள். அப்படி திறை கொடுக்காவிட்டால் ஊரை கொளுத்துவார்கள்.

பாசறை :— மழை காலத்தில் போர்க்களத்துக்கு அருகே தங்கும் இடம்.

நடுகல் :— இறந்த வீரர்களின் ஞாபகார்த்தமாக நடுகின்ற கல்லுக்கு நடுகல் என்று பெயர். மதில் சுவர் எடுத்து, விழா கொண்டாடுவார்கள்.

தபுதார நிலை :— இறந்துபோன மனைவிக்கு பிறகு மணஞ் செய்துகொள்ளாது சும்மா இருத்தல்.

தாபத நிலை :— இறந்துபோன கணவனுக்கு பிறகு சும்மா இருத்தல். உடன் கட்டை ஏறுதலும் உண்டு.

கூத்தர் — கூத்தாடுபவர்கள்.

பாணர் — பாட்டு பாடுபவர்கள்.

பொருணர் — நெற் களத்திலும் போர்க் களத்திலும் சிறப்பாக பாடும் ஆண்கள்.

விறலியர் — பாணர் பெண்கள்.

இவர்கள் நால்வகையாரும் பாடி ஜீவனம் செய்வார்கள். செய்திகளை தெரிவிக்கும் தொழிலும் இவர்களுக்கு இருந்தது.

சூதர் :— அரசர் முதலியவர்களை துயில் எழுப்புதல்.

### திணைக்குறிய தெய்வங்கள் :—

குறிஞ்சி — முருகன்.
முல்லை — திருமால்.
மருதம் — இந்திரன்.
நெய்தல் — வருணன்.
பாலை — காளி.

## மணிமேகலை.

மணிமேகலை ஆசிரியர் மதுரை கோலவாணிகன் சீத்தலைச் சாத்தனார். இவர் பௌத்த மதத்தினர். இவர் பௌத்தர்களின் கொள்கைகளை விதந்து கொள்வதற்கு மணிமேகலை ஒன்றுதான் சிறந்த நூல். மணிமேகலை பௌத்த மதத்தைச் சேர்ந்தவள். மணிமேகலையை 30 காதைகளாகப் பிரித்திருக்கிறார். (காதை — பாட்டு) இந்த நூலில் இயற்கை வருணனை அதிகம்.

இவர் கடைச் சங்க காலத்துப் புலவர். 49 பேரில் ஒருவர். இவர் தம்மிடம் அரங்கேற்ற வரும் நூற்களிலுள்ள குறைகளைப் பார்க்க மனம் சகியாதவராய் தன் தலையைக் குத்திக்கொள்வது வழக்கமாம்! இதனால்தான் சீத்தலை (சீழ்த்தலை) சாத்தனார் என்ற பெயர் வந்தது.

## சிலப்பதிகாரம்.

சிலப்பதிகாரம் ஐந்து காவியங்களில் ஒன்று. காவியம் என்பது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் விளக்கி கதை வடிவமாக வரும் பெரிய நூல். அப்படிப்

பட்டதில் சிலப்பதிகாரம் ஒன்று. ஐம்பெருங் காவியங்கள் எவை என்றால் (1) ஜீவக சிந்தாமணி (2) மணிமேகலை (3) சிலப்பதிகாரம் (4) வளையாபதி (5) குண்டலகேசி. சிந்தாமணி பிற்காலத்தில்தான் ஏற்பட்டது. அதாவது ஆயிரம் வருஷங்களுக்குமுன் எழுதப்பட்டது. சிலப்பதிகாரம், மணிமேகலை இவ்விரண்டும் கடைச்சங்க காலத்தியவை. மணிமேகலை, சிலப்பதிகாரம் இவ்விரண்டிற்கும் சம்பந்த முண்டு. மணிமேகலை கோவலன் மகளைப்பற்றியகதை. சிலப்பதிகாரம் கோவலனைப் பற்றிய கதை. இந்த இரண்டு நூலையும் எழுதிய இருவரும் சிநேகிதர்கள். மணிமேகலை எழுதியவர் சித்தலைச்சாத்தனார். சிலப்பதிகாரத்தை எழுதி யவர் இளங்கோவடிகள். மணிமேகலைக்குப் பிறகு சிலப்பதி காரம் எழுதப்பட்டது. சிலம்பு + அதிகாரம் = சிலப்பதி காரம். சிலம்பைப்பற்றிச் சொல்லப்பட்ட கதை.

கதை :— காவிரிபூம்பட்டினத்தில் கோவலன் என்ற வணிகன் கண்ணகி என்பவளை மணந்து வாழ்ந்து வந்தான். அந்த நாட்டில் ஒரு இந்திர விழா நடந்தது. அவ்வமயம் தாசிகள் வந்து நடனம் செய்வார்கள். எல்லோருடனும் கோவலனும் போயிருந்தான். அங்கு தாசியின் நடனத்தை கண்டு கோவலன் அவளோடு சேர்ந்து விட்டான். அவள் பெயர் மாதவி. இருவரும் இனிமையாக வாழ்ந்து வருங் காலத்தில் ஓர் நாள் இருவரும் கடலோரம் சென்று பாடிக் கொண்டிருக்கும்போது இருவருக்கும் சந்தேகம் ஏற்பட்டது. முதலில் கோவலன் வேறொருத்தியின்மேல் இச்சை கொண்

டாற்போல் பாடினான். மாதவியும் அப்படியே வேறொருவன் மேல் காதல்கொண்டாள்போல் பாடினாள். இருவரும் பிரிந்துவிட்டார்கள். கோவலன் மறுபடியும் கண்ணகியிடம் வந்து சேர்ந்தான். அப்போது அவன் முன்வைத்திருந்த பொருளை எல்லாம் இழந்துவிட்டிருந்தான். ஆகையால் மதுரைக்குப்போய் கொஞ்சம் திரவியம் திரட்ட எண்ணி கண்ணகியை கூடவரச் சொன்னான். இருவரும் மதுரைக்கு வந்தார்கள். அங்கே ஓர் இடைச்சியின் வீட்டில் கண்ணகியை விட்டுவிட்டு கோவலன் கண்ணகியின் கால் சிலம்பை எடுத்துக் கொண்டு வியாபாரம் செய்ய புறப்பட்டான். வழியில் ஓர் கொல்லனைக் கண்டான். அச்சமயத்தில் ராஜ அரண்மனையில் திருடு போய்விட்டது. திருடியவன் கொல்லனே எனினும், கோவலன் ராஜனுடைய சிலம்பைத் திருடியதாக அவனை அக்கொல்லனே ராஜ அரண்மனைக்குக் கூட்டிச் சென்றான். ராஜன் சேவகர்களை அனுப்பி சிலம்பை கொண்டுவரச் சொன்னான். சேவகர்கள் அப்படியே கோவலனைக் கொன்று சிலம்பை அரசனிடம் கொண்டுபோய்க் கொடுத்தார்கள். கோவலன் கொல்லப் பட்டான் என்றது கண்ணகிக்கு எட்டியது. அவள் உடனே புறப்பட்டு அரண்மனைக்குச் சென்று ராஜா செய்த அநீதியைத் தனது மற்றொரு சிலம்பை உடைத்து அதில் முத்து இருப்பதையும், இராஜனுடையதில் ரத்தினங்கள் இருப்பதையும் காட்டி ரூபித்தாள். அரசன் தான் செய்த தவறான செய்யலை யுணர்ந்து கீழே விழுந்து மாண்டான். கண்ணகியும் மதுரையைத் தான் சபித்து பின் தன் உயிரையும் மாய்த்துக்கொண்டாள்.

சிலப்பதிகாரத்தை மூன்று வகையாக பிரித்திருக்கிறார்கள். அவையாவன :—

(1) புகார் காண்டம் (சோழநாடு காவிரிபூம்பட்டினம்.)

(2) மதுரைக்காண்டம் (பாண்டியநாட்டின் தலைநகர்.)

(3) வஞ்சிகாண்டம் (சேரநாட்டு தலைநகரம்.)

சேரநாட்டை அப்பொழுது ஆண்ட அரசனுக்கு சேரன் செங்குட்டுவன் என்று பெயர். செங்குட்டுவன் தம்பிதான் இளங்கோவடிகள். இளங்கோவடிகள் சிநேகிதர் தான் கோலவாணிகன் சாத்தனர். இளங்கோவடிகள் துறவி. இளங்கோவடிகள் துறவியானதற்கு ஒரு கதையுண்டு. இவர் தகப்பனர் பெயர் நெடுஞ்சேரலாதன். செங்குட்டுவன் இளங்கோவடிகள் இருவரும் இருக்கும்போது ஜோசியன் வந்து தமையன் முடி சூட்டப்படமாட்டான் இளங்கோவே தான் அரசனக முடிசூட்டப் படுவான் என்று கூறினன். இளங்கோவடிகளுக்கு அந்த ஜோசியன் கூறியது கொஞ்சமேனும் பிடிக்கவில்லை. தனக்கு தமையனர் இருக்க தான் அரசனக வருவது மிகவும் தவறு என்று நினைத்து அந்த ஜோசியனை பொய்யாக்க துறவியானர். இவர் மூன்று அரசர்களைப்பற்றியும் சிறப்பித்துப் பாடுகிறர். சிலப்பதிகாரத்தில் சேர அரசர்களைப் பற்றி அதிகமாக சொல்லப் பட்டிருக்கிறது. கோவில் கட்டிமுடித்தபோது விழாவிற்கு இலங்கையிலிருந்து கயவாகு என்னும் அரசன் கி. பி. 132ல் வந்தான். இதைக்கொண்டு இவர்காலம் கடைச் சங்க

காலமென்று கடைச் சங்கத்தை குறிப்பிடுகிறதற்கு உதவியாகிறது. செங்குட்டுவன் பகைவர் கனகர், விஜயர், இவர்கள் இருவரும் வடநாட்டு அரசர்கள். சிநேகிதர்கள் சதகாரனர், நூற்றவர், கண்ணர் இவர்கள் செங்குட்டுவனுக்கு உதவி செய்தார்கள்.

## பண்டையகால கிராம அரசியல்.

வழக்கமாய் ஏற்பட்டவை எவையோ அவையே சட்டம். இந்த அரசியல் கூட்டம் மரத்தடியில் நடந்தது. இந்த மரத்தடிக்கு பொது இல், பொதியம், பொதுவில், மன்றம் எனப்பெயர் வழங்கின. இந்த இடத்தில்தான் ஊர் மாடுகளும்கொண்டு வந்து கட்டுவார்கள். சாதாரணமாக வேப்பமரம் அல்லது ஆலமரத்தடியில் கூடுவார்கள். பின் காலத்தில் இதற்கு குடிசைப் போட்டார்கள். இதற்கு மன்றம் என்றுப் பெயர். இந்த மரத்தடியிலேயே கடவுள் வணக்கம் ஆரம்பித்தது. தென்னிந்தியாவில் ஆதியில் சிவ வணக்கம் அதிகம். சிவனுக்கு ஆலமரக் கடவுள் என்று பெயர். கந்தக் கடவுளுக்கு கந்தன் என்று வழங்கினர். சிவன் கோவில் மரத்தைச் சுற்றிலும் கட்டியிருக்கும்.

## ஆரிய வடமொழி நூற்கள் (சமஸ்கிருத நூற்கள்.)

இராமாயணம் :— தசரத இராஜாவின் மகன் இராமன். இராமருடைய தம்பி பெயர் இலக்ஷ்மணன். சீதை இராமர் மனைவி. தசரதர் இரண்டாவது கைகேசியியை மணம் புரிந்தார். கைகேசியின் மகன் பெயர் பரதன். பரதனுக்கே பட்டம் சூட்டவேண்டுமென்று அவள் சூழ்ச்சி செய்தாள். தசரதன்

பன்னிரண்டு வருஷத்துக்குள் இறந்து போவானென்று ஓர் சொல்லிருந்தது. கைகேசி ராமனுக்கும் அவன் தம்பி இலட்சுமணனுக்கும் ஏதாவது மோசம் செய்துவிடுவானென்று அவர்களை வனத்துக்கு செல்லும்படி அரசன் உத்தாவு கொடுத்தார். அவர்கள் இருவரும் வனத்திலிருக்கும் போது சீதையை இராவணன் தூக்கிக்கொண்டு போய்விட்டான். இராமர் வானர சேனைகளை திரட்டிக்கொண்டு இலங்கைத் தீவுக்குச் சென்று இராவணனை ஜெயித்து சீதையை மீட்டுக்கொண்டு வந்தார். கி. மு. 700 போல் வால்மீகி இராமாயணம் எழுதப் பட்டது. எப்படி யிருந்தாலும் அதில் தென்னிந்தியாவை பற்றி கூறப்பட்டுள்ளவை நமக்கு விசேஷம்.

வட நாட்டில் உள்ளவர்கள் விந்தியமலைக்கு தெற்கே இருந்தவர்களை இராட்சதர் என்றும் அநுசயர் என்றும் அழைத்தார்கள். விசேஷமாக கோதாவரி நதிக்கு தெற்கேயுள்ளவர்களை இப்படி அழைத்தார்கள். மலைகளும், மாங்களுமடர்ந்த தண்டகாரணியத்திலுள்ளவர்களை இப்படி அழைக்கவில்லை,

தண்டகாரணியம் என்பது விந்தியமலைச் சாரலில் உள்ள காடுகளடர்ந்த தண்டக என்னும் அரசன் ஆண்ட நாடு. இந்த இடத்தில்தான் ஆரியர் ஆசிரமங்களை ஸ்தாபித்தார்கள். இப்படிப்பட்ட ஆசிரமங்கள் வடகலை தெற்கே பாவ உதவியாய் இருந்தன. விஸ்வாமித்திரர், அகஸ்தியர் இன்னும் இப்பேர்ப்பட்டவர்கள் காலத்தில் சமஸ்கிருத ஆசிரமங்கள் அங்கேயிருந்தன. இவ்வாச்சிரமங்கள் வடகலை பரப்ப ஏதுவாயிருந்தன. இப்படி சீதையை தூக்கிக்கொண்டு போவதை அறிவிக்கும்போது ஆந்திர, சேர, சோழ'

...டியா இவர்களைக் குறித்து ராமாயணம் கூறுகிறது. விசேஷமாக முசுரி பட்டணம் தற்காலத்தில் கொடுங்கலூர் என்று வழங்குகிறதைக் குறித்து இராமர் தன் சேனைகளை இந்தத் துறைமுகம் பக்கம் அனுப்பியதாகக் கூறுகிறார். இப்படி இராமர் இராவணனோடு சண்டை செய்ய வந்தபோது தண்டகாருண்யத்தில் வசித்த வானரர் இராமருக்கு உதவியாய் இருந்தனர். சேர தேசத்துக்கு இந்த பூர்வ நூலில் கோள புத்திரா என்று பேர் வழங்கி இருக்கிறது.

## நகரங்கள் உற்பத்தியானவிதம்.

நெய்தல் மக்கள் உப்பு வியாபாரம் செய்ய வண்டிகளில் உப்புகளை ஏற்றி மற்ற இடங்களுக்கு கொண்டு போவார்கள். இப்படியே மற்ற திணைகளில் விளையும் அரிசி, பஞ்சு, பயிர் தானியம், தேன் இவற்றையும் வியாபாரத்துக்காக ஒரு திணையிலிருந்து இன்னொரு திணைக்கு கொண்டு போவார்கள். வியாபாரம் என்றால் பண்டம் மாற்று. இந்த வியாபாரம் நடக்கும் சந்தை கூடும் இடங்கள் இரண்டு திணைகள் சந்திக்கும் இடம். இங்குதான் நகரங்கள் உண்டாயின. உதாரணமாக புஞ்சையும், நஞ்சையும் சந்திக்கும் இடம், மதுரை, கரூர், உறையூர் இப்பேர்ப்பட்ட நகரங்கள் உற்பத்தியாயின.

--------------------------------

## அத்தியாயம் 3.

### நகர சரித்திரம்.

காவேரிபூம்பட்டினம் :— கடல் வியாபாரத்துக்கு உறையூர், (திருச்சிராப்பள்ளி) வசதியில்லாமலிருந்ததினால், தன் ராஜஸ்தானத்தை சோழ மன்னன் காவிரிபூம்பட்டினத்திற்கு மாற்றினான். காவிரி நதி கடல் சேருகிற இடத்தில் இது இருக்கிறது. காவிரிபூம்பட்டினம் சீர்காழியிலிருந்து 14 மைல். இதற்கு பெரிபிளஸ் என்ற புஸ்தகத்தில் கமாராம் என்றும் தாலமி எழுதினதில் கபேரில் என்றும் பெயர் கூறப்படுகிறது. புகார் என்றும் பெயர் உண்டு. முன் காலத்தில் காவிரி நதி தற்காலத்தில் இருப்பதுபோல இரண்டாகப் பிரியாமல் ஒரே நதியாக இருந்தது. இதனால் கடலிலிருந்து மரக்கலங்கள் போக்கு வரத்துக்கு ஏது இருந்தது. காவிரிப்பூம்பட்டினம் ஆற்றுக்கு வட பக்கம் இருக்கிறது. பட்டினப்பாக்கம், மறுவூர்பாக்கம் என்று இரண்டு பிரிவாக இருந்தது. கடலோரத்திலிருந்தது மறுவூர் பாக்கம். பட்டினப் பாக்கம் அதற்கு மேற்கு. பட்டினப்பாக்கத்தில் அரச வீதி, ஆவண வீதி, கொடிதேர் வீதி, வணிகர், உழுவோர், வைத்தியர், ஜோசியர் முதலியவர்கள் இருக்கும் இடமெல்லாம் இருந்தன. சிற்பிகள், கொல்லர், தச்சர் இவர்கள் கூடி அரசர் ஏவலால் அமைத்த அழகிய கட்டடங்கள் இருந்தன. அரசனுடைய

அரண்மனை இருந்தது. பலவித நாகரீகங்களுக்கு அடையாளமான கவிராயர்கள், நாழிகைக் கணக்கினர், பாணர், கடிகர், மாலை தொடுப்பவர் வாழும் இடங்களும், கோட்டம், அம்பலம், மன்றம், அவை, சோறுசாலை, வேள்விச்சாலை, கலைக்கழகம், சந்திர குண்டம், இந்திர வாவிகளும் அமைக்கப் பெற்றிருந்தன. கடலோரத்தில் கடல்கரை விளக்கம் (தீபஸ் தம்பம்) இருந்தது. கடல் வழியாக வரும் பண்டங்களுக்கு தீர்வை வரையறுத்து கடமை கொள்ளும் ஆயத்துறைகள் இருந்தன. சுங்கம் தந்த பின்னர் புலி முத்திரைபோட்டு பண்டசாலைகளிலும், கிடங்குகளிலும் பண்டங்களைச் சேர்ப்பார்கள். கப்பல் சாமான்கள் இறக்க உயர்ந்த மேடைகள் இருந்தன. யவனர், சீனர், சாவகர், வியாபாரிகள் மாளிகைகள் இருந்தன. சகலவிதமான வாணிகம் செய்யும் வியாபாரிகளும், வெண்கலம், செம்பு, மரம், பொன் வேலை செய்பவர்களும், சித்திரக்காரரும், சிற்பிகளும், வசித்தார்கள். பலவிதமான துளைக்கருவி, நரம்புக்கருவி, இசைக்கருவி வாசிப்பவர்களும் இருந்தார்கள். பர்மாவிலிருந்து குதிரைகள் வந்தன. மலையாள நாட்டிலிருந்து மிளகு வந்தது. இமயமேரு வடமலைகளில் இருந்து மாணிக்கம், பொன், பொதிய மலையிலிருந்து சந்தனம், அகில், தென் கடலிலிருந்து பவளம், கங்கையிலிருந்து யானை, பொன், காவிரி பாய்ச்சலினால் உண்டாகும் பொருள்கள், இலங்கை உணவுப்பொருள்கள், காழகத்திலிருந்து (பர்மா) வந்த நுகர்ச்சி பொருள், சீனாவிலிருந்து பட்டு, பன்னீர், குங்குமம், இப்படி பற்பல வஸ்துக்கள் ஏற்றுமதி இறக்குமதியான இடம்.

பாட்டு :—

நீரில் வந்த நிமிர் பரிப்புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென் கடல் முத்தும், குண்கடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிபயனும்
ஈழத்துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெளிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நளந்தலைமறுக.

(பட்டினபாலை.)

கோற்கை :— தாம்பாவர்ணி நதியின் முகத்துவாரத்தில் இருக்கிறது. மதுரைக்கு முன் இதுதான் பாண்டிய அரசர்களின் பிரதானமான நகரம். இங்கு முத்துக் குளிப்பார்கள். ஆத்தூரிலிருந்து தாம்பாவர்ணி ஆற்றைக்கடந்தவுடன் முக்காணி என்ற ஒரு இடம் இருக்கிறது. முக்காணிக்கு வடமேற்கே 1½ மைல் தூரத்தில் கொற்கை இருக்கிறது. பூர்வீக காலத்தில் கொற்கை கடலோரத்தில் இருந்திருக்க வேண்டும். இப்பொழுதோ கடலில் இருந்து சற்று தூரத்தில் இருக்கிறது. கடலுக்கும் ஊருக்குமிடையில் பாக்க கடல் மணல் கரை. சமீபத்தில் தாம்பாவர்ணி நதி கடலைச் சேருகிற சங்கம் இருக்கிறது. கொற்கையில் பழயகால நாணயங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. வயது சென்றவர்களுடைய பிரேதத்தை வைத்துப் புதைக்கும் தாழி என்ற மண் பாண்டமும் பார்க்கலாம். முன்காலத்தில் நாணயம்

அடிக்கும் அக்கசாலை இருந்த ஊரும் சமீபத்தில் இருக்கிறது. தற்காலத்திலும் இது அக்கசாலை என்று அழைக்கப்படுகிறது. இங்கு இருக்கிற சிவன் கோவிலில் பல கல்வெட்டு சாசனங்கள் உண்டு. கொற்கையிலிருந்து கப்பல்கள் மேல் நாடுகளுக்கும் கீழ் நாடுகளுக்கும் போய்க்கொண்டிருந்தன. கீழ் நாட்டில் ஜாவா மட்டும் போய்கொண்டிருந்தன. பெரிபிளஸ் என்ற புத்தகம் எழுதினவர் கொற்கைக்கு வடக்கே போகவில்லை. நான் கொற்கை பார்க்கப்போனபோது ஒரு வயது சென்ற கிறிஸ்தவ உபதேசியார் மிக உதவியாய் இருந்தார். ஒரு உபாத்தியாயர் சில பண்டைய பாண்டி நாட்டுக்காசுகள் கொடுத்து சரித்திர விவரங்களும் சொன்னார்

15—8—1932-ல் திருக்கடையூர் புகைவண்டி நிலயம் சேர்ந்து 7 மைல் நடந்து காவிரிபூம்பட்டினத்தை சுற்றிப் பார்த்தேன்.

காவிரிபூம்பட்டினம்:—சோழ இராஜ்ஜியத்தில் பூர்வீக துறைமுகம் காவிரிபூம்பட்டினம். காவேரி நதியின் முகத்து வாரத்தில் இருக்கிறது. முன் காலத்தில் காவிரிபூம்பட்டினம் கடலோரத்தில் இருந்தது. கொற்கை போலவே இப்பொழுது இதற்கும் கடலுக்கும் வெகு தூரம், இடையில் மணல் பூமி இருக்கிறது. பின்காலத்தில் இதைப்பற்றி 13-ம் நூற்றாண்டில் வந்த இத்தாலியனாகிய மார்க்கப்போலோ இதை வர்ணித்திருக்கிறார். அக்காலத்தில் ஆண்ட ராஜ ராஜ சோழனுடைய கப்பல் படைகள் வனத்தில் எங்கும் பாசி செறிந்து நிற்கும் மரங்கள் நிறைந்த சோலைபோல் இருந்ததாக வர்ணிக்கிறார்.

காவிரிப்பூம்பட்டினத்திற்கு பூர்வீக காலத்தில் புகார் என்ற பெயரும் வழங்கினது. இங்கு பட்டினத்துப் பிள்ளையார் கோவில் இருக்கிறது. பட்டினத்துப்பிள்ளையார் காவிரிப்பூம் பட்டினத்தில் வேளாள மரபினரான ஒரு வியாபாரி. பெரிய பணக்காரர். ஆனால் குழந்தையில்லை. ஓர் ஆண்குழந்தை கிடைத்ததை எடுத்து வளர்த்தாராம். அக்குழந்தை பட்டினத்தாரிடம் வளர்ந்து, வாலிப பருவமடைந்து, கடல் வியாபாரம் செய்து திரும்பிய பின்ஒருநாள் தாயாரிடம் ஒரு பெட்டியைக்கொடுத்து அதை தன் தந்தையாரிடம் கொடுக்கும்படிச் சொல்லி மறைந்துவிட்டானாம். பட்டினத்தார் பெட்டியைத்திறந்து பார்க்க அதில் காதற்ற ஊசி ஒன்றும், "காதற்ற ஊசியும் வாராதுகாணும் கடை வழிக்கே" என்று எழுதியிருந்த ஓலைச்சுருளும் இருந்தது. இதைப் பார்த்த பட்டினத்துப் பிள்ளையார் ஆஸ்தியெல்லாம் விட்டுவிட்டு துறவரம் பூண்டு கவிராயரானார். உலக சம்பத்து எவ்வளவு நிலையற்றது என்பதைக் குறித்து விரிவாகப் பாடியிருக்கிறார். காவிரிப்பூம்பட்டினத்தில் இந்நாள் மட்டும் இவர் போரால் கட்டப்பட்ட கோவிலில் ஒரு வருஷாந்திர உற்சவம் நடக்கிறது. ஒரு கப்பல் செய்து அதைக் கடலில் விட்டு திருவிழாக் கொண்டாடுகிறார்கள். மணிமேகலை என்ற நூலிலும் காவிரிப் பூம்பட்டினத்தைப் பற்றி வாசிக்கிறோம். இதன் நூலாசிரியர் சித்தலைச் சாத்தனார்.

சோராஜ்யத்துக்கு முகரி பிரதானமான நகரம். இங்கிருந்து விசேஷமாக மிளகு ஏற்றுமதியாயிற்று.

காஞ்சிபுரம் :— சென்னைக்குத் தென்மேற்கே 43 மைல் தூரத்தில் இருக்கிறது. காஞ்சிபுரம் க்ஷேத்திரபூமி. இந்த நகரில் அசோகர் காலத்தில்கூட புத்த பிரசங்கிகள் வந்து ஜனங்களுக்கு போதித்ததாகவும், இங்கு புத்த ஸ்தூபிகள் கட்டப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. ஸ்தூபிகள் என்றால் வட்டவடிவமாக குன்றுபோல் கட்டப்பட்ட புத்த ஞாபகச் சின்னங்கள். காஞ்சிபுரத்துக்கு தெற்கே சங்காராமா என்ற ஒரு இடம் இருந்தது. இங்கு 100 அடி உயரமான ஒரு ஸ்தூபி அயூன்தசங் காலத்தில் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. இது அசோகர் கட்டினதாம். ஆதி காலத்திலே காஞ்சிபுரத்தின் அருகில் இப்படி பல சங்காராமாக்கள் இருந்தனவாம்.

சங்காராமா என்றால் புத்த சன்னியாசிகள் தங்கும் இடம். கிறிஸ்து பிறந்த காலத்தில் நமது தமிழ் நாட்டில் புத்த மார்க்கம் பரவியிருந்தது. மணிமேகலை நூல் அதற்கு நல்ல ஆதாரம். தற்கால கோபுர சிற்பமும் ஒரு ஆதாரமே. பின்காலத்தில் காஞ்சிபுரம் பல்லவ மன்னவர்களின் பிரதான மான நகரமாக இருந்தது. காஞ்சிபுரம் என்ற பெயரின் அர்த்தம் என்ன ? சிலர் காஞ்சி என்ற மரத்திலிருந்து இந்த பேர் வந்ததாக சொல்லுகிறார்கள். வேனையாரோ இது சமஸ்கிருத வார்த்தையிலிருந்து வந்ததாகச் சொல்லுகிறார்கள். இந்தியாவுக்கு புத்த யாத்திரிகராக வந்துபோன அயுன்தசங் என்ற சீனயாத்திரி காஞ்சிபுரத்தை கஞ்சிபுலோ என்று அழைக்கிறார். இதை அவர் தாலோபீசா என்று அழைக்கிற திராவிட நாட்டு பிரதான நகரமாகக் கூறுகிறார். அவர்காலத்தில் இது பெரிய

நகரமாக இருந்தது. அக்காலத்தில் பல்லவ மன்னர்கள் அரசாண்டு வந்தார்கள். பல்லவ ராஜ்யம் ஒரு பெரிய ஏகாதிபத்தியம். தென்பெண்ணை வடபெண்ணை ஆறுகள் இவற்றிற்கு இடையிலிருந்தபாகம் தொண்டைமண்டலம் என்றழைக்கப்பட்டது. கோட்டம் என்று அழைக்கப்பட்ட 24 ஜில்லாக்களாக இந்த தொண்டை மண்டலம் பிரிக்கப்பட்டிருந்தது. இதில் எயில்கோட்டம் என்ற பிரிவின் பிரதம நகரம் காஞ்சிபுரம். பின்காலத்தில் 14-ம் நூற்றாண்டில் ராஜராஜன் ஆண்டபோது இதன் பெயர் ஜெயங்கொண்ட சோழமண்டலம் என்று மாற்றப்பட்டது. இதற்கு பின்காலத்தில் காஞ்சிபுரம் விஜயநகரம் ஆதீனத்துக்குள் வந்தது. விஜய நகரம் மகம்மதியரை எதிர்க்கும்படி எழும்பிய ஒரு பெரிய இந்து ஏகாதிபத்தியம். ஒஸ்பேட்டையிலிருந்து 7-மைல் தூரத்தில் இப்பொழுது அழிந்து கிடக்கும் ஏழு விஜயநகர் கோட்டைகள் கட்டடங்களைப் பார்க்கலாம். இதற்கு ஹம்பி என்றும் பெயர். தருமபாலர் போதிஸத்துவா என்ற பெரிய புத்தமகான் காஞ்சிபுரத்தில் பிறந்தவர். இங்குதான் ராமானுஜர் கல்வி கற்றார். மகாவம்ஸா என்ற இலங்கை ராஜவம்ஸ சரித்திரமும் இந்நகரைப்பற்றி பேசுகிறது. தற்காலத்தில் காஞ்சிபுரத்தில் புத்த மதத்தைக் குறிக்கும் சின்னங்கள் ஒன்றும் கிடையாது. அது பிரதானமான வைஷ்ணவ ஸ்தலம். சிவன் கோவில்களும் உண்டு. நச்சினார்க்கினியர், திருஞானசம்பந்தமூர்த்தி என்ற கவிராயர்கள் இங்குள்ள ஆலயங்களைக் குறித்து பாடி இருக்கிறார்கள்.

காஞ்சிபுரத்தில் பல்லவ மன்னர்கள் பல நூற்றாண்டுகளாக ஆண்டு வந்தார்கள். இவர்கள் காலத்தில் காஞ்சிபுரம் வெகு சிறப்பான நகரமாக ஆயிற்று. இவர்கள் காலம் உத்தேசமாக 4-வது நூற்றாண்டிலிருந்து 9-வது நூற்றாண்டு வரைக்கும். காஞ்சிபுரத்தில் இப்பொழுது காணப்படும் ஆலயங்களின் சிறப்பு மகிமை இவர்கள் காலத்துக்குரியவை தான். நரசிம்மவர்மன் காலத்தில் அதாவது உத்தேசம் கி. பி. 640 ஹுயுன்தசங் சீன யாத்திரிகன் காஞ்சிபுரம் வந்தார். முதலில் இவர்கள் ராஜ்யம் வடபெண்ணையிலிருந்து தென்பெண்ணையாறு வரைக்கும் விசாலமாய் இருந்தது. பின் காலத்தில் தஞ்சாவூர் திருச்சினுப்பள்ளி மட்டும் எட்டியது.

காஞ்சிபுரத்தில் சிவன் கோவில்களும், விஷ்ணு கோவில்களும் வெவ்வேறு பாகங்களாக இருக்கின்றன. சிவன் கோவில்களுள் விஷ்ணு அடையாளங்களைப் பார்க்கலாம். ஆனால் விஷ்ணு கோவில்களில் சிவன் அடையாளங்கள் ஒன்றும் இல்லை.

7—8—1929-ல் காஞ்சிபுரத்தில் நான் நேரே சுற்றிப் பார்த்த சில ஆலயங்களை இங்கு வர்ணிக்கிறேன். அங்கு கிறிஸ்தவ குருவாயிருந்த திருவாளர் மக்லேன் மிக உதவி செய்தார்.

சிவன் கோவில்களில் பிரதானம்:— 1. கைலாசநாதர் கோவில். பல்லவர் கோவில் சிற்ப முறையை சற்றுக் கவனிக்க வேண்டும். கோவில் வெளி மண்டபத்தில் யானை, சிங்கம்போன்ற உருவம் இருக்கும். பல்லவர் கோவில்

களுக்கும், சோழ அரசர் கோவில்களுக்கும் வித்தியாசம் என்னவென்றால் :— பல்லவ கோவில்களில் முகத்துவார கோபுரம் சிறிது. மூலஸ்தான கோபுரம் பெரிது. சோழ பாண்டிய கோயில்களில் முகத்துவார கோபுரம் பெரிது. மூலஸ்தான கோபுரம் சிறிது. பல்லவர் கோபுர உச்சி சின்னங்கள் வடிவம் கிண்ணங்கள் போல முடிந்திருக்கும். சோழ பாண்டிய கோவில் கோபுர உச்சிசாலைபோல் முடிந்திருக்கும். கோபுரத்தில் சுற்றி சைக்ஷத்திய என்ற சிற்சில அறைகள்போன்ற சிற்பம் கட்டப்பட்டிருக்கும். கோபுர சிற்பம் புத்த சந்நியாசிகள் சுற்றுக்கட்டு அறைகளையும் ஜெபாலயங்களையும் அடையாளமாகக் குறிக்கின்றது. கோவில் சிற்ப அலங்காரம் தென்னிந்தியாவில்தான் விசேஷம். புத்த சந்நியாசி மடங்கள் சாலைகள் முதலியவைகள் கட்டப்பட்ட பின்புதான் அவைகளைத் தழுவி இந்து ஆலய சிற்பமும் விருத்தியடைந்தது. கைலாசநாதர் கோவிலில் பல சிறந்த வாசகங்கள் கற்களில் வெட்டப்பட்டிருக்கின்றன. கற்கள் "முறம்பு" கற்களைப்போல் கடினமில்லாதிருந்தாலும் இப்பொழுதும் அழியாமலிருக்கின்றன. கோவிலின் மத்திய கட்டடத்தைச் சுற்றி சிற்சில அறைகள் மடம்போல் கட்டப்பட்டிருக்கின்றன. மூலஸ்தானத்தில் லிங்கம் இருக்கிறது. விஷ்ணு குறிகளும் உண்டு. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற திருமூர்த்தியின் உருவங்கள் ஒரு இடத்தில் வெட்டப்பட்டிருக்கின்றன.

---

## ஏகாம்பரநாதர் கோவில்.

கோவில் எதிரே, வெளியில், உயர்ந்த கம்பங்கள் உள்ள வெளி மண்டபங்கள் இருக்கின்றன. முகத்துவாரத்தின்மேல் உயர்ந்த கோபுரம். கோபுர உச்சியில் நீண்ட சாலை. இது சோழ பாண்டிய சிற்பம். இந்தக் கோவில் பிரகாரத்தில் 25 ஏக்கர் நிலங்கள் உண்டு. விசாலமான இடம். இரண்டு குளங்கள் இருக்கின்றன. ஒன்று பெரியது. கோவில் மூலஸ்தானத்தில் லிங்கம் இருக்கிறது. கலியாண மண்டபம் ஒன்று இருக்கிறது. இங்கு ஒரு மாமரம் இருக்கிறது. பார்வதி தன் கையை அகஸ்மாத்தாய் தன் கணவன் கண் மேல் வைத்ததினிமித்தம் இந்தமாத்தடியில் தவம் செய்தாளாம். இதில் நான்கு கனிகள்தான் காய்க்குமாம். நாலும் வெவ்வேறு சுவையுள்ளதாம். ஆயிரங்கால் மண்டபம் ஒன்று உண்டு. மூலஸ்தானத்துக்கும் கோயிலுக்கும் தொடர்ச்சியாக விஜய நகர மன்னர்கள் கட்டிய ஒருமண்டபம் இருக்கிறது. தற்காலத்தில் செட்டியார் தனவந்தர்கள் இலக்ஷக் கணக்கான பணத்தை செலவழித்து ஒரு புதிய கோபுரமும் கோபுரத்தைச் சுற்றி மதிலும் கட்டியிருக்கிறார்கள். பின் காலத்தில் இந்தக் கோயில் பிரகாரங்களுக்குள்ளே மகம்மதிய இராணுவங்களும், ஆங்கில இராணுவங்களும் தங்கியிருக்கச் செய்திருந்தார்கள். சிற்ப சாஸ்திர வேலை அமைந்த சிலைகள் தலையில்லாமல் உடைந்திருக்கின்றன.

மகாபலிபுரம் :— காஞ்சி நகர் கடற்கரைமட்டும் 20 மைலுக்கு விஸ்தீரணம் பாவி இருந்ததாம். மகாபலிபுரம்



காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயில். ஏகாதிபத்திய மாண்புடன் ஆண்ட கரிகால சோழ மன்னன் காலத்திற்கு முன்னே (கி. மு. முதல் நூற்றாண்டிலேயே) இது கட்டப்பட்டிருக்கவேண்டுமென்று ஊகிக்கப் படுகிறது. பெரிய கோபுரம் சோழ சிற்ப சாஸ்திர முறைப்படி உச்சி நீண்ட ஜெபசாலைப்போல் முடிவு பெற்றது. கோபுரப் பக்கங்கள் பௌத்த மடங்களின் சிறிய அறைகள் பாவனையாக அடுக்கடுக்காக சுற்றி அமைக்கப் பட்டிருக்கின்றன. பக்கத்திலுள்ள குளத்தின் நடுவில் கிண்ணை (உச்சி) கோபுர மண்டபம். உள்ளே 25 கஜ விஸ்தீரண இடமுண்டு. பின் காலத்தில் முகம்மதிய ஆங்கிலேய பட்டாளங்களை இங்கு தங்கச் செய்த தால், சிலைகள், சிற்ப சாஸ்திர வேலையமைந்த சில பாகங்கள் சேதம் அடைந்திருக்கின்றன.

காஞ்சிபுரத்தின் துறைமுகம். கப்பல் இலங்கைக்கு போவ தாகவும் அயூந்தசங் எழுதி வைத்திருக்கிறார். திருமங்கை யாழ்வாரும் இதைக் குறித்துப் பாடியிருக்கிறார்.

புலங்கொள் நிதிக் குவையோடு புழைக்கை மாக்கலற்றிணுமம்
நலங்கொள் நவமணிக் குவையும் சுமந்தெங்கும் நன்னெஞ்சித்து
கலங்களியங்கும் மல்லைக் கடன்மல்லைத் தலசயனம்
வலங்கொள் மனத்தாரவரை வலங்கொள் என்மட நெஞ்சே.
(திருமங்கையாழ்வார் இயற்றிய திருமொழி.)

## குகைக் கோவில்.

பல்லவ மன்னன் முதலாவது நரசிம்மவர்மன் தன் இராஜ்யத்தில் அநேக கோவில்கள் கட்டுவித்தான். திருச்சி ைப்பள்ளி, புதுக்கோட்டையில் இவன் இயற்றிய கோவில்கள் இருக்கின்றன. நரசிம்மவர்மனால் இயற்றப்பட்ட சிற்ப தோற்றங்கள் விவரம் — பாறைகளின் முன் பக்கத்தில் வெட்டப்பட்டவை. முன் பக்கம் அதிக அலங்காரமுள்ள வைகள். உட்புறம் மூலஸ்தானங்கள் சிறு அறைகளாக பின் சுவரிலே வெட்டப்பட்டிருக்கின்றன. இதற்கு எதிரே பல கம்பங்கள் உள்ள பெரிய சாலையிருக்கிறது. சுவர்களிலே பல உருவங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. இவை மிகுந்த அழகாகவும், சாமர்த்தியமாகவும் அமைக்கப் பட்டவை. சில கோவில்களில் அலங்காரமான கொடுங்கைகள் மகாமல்லன் இயற்றிய சிற்ப அமைப்பில் விசேஷமாகக் கவனிக்கத்தக்கன. கம்பங்கள் முன் காலத்திலுள்ள பளுவான கம்பங்களுக்குப் பதிலாக அழகிய வடிவமும் சரியான அளவு பிரமாணத்தின்

படி அமைக்கப்பட்ட கம்பங்களாக இருக்கின்றன. கம்பங்களின் அடியில் பாதக் கற்களுக்குப் பதிலாக சிங்கரூபம் அமைக்கப்பட்டிருக்கிறது. கம்பத்தின் ஒரு பாகம் எண்பக்கமுள்ளது. போதிகை உருண்டும் மேல் பாகம் தட்டையாகவும் இருக்கும்.

பல்லவர்கள் பற்பல இடங்களில் பாறைகளை வெட்டிக் குடைந்து, அழகிய சிற்பம் அமைந்த கல்வெட்டுக் கோவில்களை கட்டியிருப்பதை இன்னும் காணலாம். செங்கல்பட்டு சமீபமிருக்கும் மஹாபலிபுரம், புதுக்கோட்டை சமீபமான மலைகளிலுள்ள நார்தாமலை, சித்தன்னவாசல் முதலிய இடங்களில் நான் நேரே பார்த்தேன். தருமன், வீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன், திரௌபதி, கணேசன் எனப்பேரிட்ட ஏழு கோயில்கள் பாறைகளிலே வெட்டப்பட்டதை பார்க்கலாம். பூர்வீக காலத்தில் மஹாபலிபுரம் ஒரு துறைமுகப் பட்டணம். கடலோரத்திலுள்ள மணல் மத்தியிலுள்ள கடும் பாறைகளையே இவ்வளவு சித்திர மயமான அழகிய கோவில்களாக மாற்றிய பூர்வீக தமிழ் சிற்பிகளின் சாமர்த்தியமே அச்சரியமானது. ஒவ்வொரு கோவிலும் ஒரே பாறையிலிருந்து வெட்டப்பட்டது. இங்குள்ள கோவில்களில் ஒன்று சற்று தூரத்தில் கடல்நீரால் மூடப்பட்டிருக்கிறது. இந்த ஊரின் சரியானபெயர் மகாமல்லபுரம்.

சேலத்திலிருக்கும் நாமக்கல்லில் இப்படிப்பட்ட இரண்டு கோயில்கள் இருக்கின்றன. புதுக்கோட்டை சமீபத்தில் நார்த்தாமலை, குடுமியாமலை, சித்தன்வாசல் என்ற

இடங்களில் இந்தக் கோவில்களை இன்னும் பார்க்கலாம். ஓர் இடத்தில் பிரம்மாண்டமான பாறையின் அடியிலே சித்திர வேலை யமைந்த அழகிய கோவிலொன்று இருக்கிறது. சித்திரங்களின் வர்ணம் எத்தனையோ நூற்றாண்டுகளாகி விட்டாலும் மங்காமல் இன்னும் தெளிவாகவிருக்கின்றது. இந்தப் பாறைக்கு மேல் செங்குத்தான ஓர் இடத்தில் கடுந் துறவிகளான சமண துறவிகள் உபவாசம் செய்து சாகு மட்டும் படுத்திருப்பார்களாம். தாமரை மலர்கள் நிறைந்த தடாகமும், கையில் தாமரை மலரைப் பிடித்த சமண முனி உருவமும் இப்படிப்பட்ட சில உருவங்கள் வரைந்த சில சித்திரங்களை இன்று பார்க்கலாம். காஞ்சிபுரத்திலும், பல்லவ சிற்பம் அமைந்த இவர்களால் கட்டப்பட்ட கோவில்கள் ஒன்றுண்டு. பல்லவ சிற்பத்திற்கு அடையாளமாக மூல ஸ்தானத்திற்குமேல் இருக்கும் கோபுரம் பெரியதும் கிண்ண வடிவமுள்ள சிகரமுடையதாய் அமைக்கப்பட்டிருக்கும். பாண்டிய சோழ கோபுரங்களோ முகத்துவாரத்து கோபுரங்கள் அதிக உயரமானதும் உச்சி நீண்ட சாலை வடிவமுள்ளதாயும் இருக்கும். பல்லவ மன்னர்கள் நிலத்தை விருத்தி செய்தார்கள் உழவுத்தொழில் முன்னேற்றமடையச் செய்தார்கள். கைத் தொழில் அபிவிருத்திக்கு உதவி செய்தார்கள். பல பெரும் பாதைகள் ஏற்படுத்தினார்கள்.

சில ஆண்டுகளுக்குமுன் நான் கேரே பார்த்தவற்றை அச்சமயம் நான் எழுதிய தினக்குறிப்பிலிருந்து இங்கு எடுத்துரைக்கிறேன்.

18—8—1932ல் என் மூத்த சகோதரியும், அவர்கள் பர்த்தாவும், நானும் திருக்கழுக்குன்றம், மஹாபலிபுரம் முதலிய இடங்களைப் பார்க்கப் புறப்பட்டோம். செங்கல்பட்டு வழியே போய் காலை 9-மணிபோல் திருக்கழுக்குன்றம் சேர்ந்தோம். கோவிலைச்சுற்றிப் பார்த்தோம். படமெடுத்தோம். பின்பு வேதகிரி மலைமேல் போனோம். இங்கு மலை உச்சியில் வேதகிரி நாதர் கோவிலிருக்கிறது. 11-மணி போல் ஒரு பண்டாரம் வந்தார். கோவில் பக்கத்தில் வெளியில் ஒரு பாறையில் உட்கார்ந்து ஜெபம் செய்தார். பின்பு கொண்டுவந்திருக்கும் சர்க்கரை பொங்கலை தட்டில் பரவி இரண்டு கிண்ணங்களில் வைத்து ஒரு கிண்ணத்தை பாறைமேல் தட்டினார். முதலாவது ஓர் கழுகு வந்தது அதற்கு ஆகாரமும் கொடுத்தார். சற்று நேரத்திற்குப்பின் வேறு ஒரு கழுகு வந்தது. கிட்டவந்து அவர் கையில் ஊட்ட சாப்பிட்டது.

மதியம் 12-மணி போலாயிற்று. புறப்பட்டு மஹாபலிபுரம் போனோம். அங்கு இருந்த ஒரு வாய்க்காலைத் தோணியில் கடந்து அங்குள்ள ஒரு கோயிலைச் சேர்ந்தோம். மிக வெயிலாயிருந்ததால் ஒரு கோவிலில் சற்று தங்கியிருந்தோம். வாய்க்காலைக்கடந்து நாங்கள் முதல் போன இடத்தில் ஐந்து சிறு கோவில்கள் இருந்தன. ஒவ்வொரு கோவிலும் ஒரு பெரிய பாறையில் வெட்டப்பட்டது. அதின் சிற்பத்தை யார் வர்ணிக்க முடியும்! பல்லவ மன்னர் காலத்தில் உத்தேசம் கி. பி. 625 வருஷத்திற்குப்பின் ஆண்ட

நரசிம்மவர்மன் காலத்தில் இவை வெட்டப்பட்டவையென்று சரித்திர நூலாசிரியர் கூறுகிறார்கள்.

இன்றைக்கும் பஞ்சபாண்டவர் பேரிட்டு இவற்றை அழைக்கிறார்கள். தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன். இவை ரதமல்ல கற்கோயில்களே. முதல் கோவில் அடுக்கடுக்காக மச்சு மச்சாக வெட்டப்பட்டு மேலே ஏறவும் தங்கவும் வசதியுள்ளதாயிருக்கிறது. முதலிலிருக்கும் கோவில் எதிர்ப்பக்கத்திலே இரண்டு பெரிய சிலைகளும் அவற்றின்மேலே பண்டைய அட்சரங்களில் வெட்டப்பட்ட எழுத்துக்களும் இருக்கின்றன. பெரிய கல் கலசமொன்று கோவில்பக்கத்தில் கீழே காணலாம். கம்பங்கள் உட்கார்ந்த சிங்கங்கள் தங்கள் தலையில் கோவிலை சுமந்து கொண்டிருக்குமாப்போல் இரண்டாவது கோவில் வெட்டப்பட்டிருக்கின்றது. மற்ற மூன்றும் சற்று சிறிய கோவில்கள். திரௌபதியின் கோவில்கூரை மெதுவாகவும் ஒரு வீட்டு ஓட்டுக்கூரை வண்ணமாகவும் வெட்டப்பட்டிருக்கிறது. உள்ளே சிலைகள் வெட்டப்பட்டிருக்கின்றன. இதற்கும் இதற்கு முன்னிருக்கும் கோவிலுக்கு மத்தியில் பின்னே பெரிய நந்தி வெட்டப்பட்டிருக்கிறது. இதற்கு சற்று எதிரே ஓர் பெரிய யானை மிக அழகாய் ஓர் கல்லில் வெட்டப் பட்டிருக்கிறது. இவற்றின் சிற்பிகள் எத்தனை சாமர்த்தியம் எத்தனை மெய்க்கலையுடையவர்களாயிருந்திருக்கவேண்டும்! கடலோரத்தில் முரட்டுத்தனமாய்த் தோன்றும் அழகில்லாத பாறைகளை தெரிந்தெடுத்து அவற்றிலிருக்கிற இந்த ரதா

சிற்ப வேலைகளைச் செய்ய கண்டுபிடித்த மனிதரும் எத்தனை அறிஞரும், புகழத்தக்கவரும், அதிசயிக்கப்படத்தக்கவருமாய் இருந்திருக்கவேண்டுமென்றுச் சொல்ல இயலுமோ? பின்பு நாங்கள் சற்று ஒரு மைல் தூரத்திலுள்ள கோவில்களைப் பார்க்கப்போனோம். இங்கு மாஹேஷ்வரன் கோவில் பாதர் அவதாரக்கோவில் இருக்கின்றன. அர்ச்சுனன் விரதமெடுத்து வனவாசஞ் செய்ய சிவ பெருமான் பரிவாரங்களுடன் அவனுக்குத் தரிசனங்கொடுத்ததை பெரிய பாறையின்மேல் விசாலமாய் வெட்டப்படிருக்கிறது.

புதுக்கோட்டையிலிருந்து 11—9—1933-ல் திரு. சென்னையா, புதுக்கோட்டை பொருட்காட்சிசாலைத் தலைவர் திரு. வெங்கட்ரங்கமும் நானும் நார்தா மலைக்கோவில் பார்க்கப் போனோம். மேல் மலையென்ற ஓர் பெரிய கற்பாறை ஏறிப் போனோம். அழகிய சிற்பமுறைப்படி கட்டப்பட்ட சிவன் கோவில் ஒன்றிருக்கிறது. விண்ணவிமானம் கோவில் முன் கல்சுவரில் வெட்டப்பட்ட சிலைகளைப் பார்த்தோம். பண்டைய கால மக்கள் உடைகள் எப்படியென்பதை இவற்றிலிருந்து திருவாளர் வெங்கட்டாங்கம் என்ற பெரியார் விவரித்துக் காட்டினார். இடுப்பில் கட்டிய முண்டு வேட்டி முட்டுக்குமேல் தான் தார் போட்டவண்ணமாக கட்டப்பட்டிருந்தது. அரையில் ஒரு இடைக்கட்டு, இதற்குமேல் ஒரு மார்கட்டு. பெரியோரிடம் மாத்திரம் வேட்டியிலிருந்து முடிச்சு அல்லது கொசவம் மடிப்புகள் பல குஞ்சங்கள்போலத் தொங்கின. தோளிலிருந்து பூண்நூல்போல காணுவது பூண்நூல் அல்ல

உபவீதம், அல்லது அங்கவஸ்திரம். தலையில் மகுடம்—கிரீடம் இருந்தது. தோளில் தோள்காப்பு காப்புபோல் தோன்றிய சிங்கமுகமுள்ள ஆபரணம் பார்த்தோம்.

கோவில்மேலே கொடுங்கைமேலிருக்கும் படிக்கல்லில் நாட்டியம் ஆடும் உருவங்கள் பலவித நாட்டிய நடன நிலையில் வெட்டப்பட்டிருந்தன. மூலஸ்தானம் வட்ட வடிவமானது. லிங்கமுமிருந்தது. கோவிலுக்கு எதிரே பெரிய பாறையில் குகைபோல் வெட்டப்பட்ட இரண்டு குகைக் கோவில்கள் இருக்கின்றன. தளத்திற்கு எதிரே வரிசையாய் கல்களில் யாழிகள், சிங்கங்கள், யானைகள் முதலியன வெட்டப்பட்டு இருந்தன. ஒன்று விஷ்ணுகோவில், முன் மண்டபத்திலிருந்த விஷ்ணு உருவங்கள் மெல்லிய மஸ்லின்போன்றதும் பாதம்வரை எட்டுவதுமான உடை தரித்திருந்தன. குஞ்சங்கள் முதலிய ஆடம்பர சிற்பவேலையோடு அமைக்கப்பட்டிருந்தன.

சிவன் கோவில்களுக்கும் இந்த சிலைகளுக்கும் இருந்த வித்தியாசம் இக்கோவில்கள் கட்டப்பட்ட காலங்களைக் குறிக்கின்றன. பல்லவ மன்னர்கள் காலத்தில் 400—800 கி. பி. வெட்டப்பட்ட சிலைகள் சாதாரணமாகவும் ஆடம்பரங்கள் அதிகமில்லாமல் இயற்கைக்குக்கூடிய மட்டும் ஒத்தவைகளாயுமிருக்கும். அப்படியே பல்லவ ராஜ்யத்திற்குப் பின் சோழ மன்னர்கள் திரும்பவும் தங்கள் சுதந்திரத்திற்கு வந்த ஆரம்பகாலத்தில் பல்லவ காலம் போலவே இயற்கை பிர

மாணத்தின்படியே சிலே வெட்டினார்கள். ஆனால் பின் காலங்களில் சில வேலைக்காரர் ஏராளமாக அதிகரித்து எவரும் சிலேகள் செய்ய ஆரம்பிக்கவே சில கண்டிப்பான சிற்ப சட்டங்கள் ஏற்படுத்த நேரிட்டன. இதனால் இயற்கையின் படியும் ஆடம்பரங்கள் இல்லாமல் சிற்பியின் மன உணர்ச்சி உற்சாகம், பக்தியின்படியும் சாதாரண சிலே வெட்டாமல், ஏட்டின் விதியின்படி உள்மன உணர்ச்சியில்லாமல் யந்திரம் வெட்டுமாப்போல் சாஸ்திர விதிகளின்படி சிலே வெட்டுகள் நடந்தேறின. இதனால்தான் பிற்கால சிலேகள் விகாரமாயும் இயற்கைக்கு விரோதமாயும் பலவித ஆடம்பரங்களோடு வெட்டப்பட்டன.

ஓர் சிலே இந்து மார்க்கத்தாராலா, புத்தமார்க்கத்தாராலா வெட்டப்பட்டதென்பதை ஓர் காரியத்தில் கண்டு பிடிக்கலாம். இந்து சிலேயில் உபவீதம் அங்கவஸ்திரமிருக்கும்— புத்த சிலேயில் உபவீதமில்லே. புத்த சிலே தலேயில் கொண்டை இருக்கும். சமண சிலே தலேயில் கொண்டையிராது. விஷ்ணுகோவிலுக்கருகில் இன்னொரு லிங்கமுள்ள சிவன் குகைக் கோவிலிருக்கிறது. இந்தக் குகைக் கோவில்முன் தளத்திற்கு எதிர்கல்களில் நடனமாடுகிற பூதங்கள் வெட்டப் பட்டிருக்கின்றன. பழைய தமிழ் எழுத்துக்களில் வெட்டப் பட்ட வசனங்களுமிருக்கின்றன. தூரத்தில் ஓர் மலேயடியில் கடம்பர் கோவிலும் தெரிந்தது. இதன்பின் சித்தன்னவாசல் போனோம். ஓர் பிரம்மாண்டமான பாறைமலேயின் பக்கத்தில் ஓர் குகைக்கோவில் வெட்டப்பட்டிருக்கிறது. இந்தக் குகைக்

கோவில்கள் கடும்பாறைகளில் எவ்விதமாக நமது மூத்தோர்கள் வெட்டினார்களென்பது ஓர் ஆச்சரியமான காட்சி. கடும் பாறைகளை குகைபோல் குடைந்திருப்பது மிகவும் வியக்க தக்க காரியமே. இந்த சித்தன்வாசல் குகைக்கோவிலின் விசேஷம் அதில் பலவித வருணங்களோடு அழகாக வரைந் திருக்கும் ஓவியங்களே. தாமரை முதலிய புஷ்பங்கள், மனித உருவங்கள் சித்திரமாக வரையப்பட்டிருக்கின்றன. பல நூற்றாண்டுகள் ஒரு வேளை ஆயிரம் வருஷங்கள் கடந்து போனாலும் இன்னும் மறையாமல் இருக்கின்றன. இந்தக் குகை இப்போது பூட்டப்பட்டிருக்கிறது. ஏனெனில் முன் நாட்களில் இதை திறந்து விட்டிருந்தபோது பார்க்கப்போன பல மூட ஜனங்கள் இந்த சித்திரங்களை பெயர்த்துவிட்டிருக்கிறார்கள். சித்திர வர்ணம், சற்று மங்கி இருந்தாலும் இன்னும் தெளிவாக இருக்கிறது. இந்தக்குகைக் கோவில்கள் சமண மதம் தமிழ் நாட்டில் பரவி இருந்தபோது சமண துறவிகளுக்காக வெட்டப்பட்டன. சமண துறவிகள், கடுந்துறவிகள், மரணம் தங்களுக்கு வரும் என்று எண்ணும் காலத்தில் அவர்கள் இந்த மலைப்பாறையின். செங்குத்தான மலையின் உச்சியில் சமமாக வெட்டப்பட்ட கற்பாறைமேல்போய் இரவும் பகலும் படுத்திருப்பார்களாம். இந்த குகை முன் மண்டபத்தில் (அர்த்தமண்டபத்தில்) இரண்டு பெரிய சமணசிலைகள் வெட்டப்பட்டிருக்கின்றன.

மதுரை:— வைகை நதியோரத்தில் இருக்கிறது. வெகு பூர்வீக நகரம். கிறிஸ்துவின் காலத்திற்கு பல

நூற்ருண்டுகளுக்கு முன் கன்னியாகுமரிக்குத் தெற்கேயுங் கூட பூமி இருந்ததாகவும், அங்கு மதுரையென்று ஒரு நகர் இருந்ததாகவும், பின் காலத்தில் கடல் இந்த பூமியை மூடி விட்டதாகவும் மிக பண்டைய நூல்களில் கூறப்பட்டிருக் கின்றது. இதற்கு குமரிக் கண்டம் என்றுப் பெயர். அழிந்துபோன நகரத்திற்கு கடல் கொண்ட மதுரை என்று பெயர். பின் காலத்தில் கொற்கையும், அதற்குப பின் காலத்திலிருக்கும் மதுரையும், பாண்டிய நாட்டிற்கு பிரதான நகரமாக விளங்கின. மதுரையில் பூர்வீக ரோம நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருந்தன. கி. பி. 81 — 96 மட்டும் ஆண்ட டோமிஷியன் என்ற ரோம மன்னனின் நாணயங்களும் கி. பி. 395 மட்டும் ஆண்ட தியோடோஸியன் என்ற மன்னன் கி. பி. 421 இரண்டாவது தியோடோஸியன் முதலிய ரோம மன்னர்களின் நாணயங்களும் மதுரையில் கண்டு பிடிக்கப்பட்டன. ஆனால் இதற்கு முன்னமே அகுஸ்துராயன் காலமுதல் பாண்டிய நாட்டிற்கும் ரோம ராஜ்யத்திற்கும் சம்பந்தமிருந்திருக்கிறது. பாண்டிய மன்னன் ஒருவர் ரோமராயனுக்கு தன் ஸ்தானாதிபதிகளை அனுப் பினதாக சரித்திரம் கூறுகிறது. முதலாவது மாறவர்மன் சுந்தரபண்டிய மன்னன் கி. பி. 1216-லிருந்து 1237-மட்டும் மதுரையிலிருந்து ஆண்டவன் காலத்தில் மதுரை மிகவும் மகிமையடைந்திருக்கிறது. பாண்டிய ராஜ்யம் மிகவும் விஸ்தீரணமாயிருந்தது. தெலுங்கு நாட்டின் பாகங்களும் தமிழ் நாடு முழுவதும் இவற்றின் ஆதீனத்திற்குள் வந்தன. கொல்லத்திலிருந்து நெல்லூர் மட்டும் இவன் ஆட்சி பரவி

இருந்தது. பின் காலத்தில் பாண்டிய மன்னவருக்குள் பிரிவினையும், சண்டையும் ஏற்பட்டதால் கி. பி. 1310 மாலிக்காபூர் என்ற மகமதிய சேனாதிபதி மதுரையைத் தாக்கி பிடித்துக்கொண்டான். பின் காலத்திலிருந்து இரண்டு பாண்டியர்களும் சிம்மாசனமேற வழக்குப்போட்டு ஒருவன் விஜயநகர சக்கரவர்த்தியின் உதவியை நாடினதால் மதுரை விஜயநகரைச் சேர்ந்த நாயகர் வம்சத்தார் ஆதீனத்திற் குள்ளாய்விட்டது. இந்த நாயகர் வம்சத்தின் மன்னன் ஒருவன் கட்டினதுதான் இப்பொழுதிருக்கிற திருமால் நாயக்கன்மால் என்ற அழகிய அரண்மனை. இதின் பிரமாண்டமான மதில்களும், சிறந்த சித்திரவேலை அமைந்ததும் வதும் மாம் இல்லாத மச்சுக்கூரைகளும் பார்ப்போர் கண்ணைக் கவர்ந்து இன்றும் அவர்களை ஆச்சரியமடையச் செய்கின்றன. மதுரை தற்காலத்தில் பெரிய நகரம். ஜனத்தொகை கொஞ்சங் குறைய 2 இலக்ஷம்போல். மீனாட்க்ஷிகோயில் பிரமாண்டமான திராவிட சிற்ப முறை அமைந்தது. ஆயிரங்கால் மண்டபம் விஸ்தீர்ணமானது. மதுரையிலிருக்கும் மாரி யம்மன் தெப்பகுளம் 2 மைல் விஸ்தீரணமுள்ளது. அங்கே பெரிய கல்லூரிகளும் உண்டு. சங்ககாலத்தில் மதுரை சகல தமிழ் தலைவர்களும் வாழ்ந்த தலைமை ஸ்தாபனம்.

வடஎல்லை பழவேற்காடு. தமிழ் நாட்டின் வட எல்லைப் பாகங்களை நான் நேரில் பார்த்து சற்று ஆராய்ச்சி செய்வது நலம் என்று எனக்கு தோன்றியதால் 16—2—1948-ல் சென்னை (மதராஸ்) நகரிலிருந்து புறப்பட்டு

இப் பாகங்களைச் சுற்றிப் பார்த்து குறிப்புகள் எழுதிக்கொண்டு 20—2—1948-ல்தான் திரும்பினேன். சென்னைக்கு வடக்கே பழவேற்காட்டு ஏரியின் வடஎல்லைக்கரை சமீபமாயிருக்கும் தட என்கிற கிராமத்திற்கு முதலாவது சென்றேன். என்னுடன் பிரயாணம் செய்த திரு. டாக்டர் ரத்தினம் தடவுக்குச் சமீபமான பக்தலாவரம் கிராமப்பெரியார் ராமலிங்க ரெட்டியார் வீட்டில் அன்று தங்க கூட்டிகொண்டு போனார்கள். ரெட்டியாரவர்கள் அன்புடன் உபசரித்து உதவி செய்தார்கள். அன்று இரவு தோணியில் பழவேற்காடு ஏரியில் பிரயாணம் செய்து பழவேற்காடு ஊர் பார்த்துத் திரும்பிப் புறப்பட்டேன். ஆனால் அதிகாலை 4 மணிமட்டும் எதிர்காற்றினிமித்தம் தோணி செல்ல முடியாமல் கானு மைல் மாத்திரம் சென்றேன். பழவேற்காடு ஊரோ 24-மைல் தூரமுள்ளது. ஏமாற்றமடைந்தவனாய் காலை ஆறரை மணிக்கு திரும்பவும் தட சேர்ந்தேன். தோணிக்காரர் தடவில் வசிக்கும் செம்படவர்கள். இவர்கள் தமிழ் மக்களே. செட்டியார்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் பேசுவது மிகவும் கொச்சையான தமிழ். ஏரிக்கு வடக்கே இவர்கள் வசிக்கும் குடிசை வீடுகள் கொஞ்சம் குறைய 70 இருப்பதாகச் சொன்னார்கள். இவர்களைத் தவிர வேறு தமிழ் செட்டிமார் வியாபாரிகளுமிங்கு இருக்கிறார்கள். எனக்குத் தோன்றிய மட்டும் தட கிராமம், அதற்கு வடக்கு பாகங்களை இடைநாடு எனலாம். அதாவது தற்காலத்தில் இங்கு தமிழ் மக்களும் தெலுங்கு பேசுபவர்களும் கலந்து வசிக்கிறார்கள். ஆனால் தெலுங்கு மொழிக்கு இங்கு கடந்த இரண்டு மூன்று

நூற்றாண்டுகளில் செல்வாக்கு இருந்திருப்பதினால் தமிழ் மக்களும் தெலுங்கு பேசுகிறார்கள். ..மீப தூரத்தில் வசிக்கும் ஆதிதிராவிடர்கள் தமிழ் மக்களேயாயினும் தற்காலத்தில் தங்கள் எஜமான்களாகிய தெலுங்கு நிலச்சுவான்கள் மொழியையே பேசுகிறார்கள். அதாவது திருவாங்கூரில் மலையாளமொழி அரசியல் மொழி மதிப்புள்ளதாயிருப்பதால் திருவனந்தபுரம் போன்ற இடங்களிலிருக்கிற தமிழமக்களும் மலை... மொழி... தாஙகளும் பேசுவதுபோல். இவ்வித இடை நாடுகள் அதாவது இருமொழிகள் கலக்குமிடங்கள் திருவாங்கூரிலும், கன்னடம் தமிழ் சந்திக்குமிடங்களிலும் உண்டு. ஆதலால்தான் தட கிராமத்திற்கும் நெல்லூருக்கும் இடையில் தமிழும் தெலுங்கும் கலக்கும் பாகத்தை தற்காலத்தில் இப்படி இடநாடென்னலாம். சித்தூரும் இடை நாடே. தற்சமயம் தமிழ் கோட்டமாகிய செங்கல்பட்டு ஜில்லாவின் வட எல்லை தடகிராமத்தை ஒட்டி இருக்கிறது. இது சம்பந்தமாக தமிழ் நாட்டுப்பூர்வீக சரித்திரத்தை சற்று கவனமாய் அறிவது நலம். தொண்டமண்டலம் என்பது பழைய தமிழ் நாட்டின் ஓர் பாகம். நெல்லூர் (நெல் + ஊர்) அருகில் ஓடும் வடபெண்ணை ஆற்றிற்கும் சேலம் தென் ஆற்காடு ஜில்லாக்களுக்கு இடையில் ஓடும் தென் பெண்ணை ஆற்றிற்கும் நடுவிலிருக்கும் தமிழ் நாட்டின் பாகம்தான் தொண்டை மண்டலம். கரிகாலன் என்ற தமிழ் சோழ மன்னன் தொண்டை நாட்டில் "காடுகெடுத்து நாடாக்கினான்," என்று தமிழ் நூல் கூறுகிறது. ஏர்காடு, ஆற்காடு, ஆலங்காடு, பழவேற்காடு, என்ற பெயர்களின் ஒற்று

மையை கவனிக்கவும். காடுகள் செறிந்துகின்ற இடங்களிவை. இங்கு குறும்பர்கள் தங்கள் ஆடுகளை மேய்ப்பார்கள். இவர்கள் தொண்டை நாட்டை 24 கோட்டங்களாக வகுத்திருந்தார்கள். வடக்கே வட பெண்ணை ஆறு மட்டும் வேங்கடம் (திருப்பதி) திருக்காளத்தி ஊர்கள் உள்பட தொண்டை மண்டலம் பரவியிருந்தது.

வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறுநல்லகம்
(பனம்பாரனார்.)

வேங்கடம் குமரித் தீம்புனல் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே (சிகண்டியார்.)

நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல்நாடு (சிலப்பதிகாரம்.)

அசோகன் காலத்தில் வெட்டப்பட்ட பாறை வெட்டெழுத்துக்களில் இரண்டு தூண்களில் தமிழகத்தைப் பற்றி வருணித்திருக்கிறான்................ "என் நண்பர்களான சேர சோழ பாண்டிய சத்திய புத்திரர் நாடுமட்டும் பௌத்த பிரசாரகரை அனுப்பியிருக்கிறேன்" என்பதே. சத்தியபுத்திரர் கொங்கு நாட்டிலும் (சேலம் சத்திய மங்கலப்பாகங்கள்), சேரநாட்டிலும், சோழர் சோழநாட்டிலும் இருந்திருக்க வேண்டும். தொண்டை மண்டலம் இக்காலத்தில் சோநாட்டின் முக்கியமாம். வடபெண்ணை ஆற்றுக்கு தென்பாகம் அருவா நாடு தொண்டை நாடு என்று அழைக்கப்பட்டது. இது சோழ அரசாட்சிக் குள்ளிருந்தது. இது வடபெண்ணையிலிருந்த புதுக்கோட்டை மட்டும் எட்டியிருந்தது. இதற்கு தெற்கே பாண்டியநாடிருந்தது. அருவாநாடு வடபெண்ணைக்கும் தென்

பெண்ணைக்கும் இடையில் இருந்தது. இது தொண்டைமான் அரசாட்சியிலிருந்தது. தெலுங்குமக்கள் தமிழை அரவம் என்று அழைப்பது அருவம் (அருவ நாட்டுமொழி) என்பதின் திரிபே. தமிழ் மக்களை அரவாமு (அரவநாட்டு ஆட்கள்) என்றும் அவர்கள்மொழியை அரவம் என்றும் வடுகரான தெலுங்கு மக்கள் அழைத்தார்கள். வேங்கடத்தை (திருப்பதியை) அடுத்த நாராயணவனம் என்னும் இடம் தலைநகராக வைத்து ஆண்டுவந்த தொண்டைமான் வேங்கட மலைமேல் பெருமாள் கோயில் கட்டினவன் என்று திருப்பதி ஸ்தல புராணம் கூறுவதும், காளத்தி ஊர் அருகில் தொண்டைமான்நாடு என்னும் ஊர் இருப்பதும், பொன்முகலி ஆற்றுக் கரையில் தொண்டைமான் ஆற்றூர் என்றிருப்பதும் தமிழ் நாடு திருப்பதி மட்டும் எட்டியிருந்ததற்கு ஆதாரமாகும். தொண்டை மண்டலம் பின்காலத்தில் சோழ மன்னர்களானபோது பல்லவ மன்னர் வசமாயிற்று. உத்தேசம் கி. பி. 300.

வேங்கடமலைக்கு வடக்கே மொழிமாறி இருந்தது என்பதை பின்வரும் செய்யுளினாலறியலாம்.

" பனிபடுசோலை வேங்கடத்தும்பர்
மொழிபெயர் தேஎத்தர் "............அகநானூறு.

தற்காலத் தமிழ் நாட்டின் வட எல்லை மட்டும் எட்டும் பழவேற்காடு ஏரியை நான் பார்த்தேன். அது ஒரு காயல் அல்லது கடல் அயல் ஏரி. தாழ்ந்த மணல் பாந்தகரையை சில இடங்களில் கடல் உடைத்துப் பெருகி நிலக்

களெல்லாம் ஓடிப் பாவியிருப்பதால் ஏற்பட்ட காயலிது. கடலிலிருந்து நீர் இந்த ஏரிக்குள் பிரவேசிக்கும் முகத் துவாரங்கள் மிக ஒடுக்கமானவைகளே. இந்தப் பழவேற்காடு ஏரி வட தெற்காக கொஞ்சம் குறைய 50 மைல் நீளமும், குறுக்கே விரிந்த பாகத்தில் 11 மைலும், மிகக் குறுகிய பாகத்தில் 2 மைலும் விஸ்தீரணமுள்ளது. இதனுள் பல தீவுகளை நான் பார்த்தேன். இவற்றில் முக்கியமானவை வடக்கே இருந்து தெற்கே மட்டுமிருப்பவை பின் வருவன. 1. வேகாடு. காடு செடிமரங்களடர்ந்த தீவு. வேட்டையுண்டு காட்டுமிருகங்கள் வசிக்குமிடம். இங்கு செட்டிமார், ரெட்டிகள் இருக்கிறார்கள். இது தடவிலிருந்து 7 மைல் தூரத்தில் ஏரிக்குள்ளிருக்கிறது. என் நண்பர் ராமலிங்க ரெட்டியார் மூந்தின தினமிரவு சிறுத்தைச் சுட இத்தீவு போய் திரும்பினார். 2. கஸ்பா தீவு. 3. சுண்ணாம்புக் குளம். 4. மாங்கோடு. 5. தோணி ரேவு. 6. பழவேற்காடு இப்படி பல தீவுகள். பழவேற்காடு பெரிய ஊர். பொன்னேரிக்கும், பழவேற்காட்டிற்கும் நான் போன விவரங்களை இங்கு விரிவாகக் கூறுகிறேன். தடவுக்கு தெற்கே இருக்கும் இழுவூர், கும்மிடிபூண்டி, காவரப்பேட்டை, ஆரம்பாக்கம் என்ற எல்லா ஊர்களும் தமிழ் மக்கள் வசிக்கும் இடங்களே. தற்காலத்தில் தமிழ் நாட்டிலிருப்பனவையே. 17ம் தேதி பொன்னேரியில் செலவிட்டேன். இங்கு எல்லாம் தமிழ் மயமே. எங்கும் தமிழ் பேச்சுத்தான். செங்கல்பட்டு ஜில்லாவில் பொன்னேரி ஒரு தாலுக்கா தலைமைஸ்தானம். பொன்னேரியில் உயர்தர பாடசாலை ஒன்றிருக்கிறது. பொன் ஆறு என்ற ஆறும்

இதனருகே வடக்கே ஓடுகிறது. அகஸ்தீஸ்வரன் கோயில் என்ற ஒரு புராதன கோயிலையும் போய்ப் பார்த்தேன். பல்லவ சிற்ப அமைப்பான கண் கோபுரமுள்ளது. இது அகஸ்தியர் காலமுதலுள்ள புராதன கோயிலென்று இதன் தமிழ் பூ சா ரி என்னிடம் சொன்னார். இரவு புறப்பட்டு திரிபாலய வனம் ஊர் போனேன். இங்கும் ஒரு பெரிய ஆலயமிருக்கிறது. இதற்கும் பழவேற்காட்டுக்கும் 6 மைல் தூரம். சேறும் உளையும் எங்கும் பரவியிருந்த இந்த பாகத்தின் வழியாகத்தான் மாட்டுவண்டியில் போனேன். மிக்க கஷ்டமான பிரயாணம்தான். மாடுகளின் கால்களும் கட்டை வண்டியின் சக்கரங்களும் உளையில் பதிந்து அவற்றை வெளியே கிளப்புவது அரியபெரிய பிரயாசமாய்த் தானிருந்தது. மழைகாலத்தில் இந்த இடமெல்லாம் நீர் நிரம்பியிருக்குமாம். அப்பொழுது பழவேற்காடு மெய்யாகவே எப்பக்கமும் நீர் சூழ்ந்ததாகவேயிருக்கும். அப்போது தோணியில்தான் பழவேற்காடுப்போக முடியும். தற்சமயம் திரிபாலய வனத்திலிருந்து தோணி இல்லாமல் போகக்கூடியதாயிருந்தது. பழவேற்காடு சுற்றிப்பார்த்தேன். பெரிய ஊர்தான். எல்லாம் தமிழ் மக்களே. இங்கு தமிழ் பேசும் முஸ்லீம்களும் (மரக்காயர்கள்), மீன் பிடிக்கும் செம்படவர்களான ரோமான் கத்தோலிக்க தமிழ் கிறிஸ்தவர்கள், வன்னியர்கள், செட்டிமார்கள், முதலிமார்கள் முதலியவர் இங்கிருக்கிறார்கள். செட்டிமார்தான் செல்வாக்குடையவர்கள். மகம்மதியர்களுக்குப் பெரிய வீடுகளிருந்தாலும் அநேகம் பாழாய்க் கிடக்கின்றன,

ஊர் பழைய காலத்து மகிமையாயிருந்து இப்போது க்ஷீணித்துப்போனதாகக் காணப்பட்டது. ஊரில் எங்கும் உப்புத் தண்ணீர்தான், நல்ல தண்ணீர் அடுத்த கிராமத்திலிருந்து கொண்டுவந்து ஒரு மண்குடம் அரை அணு விலைக்கு விற்கப்படுகிறது. இங்கு 1609-ஆண்டில் ஐரோப்பா தேசத்து டச்சுக்காரர்கள் ஒரு முதலியாரிடம் நிலம் வாங்கி கோட்டை கட்டித் தங்களை பலமாக ஸ்தாபித்துக் கொண்டார்கள். 1745ம் ஆண்டில் பிரிட்டிஷ்காரர் இவர்களை முறியடித்து இந்த இடத்தை தங்கள் ஆதீனமாக்கிக் கொண்டார்கள். 1745ல் கெல்டிரா என்ற டச்சுக்கோட்டையை தாங்கள் பிடித்துக்கொண்டதைக் குறித்து ஒரு ஞாபகச்சுவர் கட்டி பிரிட்டிஷார் அதில் இதை விளம்பரம் செய்திருக்கிறதை நான் பார்த்து வாசித்தேன். ஊருக்குச் சற்று வடக்கே டச்சுக்காரர் கல்லறை தோட்டமும், சுற்றி அகழ் வெட்டப்பட்டதும் மண் மேடாய் இடிந்து கிடக்கும் டச்சுக்காரர்கள் கோட்டையின் சிற்சில மதில் பாகங்களையும் பார்த்தேன். கல்லறைகளில் நான் வாசித்து பார்த்தமட்டும் அங்கே 1631லிருந்து 1699ம் ஆண்டு மட்டும் புதைக்கப்பட்ட டச்சுக்காரர் கல்லறைகளைப்பார்த்தேன். கல்லறைகள்மேல் கோபுரம் மண்டபங்கள்போல் கட்டடங்கள் இருக்கின்றன. இதற்கும் புராதனமான இன்னொரு கல்லறை சற்று வடக்கே இருக்கிறது. இங்கிருக்கிற ரோமான் கோவில் முகப்பிலும் பழைய ஒரு கல்லறையைப் பார்த்தேன். சற்று தூரம் நடந்து போய் பழவேற்காடு ஏரிக்கும் சமுத்திரத்திற்கும் சம்பந்த முண்டாக்கும் முகத்துவாரம் என்ற கடல் நீர் சந்தியையும்

பார்த்தேன். பல படங்களுமெடுத்தேன். பழவேற்காடு கிராம முன்சீப்பைச் சந்தித்து ஊரைப்பற்றி விசாரித்தேன். டச்சுக்காருக்கு கோட்டை கட்ட இடம் கொடுத்தது ஒரு நவாப் என்று அவர் சொன்னார். ஊரின் ஜனத் தொகை 4800 பேராம். இதில் முஸ்லீம்கள் 800 பேர் மாத்திரம் பழவேற் காட்டு ஏரியிலிருந்து வடக்கே கிருஷ்ணா நதிமட்டும் கால்வாய் ஓடுகின்றன. தோணிகள் வியாபாரப் பொருள்களோடு பல இடங்கள் செல்லும். அப்படியே பழவேற்காட்டில் இருந்து சென்னை (மதராஸ்)க்கு அருகே இருக்கும் கத்தியாவாக்கம் துறைமுகமட்டும் (என்னூர் மட்டும்) தோணிகள் ஓடு கின்றன. அதாவது இங்கு 14-மைல் தூரத்திற்கு தோணிகள் செல்லுகின்றன. சென்னைக்கு விறகு காய்கறிகள் ஆகா ராதிகள் இத்தோணிகள் மூலமாக இலகுவாய் வர இக்கால் வாய்கள் பேருதவி. மேல்கூறிய பிராந்தியங்களில் உப்ப ளங்கள் அதிகம் இருக்கின்றன. நானும் 18—2—1948 இரவு பழவேற்காட்டிலிருந்து தோணியில் பிரயாணம் செய்து மறுநாள் அதிகாலை சென்னை சேர்ந்தேன்.

சென்னபட்டினம் (மதராஸ்) :— தமிழ் கோட்ட மாகிய செங்கல்பட்டு ஜில்லாவிலிருக்கும் சென்னபட்டினம் பின்வரும் பல புராதன தமிழ் நாட்டு ஊர்கள் சேர்ந்து ஒன்ருகப்பட்ட ஒரு தற்கால நகரம்.

1. மயிலாப்பூர். 2. திருவல்லிக்கேணி. 3. நுங்கம் பாக்கம். 4. எழும்பூர். 5. சேற்றுப்பட்டு. 6. மாம்பலம். 7. வெப்பேரி. 8. புரசைபாக்கம், புதுப்பாக்கம். 9. பிரம்பூர். 10. கீழ்ப்பாக்கம். 11. அமைந்தகரை. 12. சைதாபேட்டை

முதலிய பலஊர்கள் அடங்கியது, தற்கால சென்னை. இதோடு திருவொற்றியூர், எண்ணூர், கத்திப்பாக்கம், முத்தியாலு பேட்டை, தொண்டையார்பேட்டை, பல்லாவரம், ஆலந்தூர் முதலிய அடுத்திருக்கும் இடங்களையும் சேர்க்கலாம். தற்கால சென்னை நகரிலும் கொஞ்சம் குறைய முக்கால் பங்கு தமிழ் பேசுபவர்களே வசிக்கிறார்கள். பூர்விக தமிழ் நாட்டில் இந்தப் பிராந்தியம் தொண்டைமண்டலத்தின் ஒரு பாகமாயிருந்தது. கி. பி. 1647-ம் ஆண்டில் எழுதப்பட்ட பத்திரமொன்றில் "தொண்டை மண்டலத்துப் புழல் கோட்டத்து ஞாயிறு நாட்டு சென்னபட்டிணம்" என்று இது குறிக்கப்பட்டிருக்கிறது. ஞாயிறுநாடு என்பது தமிழ்நாடு.

மயிலாப்பூர் :— முதல் இரண்டு நூற்றாண்டு காலத்தில் இது சிறந்த துறைமுகமாயிருந்தது என்பது மேல்நாடு யாத்திரிகன் தாலமி எழுதியிருப்பதால் தெரிகிறது. அவன் இதை "மயிலார்பான்" என்றழைக்கிறான். முதல் நூற்றாண்டு போலிருந்த திருவள்ளுவர் மைலாப்பூரில் பிறந்தவராக எண்ணுவார்களுமுண்டு. தமிழ் நாட்டு ஆழ்வார்களில் ஒருவரான சிறந்த பேயாழ்வார் பிறந்த இடம் மயிலாப்பூரே. இவருடைய கோவிலும் இங்குண்டு.

ஏழாம்நூற்றாண்டில் திருஞான சம்பந்தரும் மயிலாப்பூர் சிவன் கோவில் பதிகம் பாடியிருக்கிறார்.

மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலைக்
கட்டிட்டம் கண்டான் கபாலீச்சரமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்(கு)
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்

(திருஞானசம்பந்த மூர்த்தி.)

திருவல்லிக்கேணி :— பூர்வீக காலத்தில் இங்கிருந்த அல்லிக்குளம் பெயரால் திருஅல்லிக்கேணி என்பது மருவி திருவல்லிக்கேணி என்ருயிற்று. இது வைணவ ஸ்தானம். பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் இதைக் குறித்து பாடியிருக்கிருர்கள். பல்லவ அரசன் நந்திவர்மன் கல்வெட்டினுல் இது 8-ம் நூற்ருண்டுக்கு முன்னமேயே இருந்த தென்றறியலாம்.

எழும்பூர் (எழுமூர்), நுங்கும்பாக்கம் :— என்ற இடங்கள் 11-ம் நூற்ருண்டு கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. புழல்கோட்டத்தில் எழுமூர் என்பது பெரியது. 10-ம் நூற்ருண்டு பார்த்தி வேந்திர கரிகாலன் என்னும் சோழ மன்னன் கல்வெட்டு தங்கசாலைத் தெருவு முனையில் முன் காலத்தில் இருந்ததின் ஒரு உடைந்த பகுதி சென்னை பொருள்காட்சி சாலையில் வைக்கப்பட்டது. சேற்றுபட்டும் எழும்பூரைச் சேர்ந்ததே. மாம்பலம் தொடர்ச்சியாக சைதா பேட்டை மட்டும் எட்டினது. வில்லிவாக்கம் பழைய புழல் கோட்டத்து அம்பத்தூர் நாட்டிலிருந்தது. கி. பி. 7-ம் நூற்ருண்டில் சைவசமய பக்தர்களாகிய திருநாவுக்கரசு, சம்பந்தர் திருவொற்றியூரைப்பற்றி பாடியிருக்கிருர்கள்.

வேலைக்கடல் நஞ்சம் உண்டு வெள்ளேற்ருேடும் வீற்றிருந்த
மாலைச் சடையார்க் குறைவிடமாவது வாரிகுன்ரு
ஆலைக்கரும்பொடு செந்நெற்கழனி அருகணைந்த
சோலைத் திருவொற்றியூரை எப்போதுந் தொழுமின்களே.

(அப்பர்.)

'பாட்டுப் பாடி பாவித்திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமும் திமிலும் கரைக்கே
ஓட்டுந் திரைவாய் ஒற்றியூரே. (சம்பந்தர்.)

பட்டிணத்தாரும் இங்கே சேர்ந்தார். இது புலியூர் கோட்டத்தைச் சேர்ந்தது. சோழர் காலத்தில் இது சிறந்த சிவஸ்தலம். இங்கு சிவன் கோவில் சுவர்கள்மேல் ஏராளமான கல் வெட்டுகளிருக்கின்றன. சோழ ராஜ்யம் க்ஷீணித்த பின் விஜயநகர ஆட்சி தெற்கே புகுந்து 14-ம் நூற்றாண்டின் காலத்தில் இப்பாகங்கள் எல்லா தெலுங்கு ஏகாதிபத்தியமாக விஜயநகர ஆதீனமாயிற்று. தெலுங்கு மக்கள் வரவும் தெலுங்கு மொழி புகவும் இடமாயிற்று. விஜயநகர அரசாட்சிக் குட்பட்ட ஒரு சிற்றரசன் காஞ்சிபுரத்துக்கு சமீபமான ஒரு ஊரில் ஆண்டுவந்தான். இந்த அரசன் மரபில்வந்த வெங்கடப்ப நாயகர் என்பர் 1639 ஆண்டில் வியாபாரத் திற்காக ஆங்கிலேயருக்கு ஒரு இடம் கொடுத்தார். இங்கு அவர்கள் கோட்டைக்கட்டி தங்கள் ஆட்சியை வரவர உறுதிப் படுத்திக்கொண்டார்கள்.

சென்னைக் கேசவப் (பெருமாள் கோவில்) பட்டிணம் என்ற பெயர் மருவி சென்னபட்டிணம் என்றாயிற்று. சென்னப்பன் என்ற ஒரு ஆள் பெயரால் வந்தது என்பாரு முண்டு.

வட எல்லை கவனித்தோம் தெற்கே தென் திருவாங் கூரிலிருக்கும் நெய்யாற்றிக்குத்தென்பாகமும், யாழ்பாணமும் தமிழ் மக்கள் வசிக்கும் நாடே.

## அத்தியாயம் 4.

## தமிழ் நாட்டுப் பெரியார்கள்.

திருவள்ளுவர் சரித்திரம்:— தமிழ் நூல்களில் மிக பிரசித்துப்பெற்றது திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் என்பதே என்று வற்புறுத்த அவசியமில்லை. இதைத் தமிழன் மறை என்பர்.

வள்ளுவரின் காலம்:— ஊர், பிறப்பு, வம்சம் சமயம் முதலியவற்றைப்பற்றி பலர் பலவிதமாக கூறுவதுமுண்டு. அளவுக்கு மிஞ்சிப் பெரியாருடைய சரித்திரத்தை அதிசய அலங்காரத்துடன் வருணிக்க முயல்வோரால் சரித்திரம் உண்மை நிலை குலைந்து சிதைந்துப்போகிறது என்று சொல்லுவது மிகையாகாது. ஆதிப்பெரியார் விஷயங்களில் பலர் கூறுவதுபோல் வள்ளுவர் சரித்திரத்தையும் இவ்விதமாக கட்டுக்கதை கூறிப் புரட்டுகிறவர்களும் உண்டு என்பது விசனிக்கத்தக்கதே. மதுரைச் சங்கங்களில் கடைச் சங்கத்து புலவர் சிலர் வள்ளுவரைப் பாராட்டி பாடியிருக்கிறார்கள். அதனால் இவர்கள் காலத்திற்கு முன்னமே வள்ளுவர் இருந்திருக்கிறார். என்று கூற இடமுண்டு. கடைச் சங்கத்தார் நூல் திரட்டு களில் திருக்குறளும் ஒன்றே. பின் வருபவை சங்கத்திரட்டு நூல்கள். பத்துபாட்டு, எட்டுத்தொகை, பதினென்கீழ் கணக்கு கலித்துறை, புறநானூறு முதலிய பழைய நூல்களிலும் குறளை மதிப்புடன் பேசியிருக்கிறார்கள். கடைச் சங்கப்புலவராலும் குறள் வசனங்கள் அறத்

தெய்வத்தின் சொற்களாகவும், வள்ளுவர் தெய்வப் புலவ ராகவும் வாழ்த்தப்படுவதைக் காண்கிறோம். இதனால் வள்ளுவர் இவர்களுக்கு முற்பட்டவரே என்று கருத இடமுண்டு. பின் வருபவைகளில் திருக்குறளைக் குறித்து சங்கச் செய்யுட்கள் எடுத்துரைப்பதைப் பார்க்கலாம்.

சிறப்பீனும் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு.
சிறப்புடை மறபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல.

(புற நானூறு.)

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.
நட்டார்க்கு நல்ல செயலினிது எத்துணையும்
ஒட்டாரை யொட்டிக் கொள்வதனின் முன்னினிதே.

(இனியவை நாற்பது.)

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப்படும்.
அற்றது பற்றெனிலுற்றது வீடு.

(திருவாய்மொழி.)

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று — நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல்.

(உமாபதிசிவாசாரியர் நெஞ்சு விடுதூது.)

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.
முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றிகாண்

(சிலப். வஞ்சினமாலை.)

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.
தெய்வம்தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வம் தொழுந்தகைமை திண்ணமால் — தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.

(சிலப். கட்டுரை காதை.)

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்.

(மணிமேகலை காதை.)

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பாடிற்றே யாயிழை கணவ. (புறம்.)

மேற் கூறிய செய்யுட்களின் பொருளையும், நடையையும் கவனித்து நோக்கினால் குறளே மற்ற நூல்களுக்கு மூலமாய் இருந்திருக்கவேண்டுமென்று தெளிவாகும். மணி

மேகலை என்ற பழைய நூலை இயற்றிய சீத்தலைச்சாத்தனார் குறளை பாராட்டிப் பாடியிருப்பது அதின் பழமையை தெளிவாக்குகிறது. கடைச்சங்க புலவரான சாத்தனார் பொய்யில் புலவன் பொருளுரை என்றும், ஆத்தூர்களால் புறம்பாடிய ஆலத்தூர்களால் அறம் பாடிற்றேயென்றும் பாடிய இந்த பழம் புலவர் வள்ளுவருக்கு பிந்தின காலத்தவரோ என்பது வெள்ளிடை மலையாம். தொல்காப்பியம் முதற் சங்க காலத்தில் மதிப்புடன் எண்ணப்பட்டிருந்தாலும் அதன் விதிகளுக்குமாற்ற பட்ட வழக்குகள் அச் சங்கநூலில் பார்க்கவும். (உதாரணம்) தொல்காப்பியத்தில் சகரம் மொழிக்கு முதலாகாது என்ற விதிஉண்டு. ஆனால் கடைச்சங்க இலக்கியங்களில் சகரத்தை முதலாவதாகக் கொண்ட சொற்கள் தமிழ் மொழியில் பலவுண்டு. திருக்குறளில் சமன் சலம் என்ற இரண்டொன்று வடசொற்கள் தவிர தனித்தமிழ் சகரத்தை முதலாவதாகக்கொண்டு வழங்கிய மொழிகள் காண்பதரிது. இதனால் தொல்காப்பிய விதிகளை விலக்கி நடந்த கடைச் சங்க காலத்திற்கு முன்னமேயே, அவ்விதிகளை அநுசரித்து வந்த இடைச்சங்க பழைய காலத்திலேயே வள்ளுவர் இருந்திருக்கவேண்டுமென்று யூகிக்க இடமுண்டு. இவர் பிறந்த ஜாதியைக் குறித்து மிகுந்த தர்க்கம் உண்டு. நமது நாட்டில் பூர்வீக பெரியார் இயற்றிய நூல்கள்மட்டும் பேணிப்போற்றுவதே யன்றி அந்த நூல்களை இயற்றியவரின் வாழ்க்கைக் குறிப்புகளை பாராட்டும் வழக்கம் கிடையாது. இதனால் வள்ளுவரின் ஜீவிய சரித்திரத்தை திட்டவட்டமாக அறிவதற்கு வேண்டிய சான்று போதாது.

வள்ளுவர் பிறப்பு :— வள்ளுவர் ஓர் உயர் ஜாதியும், தாழ்ந்த ஜாதியும் கலந்து பிறந்தவர் என்று சிலர் சொல்லுவதற்கு ஒரு ஆதாரமுமில்லை. வள்ளுவர் ஆதித்திராவிட (பறையர்) வகுப்பினரைச் சேர்ந்தவர் என்பது நமது நாட்டில் பொதுவான அபிப்பிராயம். பறையருக்குள் புரோகிதர்களாயிருந்தவர்களுக்கு வள்ளுவர் என்ற பெயர்.

மெய்த்திரு வள்ளுவனார் வென்றுயர்ந்தார், கல்விநலம்
துய்த்தசனங்கத் தார்தாழ்ந்தார், சோமேசா — உய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றாரனைத்திலர் பாடு.

இதையும் சில தமிழ் வித்துவான்கள் மறுக்கிறார்கள்.

வள்ளுவரின் ஊர் :— சிலர் இவர் மயிலாப்பூர்வாசி யென்பார். இங்கிருந்து கடைச் சங்கத்தாரை வென்று அடக்குவதற்காக ஒரு முறை இவர் மதுரை சென்றதாக சிலர் சொல்லுவார். மதுரை சென்றபோது நடந்ததைக் குறித்து ஒரு கதையும் உண்டு. அக்காலத்தில் ஒரு நூலாசிரியர் தமது நூலை அரங்கேற்றும்படி சங்கப் புலவரின் முன் இயற்றிய நூலைப் படிக்கவேண்டும். சங்கப் புலவர் ஒரு தெப்பத்தில் ஆசனம் வகித்து வீற்றிருப்பார். வள்ளுவர் நூலைக்குறித்து அவர்கள் இகழ்ச்சியாக பேசினார்களாம். வள்ளுவர் இயற்றிய நூல் அவர்கள் வீற்றிருந்த தெப்பத்தில் வைத்தவுடனே தெப்பம் வள்ளுவரின் நூல் அளவுக்கு சுருங்கி விடவும், சங்கப் புலவர்கள் ஆபத்துக்குள்ளானார்களாம்! வள்ளுவர் தயவினால் ஆழ்ந்து

போகாதபடி மீட்கப்பட்டார்களாம். வள்ளுவரின் உடன் பிறந்த அக்காள் கலைமகளாகி விளங்கிய ஔவையென்ற பெருமாட்டி. வள்ளுவரின் தாயின் பெயர் ஆதி. சங்கப் புலவர்களை வென்றபின் வள்ளுவர் மயிலாப்பூருக்குத் திரும்பினதாய் இக்கதை கூறுகிறது. ஆனால் திருவள்ளுவமாலை செய்யுளில் ஒன்று வள்ளுவர் சொந்த ஊர் மதுரையென்று கூறுவதும் உண்டு. தமிழில் பாண்டித்தியம் அடைந்த தற்கால ஒரு பெரிய வித்துவானும் வள்ளுவர் மதுரை வாசியே என்று வற்புறுத்தி நியாயங்கூறி பாராட்டுகிறார்.

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப — இப்பக்கம்
மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

## கம்பர்.

‘கல்வியில் பெரியவர் கம்பர்’ — ‘கவிச்சக்கரவர்த்தி கம்பர்’ — ‘விருத்த மென்னும் ஒண்பாவில் உயர் கம்பர்’ — ‘கம்ப நாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கிதயங் களியாதே’ — ‘யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்...........பூமிதனிலே யாங்கணும் இருந்ததில்லை’ — என்றெல்லாம் கம்பன் புகழ் பெற்றவர். ஆனால், அவரைப் பற்றிய கதைகளெல்லாம் கட்டுக் கதைகளாகவேயிருக்கின்றன. அக்கதைகள், அவர் காவியத்தின் உள் சான்றுக்கும் சரித்திர ஆராய்ச்சிக்கும் கொஞ்சமும் பொருத்தமில்லை. ஒருவாறு அவரைப் பற்றி சொல்லக்கூடியதெல்லாம், தஞ்சாவூர் ஜில்லா மாயவரத்துக்குச் சமீபமாயுள்ள தேரழுந்தூரில் பிறந்தார். திருவெண்ணை

நல்லூர் சடையப்பவள்ளல் அவரைப் போஷித்தார். சாலிவாகன சகாப்தம் 807-க்குச் சரியான கி. பி. 885-ம் வருஷத்தில் தமது ராமாயணத்தை அரங்கேற்றினர். ஆகவே, முதலாவது ஆதித்தசோழன் பல்லவரை ஜெயித்து தொண்டை மண்டலத்தைக் கைப்பற்று முன்னரே கம்ப ராமாயணம் முற்றுப் பெற்றது.

பண்டைக் காலத்துத்தமிழர் வீரத்தையும் காதலையுமே போற்றினர். அவைகளைத்தான் பொருளெனக் கருதினர். கி. பி. 7-வது நூற்றாண்டு முதல் தமிழர் பக்திப் பிரவாகத்தில் மூழ்கினர். வடமொழி பயிற்சியில் ஈடுபட்டனர். வடமொழித் தென்மொழி பயிற்சியின் பயனால் கற்பனாசக்தியும், மனோபாவமும், இதயக் கிளர்ச்சியும் விசாலமாயின. வடவேங்கடம் முதல் தென் குமரி வரை ஒரே பாபரப்பும் பரவசமும் தமிழரை ஆட்டின. வீரமும், காதலும் விளைந்த தமிழ் நிலத்தே, பக்தியும் அருளும் விளைவு பெறத் தொடங்கின. ஆரியர் நாகரீகமும், தனித் தமிழர் நாகரீகமும் பேதமின்றி கலந்து ஒன்றுபட்டு, இரண்டு நதிகள் ஒன்றுகூடிப்பெருகி ஓடுவதைப் போலாயிற்று. அக்காலத்திலேதான் சம்பந்தர், திருநாவுக்கரசு, மாணிக்க வாசகர், நம்மாழ்வார், சங்கராச்சாரியார் முதலிய மகான்கள் தோன்றினர்கள். மகாபலிபுரம் அற்புத சிற்ப வேலைகளைத் தமிழர் செய்தார்கள். காஞ்சிபுரம், தஞ்சை, சித்தன்னவாசல் முதலிய இடங்களில் காணப்படும் ஜீவகளையுள்ள ஓவியங்களையும் சித்தரித்தார்கள். இப்படிப்பட்ட சிருஷ்டி இயக்க காலத்தில்தான் கம்பரும் தோன்றினர்.

கம்பர் பாடிய ராமாயணம் வெறும் வழி நூலல்ல. வடமொழியிலுள்ள வால்மீகி ராமாயணத்தின் கதைப் போக்கை மட்டும் எடுத்துக்கொண்டு, கம்பர் ஓர் புதுக் காவியமாகச் செய்துவிட்டார். திருவள்ளுவர் செய்த குறளின் கொள்கைகளை அடிப்படையாக அனுசரித்து, தமிழரின் நாகரீகத்தைத் தழுவி ராமாயணம் பாடியிருக்கிறார். கதாநாயகனான ராமனை பரம்பொருளாக்கி விட்டார். வால்மீகி ராமாயணத்தில் ராமனை ஓர் வீரபுருஷனாக மட்டும் காட்டி இருக்கிறது. கம்பனோ, ராமனை பரம்பொருளே மானிட ரூபமெடுத்து வந்ததாக சிருஷ்டித்திருக்கிறார். இதுகாரணமாகத் தமிழ் ராமாயணம் ஓர் புதிய ஆதி நூல் போலாகும். அக்காலத்திலுள்ள வழக்க பழக்கங்கள், இசைக் கலை, ஓவியக் கலை, சிற்பக் கலை முதலிய கலைகளின் சுவைகளுள், தமிழரின் உயரிய எண்ணங்கள், நோக்கங்கள், நம்பிக்கைகள், வீரங்கள், காதல்கள், தெய்வீகப் பெண்மை, போராண்மை, ஒழுக்கங்கள் காவியத்தில் நிரம்பக் காணலாம். மக்களது உள்ளத்தில் எத்தனை வகையான உணர்ச்சி பேதங்கள் எழக்கூடுமோ அவை அனைத்தும் காவியத்தில் பிரதிபலிக்கின்றன. அகத்தும் புறத்தும் காணப்படும் சவுந்தரிய வைபவங்கள் சித்தரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன. பாவனை சக்தி எல்லையின்றி அகன்று பரந்துகிடக்கின்றது. எவ்வகை நிலையினையும், மனக் கண்முன்னே தெளிவாய் புலப்படும்படி சித்தரித்திருக்கிறார். கவித்துவ சக்தியின் வேகத்தால் இனிய கருத்துக்கள் அடுத்தடுத்து எழுந்து ஒன்றோடொன்று இசைந்து ஒழுகி ஓடுகின்றன. "இன்சுவைகனிந்த நன் மொழியின் இனிமை

யினையும், அழகினையும், ஆற்றலையும் இந்நூற் காண்பதுபோல் வேறு எங்கும் காணமுடியாது.

கம்பருக்கு தமிழ் நாட்டினும், தமிழ் மொழியின் பேரிலும் உள்ள அபிமானத்திற்கு எல்லை இல்லை. அவர் வடமொழியின் அமிர்தத்தை உண்டுகளித்து தன் மொழியை குறைவாய் மதிக்கவில்லை. வேதங்கள் உடைய வடமொழியிலும் தமிழ் உயர்ந்ததென்றும், உலகம் ஓதும் வழக்கினும் மதிக்கவியினும் அது சிறந்ததென்று போற்றியிருக்கிறார். தமிழ் நாட்டு இயற்கை நலங்கள் அவரை குடிகொண்டன.

'தண்ணீரும் காவிரியே
தார் வேந்தன் சோழனே
மண்ணாவதும் சோழ மண்டலமே.'

என்பது சோழ நாட்டினரின் அபிமானச் சொல். கம்பரும் எந்த ஆற்றைபற்றி சொன்னாலும், பொன்னி (காவேரி) என்னலாய ஆறு என்கிறார். புனல்நாடு (சோழநாடு) புண்ணியபூமி.

'அத்திருத்தகு நாட்டினை யண்டர் நா(டு)
ஒத்திருக்கு மென்று ரைை யொக்குமோ!
எத்திறத்தினு(ம்) ஏழுலகும் புகழ்
முத்து முத்தமிழுந் தந்து முற்றலால்'

என்று பாண்டிய நாட்டை சிறப்பித்திருக்கிறார். பாண்டிய நாடு தேவலோகத்திலும் சிறந்ததாம். ஏனென்றால், தேவலோகத்தில் கிடையாத முத்தும், முத்தமிழும் பாண்டிய நாட்டில் உள்ளனவாம்.

முப்பது முக்கோடி தேவர்களை பூசிக்கிற இந்நாட்டில் தேவர்களையெல்லாம் 'மானுடம' வென்றதென்று எக்களிப் போடு கூறுகின்றார். மானிடர் தேவர்களும் தொழும் தேவர்களாகும் வழியும் காண்பித்திருக்கிறார்.

'ஆவுக்காயினும் அந்தணர்க்காயினும்
யாவர்க்கேனும் எளியவர்க்காயினும்
சாவப் பெற்றவரோ தகைவானுறை
தேவரும் தொழும் தேவராகுவார்.'

யாவர்க்கேனும் எளியவர்க்காயினும் தன் உயிரையும் கொடுப் பவர்களே தேவர்களும் தொழும் தேவர்களாகுவார்களாம்.

கம்ப ராமாயணத்தை வாசியாதவர்கள் அதை ஓர் புராணக்கதை என்று புறக்கணிக்கலாம்; ராம பக்தியுடையோர் அதை ஓர் பக்தி நூலாகமட்டும் கருதலாம்; இலக்கிய சுவையில் ஈடுபட்டோருக்கு அது ஓர் நல் விருந்து; சரித்திர ஆராய்ச்சியாளர்களுக்கு மத்திய கால இந்து தேச சரித் திரத்தின் ரசத்தை அறிவதற்கு இன்றியமையாதது; தற்கால பிரச்சினைகளில் ஈடுபட்டோர் அவை வாசித்து பயன் படலாம். சமத்துவம், சுயாதீனம், தீண்டாமை ஒழித்தல், சகோதர தத்துவம், ஒற்றுமை முதலிய பிரச்சினைகளை கம்பர் கையாடியிருக்கும் முறை ஆச்சரியப்படத் தக்கது. கக்ஷிகளும், பிரதிகக்ஷிகளும், சமுதாயப் போட்டிகளும் நிறைந்த இக் காலத்திற்கென்றே கம்பர் சகோதரத்துவத்தை நம் நாட்டி னர்க்குப் போதிப்பதற்காகவே காவியம் எழுதப்பட்டது போல் காவியக்கட்டு அமைந்திருக்கிறது. சகோதரத்து வத்தை அடிப்படையாகக்கொண்டு கம்ப ராமாயண ரசனையை (architectonics) ஆராய்ச்சி செய்யலாம்.

கம்பர் காவிய லோகத்தை சூர்யமண்டலத்திற்கு ஒப்பிடலாம். கதாநாயகனை ராமச்சந்திரனை சூரிய ஸ்தானத்தில் வைத்திருக்கிறார். காவியத்தின் ஏனைய முக்கியப் பாத்திரங்களெல்லாம் கிரகங்கள்போல் ராமனையே சுற்றி வருகின்றன. சகோதரத்துவம் என்னும் ஆகிராணச் சக்தியால் அவ்வாறு இணைக்கப்பட்டிருக்கின்றனர் ராமன்,

'தம்பியர் அல்லது தனக்கு வேறுயிர்
இம்பரில் இலதென எண்ணி எய்த்தவன்.'

ராமனுக்குத் தன் தம்பியர்தான் உயிர்நாடி. இக்கொள்கையுள்ள ராமனுக்குப் போட்டியாக சிற்றன்னை கைகேயி தன் மகன் பரதனுக்கு பட்டமளிக்கவும், ராமனைக் காட்டுக்கனுப்பவும் சூட்சி செய்துவிடுகிறாள். அதைக் கேட்டதும் ராமன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை.

'என் பின்னவன் பெற்ற செல்வம் யான் பெற்றதன்றோ!'

என்று சொல்லி, உடன் காட்டுக்குப் புறப்படுகின்றார். அதை கேட்ட தம்பி இலக்குவன் சீற்றங்கொள்கின்றான், அவனையும் சாந்தி செய்கிறார். இலக்குவன் தாய் சுமித்திரை அவனைப் பார்த்துச் சொல்கிறாள்,

'ஆகாதது அன்று ஆல் உனக்கு அவ்வனம் இவ் அயோத்தி
மாகாதல் ராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை; என்றே
ஏகாய் இனி இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்.'

(ஏதம் = குற்றம்.)

சீதையும் கூடப்போக ஆசை படுகின்றாள். கானகத்தின்

அகோரங்களைச் சொல்லி சீதையை இருக்கும்படியாய் எவ்வளவோ சொல்லியும், அவள்,

'நின் பிரிவினும் சுடுமோ வெங்கானம்.'

என்று சொல்லி அவளும் புறப்படுகின்றாள். மூவரும் காடு செல்கின்றார்கள். அது கேட்ட தந்தை தசரத சக்கரவர்த்தி புத்திர சோகத்தால் மரணமடைகிறார்.

ராமன் மூவரும் கங்கா நதிக்கரையில் ரிஷிகளுடன் அளவளாவிக்கொண்டிருக்கிறார். கங்கையில் ஓடமிடும் குகன் என்னும் வேடன், "ஊனுடன் மீன் நுகர்ந்து நாற்ற மேய" உடம்பினன், தன் பரிவாரங்களுடன் பார்க்க வருகிறான். ராமன் அமுதுக்காக தேனும், மீனும் திருத்திக்கொண்டு வந்திருக்கிறான். ராமனும் புன் சிரிப்புகொண்டு தன்னோடிருந்த மாதவர்களைப் பார்த்து அன்பினால் கொணர்ந்த ஆகாரத்தைப் பாராட்டுகின்றார். குகனை பக்கத்திலிருத்தி அவனோடு அளவளாவுகிறார். தன் மனையாளை குகனுக்கு அண்ணியென்றும், இலக்குவனை தம்பியென்றும் முறை சொல்லி அறிமுகப் படுத்துகிறார்.

'.................... தனிர் கடல் நில மெல்லாம்
உன்னுடையது : நான் உன் தொழில் உரிமையினுள்ளேன்.'

என்று சொல்லி தன்னையும் சம்பந்தப்படுத்துகிறார். குகன் அன்பினால் பொங்கி ராமன் இருந்த கோலம் சகியாமல், ராமன் போகும் இடத்தில் தன்னையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று மிகுந்த ஆர்வத்தோடு கெஞ்சுகின்றான். ஆனால் ராமன் சொல்லுகிறார்,

'அங்குள கிளை காவற்கு அமைதியின் உளன் உம்பி;
இங்குள கிளை காவற்கு யாருளர்? இசையாய்? நீ
உன்கிளை எனதன்றோ; உறுதுயர் உறலாமோ!
என்கிளை இதுகா என் ஏவலின் இனிது கா என்றான்.'

(அங்குள கிளை = அயோத்தியிலுள்ள பந்துக்கள்.
உம்பி = உன் தம்பியாகிய பரதன்.
இசையாய் = சொல்லாய்.
இனிது கா = நன்றாக பாதுகாப்பாயாக.)

குகனை விட்டுப் பிரிந்து ராமனும், தம்பியும், மனையாளும் சித்திரக்கூட மடைந்து, தம்பி அமைத்த பர்ணகச் சாலையில் இருக்கிறார்கள்.

இச்சம்பவங்களெல்லாம் பரதனுக்குத் தெரியாது. அவ்வமயம் அவன் கேகய நாட்டிலிருந்தான். அயோதிக்கு வந்ததும் நடந்தது ஒன்றும் தெரியாமல் திகைக்கின்றான். தன் அண்ணனை ராமனைப் பார்த்தால்தான் தனக்கு சாந்தி கிடைக்குமென்று நினைக்கின்றான்.

'எந்தையும் ஆயும் எம்பிரானும் எம்முன் உம்
அத்தம் இல் பெருகுணத்து இராமன்; ஆதலால்
வந்தனை அவன் கழல் வைத்த போது அலால்
சிந்தை வெம் கொடுதுயர் தீர்கலாது என்றான்.'
(ஆய் = தாய்; எம்முன் = என் அண்ணன்.)

குலகுருவான வசிஷ்டர் பரதனை பட்டத்தை ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லுகிறார். அதை மறுத்து பரதன் அண்ணனைத் தேடி தாயார் மூவரோடும், எல்லாப் பரிவாரங்களோடும்

காட்டுக்குப் போகின்றான். கங்கைக் கரையை அடைகின்றான். எதிர்க்கரையில் குகன் சந்தேகப்பட்டு பரதனை எதிர்கொள்ள வருகிறான். பரதனும் குகனை ராமனுடைய நண்பன் என்பதை தெரிந்துகொண்டு தொழுதுகொண்டே குகனைச் சந்திக்கிறான்.

'வந்து எதிரே தொழுதானை வணங்கினான்; மலரிருந்த
அந்தணனும் தலைவணங்கும் அவனும் அவனடி வீழ்ந்தான்
தந்தையினும் களிகூர தழுவினான், தகவுடையோர்
சிந்தையினும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தியான்.'

(மலர் இருந்த அந்தணன் = பிரம்மன்.
சென்னியிலும் = தலையிலும்.
சீர்த்தியான் = பெரும் புகழுடையவன்.)

வேடனும் அரசக் குமாரனும் அன்பினால் பொங்கி ஒருவரையொருவர் தொழுகின்றனர், தழுவுகின்றனர். குகன், வந்த காரணமென்னவென்று விசாரிக்க, பரதன் தன் அண்ணனை கொண்டுவருமாறு போகிறதாகத் தெரிவித்தான். குகன் பரதனை பாராட்டிச் சொல்லுகின்றான்,

'தாயுரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னை
தீவினை என்ன நீத்து சிந்தனை முகத்தில் தேக்கி
போயினை என்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ! தெரியின் அம்மா.'
(தாதை = தந்தை; கேழ் ஆவரோ = ஒப்பாவாரோ.)

பரதனும், தாயார் மூவரும், குகனும் ஓர் ஓடத்தில் ஏறி கங்கையைக் கடக்கின்றனர். பரதன், ராமன் தாய் கோசலா தேவியை குகனுக்கு அறிமுகப் படுத்துகிறான்.

'கன்று பிரி காருவின் துயருடைய கோசலை' வேடனை யார்? என்று கேட்க பரதன் சொல்லுகின்றான்.

'ராகவர்க்கு ஆன் தலைவன்
எனக்கும், இளையவர்க்கும், இலக்குவர்க்கும் மூத்தான்.'

என்று அறிமுகப்படுத்தினான். அது கேட்ட ராமன் தாய் சொல்லுகின்றாள்.

'கைவீரலீர், மைந்தீர்! இனித்து யாரால் காடு இறந்து காடு
காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலம் ஆயிற்றாம் அன்றேல்; விலங்கல்
திண் தோள்
கைவீரக் களிறு அனையக்காளை இவன் தன்னோடும் கலந்து நீவிர்
ஐவீரும் ஒரு வீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்தீர் என்றாள்'.

(கைவீரக்களிறு அனையகாளை = குகன்.)

கைகேசி ஒரு மகனுக்கு கவர்ந்த ராஜ்யம் தசரதன் குமாரர் நால்வருக்கும் மட்டுமல்ல. ஒரு வேடனையும் சேர்த்து ஐவருக்கும் ஆனதாம். அது காரணமாக ராஜ்யம் அகன்றதாம்!

கங்கையைக் கடந்து பரதனும் பரிவாரமும் சித்திரக் கூடத்தை அடைகின்றார்கள். சேனையுடன் வந்த பரதனைக் கண்டு இலக்குவன் சந்தேகிக்கின்றான். பரதனோடு போர் செய்ய இலக்குவன் ஆயத்தப் படுகின்றான். அது பார்த்த ராமர் சொல்லுகின்றார்,

'சேனையர் தருமத்தின் தேவை; செம்மையின்
ஆணியை, அன்னது நினைக்கலாகுமோ.'

பாதனே தன்னுடன் வந்த சேனையை பிறகு வரட்டும் என்று கட்டளையிட்டு, தன்னின் நின்றும் பிரியாத துணைவனை தம்பி சத்ருக்னுடனும், "தொழுது உயர் கையினனாய், துவண்ட மேனியனாய், அழுத அழி கண்ணினனாய்," துன்பத்தின்வடிவம் இது தானென்று சித்தரித்த உருவம்போல் மெல்ல மெல்ல நடந்து வருகின்றான். ராமனும் இலக்குவனுக்கு பாதன் கோலத்தை காட்டிக் கொடுக்கின்றார்.

'எல்லோடுங்கிய முகத்து இளவல், நின்றனன்
மல்லோடுங்கிய புயத்தவனை, வைது எழும்
சொல்லோடு உம் சினத்தோடு உம் உணர்வு சோர்தா
வில் லோடு உம் கண்ணநீர் நிலத்து வீழவே.'

(மல் லோடுங்கிய புயத்தவன் = பாதன்.
எல் லொடுங்கிய முகத்து = ஒளி மழுங்கிய முகத்துடனே.
இளவல் = இலக்குவன்.)

பாதன் எவ்வளவோ ராமனை அயோத்திக்கு வந்து பட்டத்தை ஏற்றுகொள்ளுமாறு சொல்லியும், அதற்கு ராமன் உடன்படாமல், ராமனுக்காக பாதன் அயோத்தியை ஆளச் சம்மதித்து, ராமன் பாதுகையை தலைமேல் வைத்துக்கொண்டு நந்திக் கிராமத்தில் தங்கியிருக்கிறான்.

ராமரும், தம்பியும், மனைவியும் பஞ்சவடி தீரத்தில் இருக்கும்போது சூர்பனகையின் சூட்சியால் ராவணன் சீதையைக் கவர்ந்து, அவளை அசோக வனத்தில் சிறை வைக்கின்றான். ராமனும் இலக்குவனும் கிஷ்கிந்தா நாட்டின் குரங்காசனோடு நட்புக்கொண்டு சீதையைத் தேடுகிறார்கள். ராமர் சுக்கிரீவனிடத்தில் சொல்லுகிறார்,

'உன் தலைக்கு உரிய இன்ப துன்பங்கள் உள்ள முன்னாள்
சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பர்; அன்ன
நின்றன எனக்கும் நிற்கும் நேர் : என மொழியு நேரா
மற்று இனி உரைப்பது என்னே? வானிடை மண்ணில் உன்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே எனினும் உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்; உன்கிளை எனது, என் காதற்
சுற்றம் உன் சுற்றம், நீ என்னின் உயிர்த்துணைவன்.' என்றான்,

ராமரும் சுக்கிரீவனும், குரங்குச் சேனைகளும் கடல் கடந்து இலங்கையை வளைத்து கொள்ளுகிறார்கள். ராவணனைக் கண்ணுற்றார்கள். சுக்கிரீவனுக்குப் பொறுக்க முடியவில்லை. ராவணனை மகுட பங்கம் செய்து அவமரியாதை செய்ய வேண்டு மென்று ராவணன் மேல் தாவினான். சுக்கிரீவன் ராவணனது மகுட மணிகளைப் பறித்துக்கொண்டு ராமன் பாதத்தில் வைத்து தொழுகிறான். சுக்கிரீவன் காயத்தி லிருந்து வடிகின்ற ரத்தத்துடனே ராமர் அவனைத் தழுவு கிறார். ராமருடைய கண்ணீரால் சுக்கிரீவன் தலை நனைகிறது. ராமர் சொல்லுகிறார்,

'இந் நிலை விளைவி லெய்தாது இத்துணை தாழ்த்தியாயின்
தன்னுதற் சீதையால் என்? ஞாலத்தாற் பயனென்னம்பி
உன்னை யான் தொடர்வல் என்னைத் தொடருமிவ்வுலக மென்றால்,
பின்னை யென் இதனைக் கொண்டு விளையாடிப் பிழைப்ப செய்தாய்.'

உனக்குத் தீங்கு நேருமாயின் நாம் மீட்க வந்த சீதையால் தான் என்ன பிரயோசனம். நானும் உலகமும் அழியும்படி நேருமே. நீ செய்தது விளையாட்டுக் காரியம். நீ இல்லாமல் நான் இலங்கையை வென்றாலும் நான் தோற்றதுபோலவே யாகும் என்று வருத்தப்படுகிறார்.

சீதையை தூக்கிப்போன ராவணன் தம்பி விபீஷணன் நல்லவன். அண்ணனுக்கு சீதையை விட்டுவிடுவதே வெற்றி யென்று அநேக நல்மதியெல்லாம் சொன்னான். ராவணன் அவன் நற்புத்தி கேட்கவில்லை.

'நீதியால் வந்தொரு நெடுந்தரும் நெறியல்லாற்
சாதியால் வந்த சிறு நெறியான்.'

விபீஷணன் அண்ணனைவிட்டு நீங்க ராமருடன் வந்து சேர்ந்து கொள்ளுகிறான். சுக்கிரீவனும் வானர வீரர்களில் அனேகரும் துஷ்டனாகிய ராவணன் தம்பியைச் சேர்க்கப் படாதென்று ஆக்ஷேபித்தாலும், ராமர் விபீஷணனை அன் புடன் வரவேற்கிறார். அரக்கன் தம்பியைப் பார்த்து ராமர் சொல்லுகிறார், "என் பிதா தசரதற்கு வெகு காலம் பிள்ளை களில்லாமல் நாங்கள் நால்வர் பிறந்தோம், காட்டில் குக னோடும் ஐவரானோம். பின்னால் சுக்கிரீவனோடு அறுவரானோம். எங்களோடு நீ அன்போடு வந்தாயே. உன்னோடு நாம் எழுவரானோம். உன் தந்தை தசரதர் என்னைக் கானகத்திற்கு அனுப்பி இத்தனை புத்திரரோடும் பொலிந்தானன்றோ."

'குகனொடும் ஐவரானோம் முன்பு, பின்குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானோம் எம்முழையன் பின்வந்த
அகன் அவர்காதல், ஐய! நின்னொடும் எழுவரானோம்
புகலருங் கானந்தந்து புதல்வரால் பொலிந்தான் உந்தை'.

(குன்று சூழ்வான் மகன் = சுக்ரீவன்
எம்முழை = என் அகம்
உந்தை = உன் தந்தை தசரதர்.)

ராமர் ராவணனை ஜெயித்து சீதையை மீட்டுக்கொண்டு அயோத்தியை நோக்கி வருகிறார். வழியில் பாரத்துவாசரிஷி விருந்தளிக்கிறார். நந்திக் கிராமத்தில் தபசு செய்யும் பரதன் அண்ணன் குறித்த நாள் வரவில்லையென்று அக்கினி வளர்த்து அதில் பிரவேசிக்க தயார் செய்கிறான். ராமன் தாய் கோசலாதேவி தடுத்துச் சொல்லுகிறாள்.

'எண்ணில் கோடி ராமர்களென்னினும்
அண்ணல் நின் அருளுக் கருகாவரோ
புண்ணிய மெனும் நின்னுயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ'.

கோடி ராமர் கூட பரதனுக்கு நிகராகமாட்டார்! பரதனுடைய தியாகத்தினால்தான் உலகமே நடைபெறுகிறது. சிலுவைத் தியாகமில்லையானால் உலகமேது.

பரதன் சத்ருக்கனை அழைத்து ராஜ்யபாரத்தை ஒப்புக் கொள்ளச் சொல்லுகிறான். சத்துருக்கன் மறுத்துச் சொல்லுகிறான்.

'கான் ஆள நிலமகளை கைவிட்டுப் போவானைக் காத்துப் பின்பு
போனானும் ஒருதம்பி போனவர்கள் வருமவதி போயிற்றென்று
ஆனாத உயிர்விட வென்றமைவானுமொரு தம்பி அயலே
காணாது
யானாம் இவ்வரசாளவென் என்னே! இவ்வரசாட்சி
இனிதேயம்மா!'

'எல்லாரும் தியாகம் செய்யும்போது நானோ அரசாள்வது,' என்று அவனும் சேர்ந்து தீக்குளிக்கத் துணிகிறான். ராம தூதன் ராமர் வரவைத் தெரிவித்து இருவரையும் தடுக்கிறான்.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கிறது. உலகத்தோர் யாவரும் ராமர் தலையில் வைத்த பொற்கிரீடம் தம்தம் தலையில் வைத்ததாக உணர்ந்து அகமகிழ்கிறார்கள்.

## சங்கராச்சாரியார்.

சங்கராச்சாரியார் பிறந்த காலத்தில் கேரளநாடு தமிழ் நாட்டின் ஒரு பாகம்தான்; தமிழும், மலையாளமும் இரண்டாகப்பிரிந்தது பின்காலத்திலேயே. மலையாளிகள் பூர்வீகத்தில் தமிழ் மக்கள்தான். அவர்களெல்லாரும் ஒரே பாஷை பேசினவர்களே. சங்கரர் தொடர்பில் அவர் ஆத்மீகச் சீவனாக விளங்கிய ராமாநுஜர் தமிழரே. அதினால் சங்கரரைத் தமிழ் மக்களில் ஒருவராகவே எண்ணுவது சரி. பூர்வீகப் பெரியார்களின் சரித்திரங்களைத் திட்டவட்டமாய் அறிவது இலகுவல்ல. ஏனெனில் அவர்கள்மேல் மிக வைராக்கிய மூடபக்தி கொண்டு அவர்கள்பின் வந்தவர்கள் பலவிதத் தங்கள் கட்டுக் கதைகளினால் சில சந்தேகங்களை சரித்திர ஆராய்ச்சியாளர் மனதில் உண்டு பண்ணிவிடுகிறார்கள். சங்கராச்சாரியார் பிறந்த இடம், அவர் பிறப்பு விஷய சம்பவங்கள், பிறந்த வருஷம் முதலியன இவ்வித சந்தேகங்களுக்கிடம் கொடுக்கும்படியாக, மேற் கூறிய இவ்வித காரணங்கள் சரித்திரம் எழுதத் தொடங்குவோரை மனம் கலங்கச் செய்கின்றன. பொதுவாக ஆராய்ச்சியாளர் கூறுவது சங்கரர் பிறந்த இடம் திருவாங்கூர் எனும் கேரளநாட்டில் ஆல்வாய் என்ற ஊருக்குச்சமீபமான காலடி என்ற கிராமமே. இது தற்போது கொச்சி—ஷோரனூர் புகைவண்டிப்பாதையில்

இருக்கிறது. இவர் பிறந்த குலம் நம்பூதிரி பிராமண வம்சம். ஆனால் ஆனந்தகிரி என்ற பெரியார் சங்கரர் பிறந்த இடம் தமிழ் நாட்டிலுள்ள சிதம்பரம் என்கிறார். இவர் தந்தையாகிய சிவகுரு என்பார் சிவபக்தர். சங்கரர் இவருடைய ஒரே மகன். ஆனால் ஆனந்தகிரியென்ற பெரியாரோ சிதம்பரத்தில் சிவபக்தியாய் விளங்கிய ஒரு பிராமணஸ்திரியின் வயிற்றில் இவர் பிறந்ததாகச் சொல்லுகிறார். இளம்பிராயத்திலேயே இவர் தன் தகப்பனை இழந்துவிட்டதாகத் தெரிகிறது. இவர் பிறந்த வருஷம் கி. பி. 788ம் ஆண்டு என்று யூகிக்கப்படுகிறது. இவர்தமது இளம்பிராயத்திலேயே வேதங்களை நன்குபடித்துத் தேறிவிட்டார். கல்வி முடிந்து வாலிபனாக இவர் வீடு திரும்பினதும் இவர் தாய் இவருக்குக் கலியாணம் செய்துவைக்க மிகவும் விரும்பினார்கள். ஆனால் இவரோ சன்னியாசம் பூண்டு துறவியாக மிக ஆவலாயிருந்தார். தாய் தான் இறந்தபின் தனக்கு சவக்கிரியை செய்ய ஆளில்லாமல் போய்விடுமே என்று தவித்தாள். ஒரு சந்நியாசி சடங்குகளுக்கு மேலானவராதலால் சவக்கிரியை செய்வது சந்நியாசிகள் வழக்கமல்ல. எனினும் சங்கரர் தான் சந்நியாசியாய்ப் போனாலும் தன் தாய்க்கு செய்யவேண்டிய கடமைகளை எப்படியாவது செய்து தீர்ப்பதாக வாக்களித்தார். தாய்க்கோ மகன் சந்நியாசம் பூண்டுகொள்வது சற்றாகிலும் விருப்பம் இல்லை. தான் இப்படியே விடப்படப்போகிறதை நினைத்து அழுது புலம்பினாள். ஒருநாள் தாயும் மகனும் ஆற்றில் குளிக்கப் போயிருக்கும்போது ஒரு முதலை சங்கரர் காலைக் கவ்விக் கொண்டது. "அம்மா மரணமாகப் போகிறேன்.

சந்நியாச விரதமெடுத்து நான் மரிக்கும்படி எனக்கு உன் உத்தரவுகொடு" என்று கூவினார். துடித்துத் தவித்ததாய் உடனே மகனுக்கு சந்நியாச விரதம் பூண்டு கொள்ள உத்தரவளித்தாள். முதலை சங்கரர் காலை விட்டுவிட்டது. தாயின் சம்மதி பெற்ற சங்கரர் சந்நியாசியானார்.

நர்மதா ஆற்றோரத்திலிருந்த ஒரு வேத சாஸ்திர கல்லூரி சென்றார். அங்கு போதித்த கோவிந்த குருவிடத்தில் சாஸ்திரோபதேசம் பெற்றார். கோவிந்த குரு சங்கரருக்குச் சன்னியாச பட்டம் தரித்தார். அச்சமயம் இவருக்கு 25 பிராயமிருக்கலாம். குருவாகிய கௌதபாலாதத்துவ கோவிந்த குரு சங்கரருக்கு ஞானபோதகம் செய்தார். இதன்பின் சங்கரர் காசி சென்றார். பின் ஊர் ஊராகத்திரிந்து சென்று தமது அத்வைத போதத்தைப் பரவச்செய்தார். பல மடங்களையும் ஏற்படுத்தினார். துங்கபத்திரா ஆற்றோரமிருக்கும் சிரிங்கேரி மடமே இவற்றில் மிகப் பெயர் பெற்றது. சங்கரர் பல நூற்கள் வெளியிட்டார். வேத வியாக்கியானங்கள், விசேஷமாக உபநிஷதம், பகவத்கீதம், வேதாந்த சூத்திரங்கள் இவற்றை வியாக்கியானம் செய்தார். பிரமச்சாரியாக சந்நியாசம் பூண்டு கொள்ளவிரும்பும் வாலிபனைத் தடுப்பவர்களைக் குறித்து பகவத்கீதை வியாக்கியானத்தில் மிகவும் கண்டித்துப் பேசுகிறார். பின் காலத்தில் தாயைப்பார்க்க ஆவல்கொண்டு தெற்கே வந்தார். தாய் படுக்கையில் இருந்தவள் காலைத்தொட்டு வணக்கம் செய்தார். தாய்க்கு மிக சந்தோஷம் மகனைப்பார்த்தது. தாய் மரணப்படுக்கையில் தான்

இருப்பதை உணர்ந்தவளாய் தன் சமாதானத்துக்குரிய காரியங்களை மகன் தனக்குப் போதிக்க விரும்பினள். தாய்க்கு இவரின் உயர்ந்த தத்துவஞானம் கிரகிக்கக்கூடாத தாயிருந்ததால் சிவபெருமானைக் குறித்து அவளுக்கு விளங் கும்படி பேசி ஒரு பாட்டும் இயற்றினர். தாய் மரித்தாள். சங்கரர் தன் தாய்க்குச் செய்யவேண்டிய சவக்கிரியை செய்ய விரும்பினர். அக்கிரஹாரத்திலிருந்த பிராமணர் இவர் சந்நி யாசியானதால் அது செய்யக்கூடாதென்று எதிர்த்தார்கள். ஒரு சந்நியாசி சவக்கிரியை செய்வது பெரிய பாவமென்று அவர்கள் மிகவும் கோபங்கொண்டு, சங்கரர் கிட்டவருவ தென்றால் தாங்கள் ஒரு உதவியும் செய்யமாட்டோமென்று மறுத்துவிட்டதால் சங்கரர் தானே தன் தாயின் உடலை வீட்டிற்குபின் முற்றத்தில் தனியே சுமந்துகொண்டுபோய் தனக்கு கைவசமாய்க்கிடைத்த வெறும் வாழைத்தண்டுகளை விறகாய் அடுக்கி தாயின் உடலை எரித்து சவக்கிரியை செய்து முடித்ததாகச் சொல்லப்படுகிறது. உடம்பை அப்படியே தனியே தூக்கிப்போக சக்தியில்லாததால் அதைத்துண்டு செய்து எடுத்து வெளியே கொண்டுவந்ததாகவும் கூறப்பட்டி ருக்கிறது.

சங்கராச்சாரியார் போதித்த தத்துவஞானம் உமா அத் வைதம் என்று அழைக்கப்படுகிறது. அத் = இல்லை, துவை = இரண்டு, இரண்டில்லை ஒன்றே என்று அர்த்தம் கொள்ளும். அதாவது நாம் "நான்" என்று சொல்லுகிற ஆள் தத்துவமாகிய அகப்பொருள் பரம்பொருளாகிய கடவுளே

என்பது இவர் போதகம். சங்கராச்சாரியார் பல இடங்கள் பிரயாணம்செய்து தமது அத்வைத போதகம் பரவச்செய்தார். சக்தர், கணபதியார், கபாலிகர் என்ற மதப்பிரிவாரின் ஆபாசங்களையும் அவர்களால் ஆலயங்களில் நடந்து வந்த அருவருப்பான காரியங்களையும் அவர் கண்டித்து எதிர்த்து ஆலயங்களை சுத்தம் செய்தார். காஞ்சிபுரம், சிதம்பரம், மதுரை பலக்ஷேத்திரங்களுக்கும், வட இந்தியாவில் பல இடங்களுக்கும், காஷ்மீரத்திற்கும்கூடச்சென்றார். பூரியில் கோவர்தன் மடத்தையும், துவாரகத்தில் ஒரு மடத்தையும் ஸ்தாபித்தார். கடைசி காலத்தில் கேதார்நாத் என்று பெயருள்ள இமையமலையிலுள்ள ஒரு இடம் சென்று வசித்தார். அவருக்கு மூலவியாதி தொந்தரவு மிக கஷ்டம் கொடுத்தது. மிகவும் பலஹீனமடைந்தார். கி. பி. 828-ல் மரணமடைந்தார்.

சங்கராச்சாரியாரின் போதகம்:— நாம் காண்கிறது மாயை அல்லது அவித்தி. நிச்சயமாக இருப்பது பரமாத்துமாவே. இயற்கையின் தோற்றங்களானவையெல்லாம் ஒரு ஜாலம் அல்லது சொப்பனம் போன்றதே. அவை மாயை. இவை புகை தனதுள்ளே எரியும் நெருப்பை மறைப்பதுபோல் பரமாத்துமாவை நமது கண்ணுக்குமறைக்கின்றன. சொப்பனம் காணுபவனுக்கு சொப்பனம் முடிந்தபின் விழிக்குமட்டும் நிசமானகாரியம்போல் அதை அவன் எண்ணும்படி செய்துவிடுகிறதல்லவா? இதனால் நமது வாழ்க்கையின் முக்கிய நோக்கம் நமது கண்ணைமறைக்கிற இந்த திரையை அல்லது உரையைக் களைந்து விட முயல்வதே. இத்தவிதமாய் உதவாத

இந்த உரையைக்கழைந்துவிட்டு நமது ஜீவாத்துமா பரமாத்மாவோடு ஒன்றாக இரண்டறக்கலந்து விடுவதற்கு வழி மெய் அறிவே. இதற்கென்று வேதாந்தங்கள் வேண்டும். அதன் போதங்களை ஓயாது தியானிக்க வேண்டும். கருமகிரியைகளைவிட இந்த வேதாந்த தியானத்தின் அறிவே பிரதானம். சங்கார் போதித்த இந்த பரமாத்மா நிர்குணம், சத்சித்தானந்தா. இது தான் சங்காராச்சாரியார் போதித்த அத்வைதம்.

## பின்கால தமிழ்நாட்டு பக்தர்கள்.

பின்காலத் தமிழ் நாட்டு பக்தர்களை இருவகையாகப் பிரிக்கலாம். ஆழ்வார்கள், ஆண்டார்கள் அல்லது நாயன்மார்கள். ஆழ்வார்கள் விஷ்ணுபக்தர். ஆண்டார்கள் சிவபக்தர். கடவுள், பூமிக்கு மனுஷ அவதாரம் எடுத்து வருவாரென்று சிவபக்தர் வற்புறுத்தவில்லை. இயற்கையில் காணும் எல்லா சிருஷ்டியும் தோற்றங்களும் ஒருவகையாக கடவுளின் அம்சமாகிய அவருடைய அவதாரம்போல் சங்கார் போதித்தார். ஆனால் விஷ்ணு பக்தர் கடவுள் நம்மைபோல் மனிதனாக உருவமெடுத்துப் பிறந்து பூமிக்கு வருகிறாரென்று நம்புகிறார்கள். இராமர் கிருஷ்ணன் இவர்கள் விஷ்ணுவின் அவதாரம். ஆனால் சிவ பக்தரோ, கடவுள் பக்தருக்கு குரு உபதேசம் செய்ய, அல்லது அவர்களுக்கு நேரும் நெருக்கடியில் சகாயம் செய்ய, அவசியத்திற்கேற்ற உருவம் பூண்டு, திடீரென்று வந்து, தரிசனம் கொடுத்து, செய்ய வேண்டிய சகாயத்தைச் செய்து, உடனே மறைந்து விடுவார் என்று போதிக்கிறார்கள்.

சிவ பெருமான் இப்படி தோன்றுவதற்கு திரு அருள் தோற்றம் என்று பெயர். மாணிக்கவாசகர், தாயுமானவர் இவர்கள் சரித்திரத்தை நாம் பின் படிக்கும்போது இதை நன்கு அறிந்துகொள்ளலாம்.

ஆழ்வார்கள் :— பின் வரும் பன்னிருவர்.

1. பொய்கை ஆழ்வார்.
2. புட்டத்தாழ்வார். பூதத்தாழ்வார்.
3. பேயாழ்வார்.
4. திருமழிசை ஆழ்வார்.
5. நம்மாழ்வார்.
6. மதுரகவி ஆழ்வார்.
7. குலசேகர ஆழ்வார்.
8. பெரிய ஆழ்வார்.
9. ஆண்டாள் ஆழ்வார்.
10. திருண்டாதிரிபோதி ஆழ்வார்.
11. திருப்பாணுமாள்வார்.
12. திருமங்கை ஆழ்வார்.

ஆண்டார்கள் அல்லது நாயன்மார் அல்லது அடியார்கள் :— இவர்கள் 63 பேர். இவர்களில் பிரதான பேர்கள் மாத்திரம் இங்கு அறிந்துகொள்வோம். சோழ மன்னன் மந்திரியும் சிவ பக்தரான சேக்கிழார் பெரியபுராணம். சிவ பக்தருமான 63 நாயன்மார்களையும்பற்றி கூறுகின்றது. சிறுதொண்டர் தேவாரங்களும் உதவியே பட்டிணத்துப்

பிள்ளையார், தாயுமானவர் இராமலிங்கசுவாமியார் இவர்கள் வரலாற்றையும் இத்துடன் சேர்த்துக்கொள்வோம்.

1. சிறுத்தொண்டநாயனார்.
2. மங்கையர்க்கரசியார்.
3. திருநாவுக்கரசு அல்லது அப்பர்.
4. திருநீலகண்டநாயனார்.
5. திருஞானசம்பந்தமூர்த்திகள்.
6. மாணிக்கவாசகர்.
7. சுந்தரமூர்த்திசுவாமிகள்.
8. மெய்ப்பொருள்நாயனார்.
9. கண்ணப்பநாயனார்.
10. நேசநாயனார்.
11. முருகநாயனார்.
12. காரைக்காலம்மையார்.

இன்னும் இதற்குமேல் 51 பேராக மொத்தம் 63 திருத்தொண்டர்களுண்டு.

---

## ஆழ்வார்களில் பிரதமர்.

ராமானுஜர் :— வைஷ்ணவ பக்தர்களான ஆழ்வார்கள் இயற்றிய நூல்களுக்கு நாலாயிரப்பிரபந்தம்என்று பெயர். சிவ பக்தர்கள் இயற்றிய நூல்களுக்கு தேவாரம் என்று பெயர். இவ்விருத்திறத்தாரும் பக்தி மார்கத்தையே மிகவும் சிறப்பாய் கொண்டாடிப் போதித்தவர்கள். இன்னொரு வகையான வருக்கு ஆச்சாரியார் என்று பெயர்.

சாதாரணமாக ராமானுஜரை வைணவ பக்தர்களான ஆழ்வார்களுக்கு தலைவராக எண்ணுவது வழக்கம். இது சரியல்லவென்று சிலர் மறுக்கிறார்கள். இது நிற்க. ராமானுஜருடைய முன்னோர்கள் திருச்சிராப்பள்ளிக்குச் சமீபமான ஸ்ரீரங்கத்தில் வசித்தவர்கள். அங்கு வைணவர்களுக்குத் தலைவாயிருந்த ஆழவாண்டாருடைய கூட்டம் இருந்தது. இவர்களில் ஒருவர் திருப்பதி சென்றார். அங்கிருக்கையில் தமது சொந்த ஊரிலிருந்து வந்திருந்த ஒரு பெண்ணை விவாகம் செய்தார். இவருக்குத்தான் கி. பி. 1017-ம் ஆண்டில் ராமானுஜர் மகனாகப் பிறந்தார். ராமானுஜர் (ராம அனுஜன்) என்பது தமிழில் இளையபெருமான் என அர்த்தமாகும். இவர் சிறுவனாயிருக்கும்போதே தகப்பனார் இறந்துவிட்டார். வேதாந்தம் படிக்க காஞ்சிபுரம் சென்றார். இவருடன் சிறிய தாயார் மகன் கோவிந்தபட்டனும் படிக்கப் போயிருந்தான். ராமானுஜர் கல்வியில் மிகவும் சிறந்து விளங்கினார். திருச்சிராப்பள்ளியிலிருந்த இவர் பூட்டனாருக்கு இது மிகுந்த சந்தோஷத்தைக்கொடுத்தது. காஞ்சிபுரம் வந்து பையனைப் பார்த்துவிட்டு தனக்குப்பின் தன் ஸ்தானத்துக்கு வருபவன் இவனேயென்று இரகசியமாக மனதில் நிர்ணயித்துக்கொண்டு ஸ்ரீரங்கம் திரும்பினார். காஞ்சிபுரத்தில் ராமானுஜருக்கு வேதாந்தம் கற்றுக்கொடுத்த உபாத்தியாயர் பெயர் யாதவபிரகாசர். மாணவராகிய ராமானுஜர் வேதாந்த வியாக்கியானமளிப்பதில் தன் வாத்தியாரைவிட அதிக சாமார்த்தியம் காட்ட ஆரம்பித்துவிட்டார். இதனால் வாத்தியாருக்கும் மாணவர்மேல் பொறாமையும், கோபமும் மூண்டுவிட்டது.

காஞ்சிபுரத்தில் மன்னனின் மகளைப் பிடித்திருந்த பேயை விரட்ட யாதவப்பிரகாசரால் முடியாமல் போன போது ராமானுஜர் போய் விரட்டிவிட்டது வாத்தியாருக்கு எரிகிற தீயின்மேல் எண்ணெய்விட்டது போலிருந்தது. இவர் ராமானுஜரைக் கொன்றுவிட சூழ்ச்சிச் செய்தார். ராமானுஜர் தப்பித்துக் கொண்டார். இக்காலத்தில் ராமானுஜர் பூட்டன் ஆழவாண்டார் மரணப்படுக்கையில் இருந்ததால் ராமானுஜர் ஸ்ரீரங்கம் சென்றார். இவர் சேருமுன் பூட்டன் மரித்து விட்டார். இவர் பிரேதத்தைப் பார்த்த போது கையில் மூன்று விரல்கள் மடிக்கப்பட்டிருந்தனவாம். இந்தப்பெரியார் மரிக்குமுன் தனது மூன்று விருப்பங்களை வெளியிட்டிருந்தாராம்.

1. பிரம்ம சூத்திரத்தை எல்லாரும் வாசித்து இலகுவாக கிரகித்துக் கொள்ள ஒரு வியாக்கியானம்.

2. 3-ம் பாரசாரன் சடகோபன் இப்பேர்ப்பட்ட பெயர்களை தகுந்தஆட்களுக்குக் கொடுத்து மக்களுக்குள் அவர்கள் வசிக்கச் செய்கிறது. ராமானுஜர் இந்த விருப்பங்களை தான் நிறைவேற்றுவதாக பிரதிக்கினைச் செய்தவுடன் மடக்கப்பட்டிருந்த விரல்கள் நீட்டப்பட்டதாம். சவக் கிரியைகள் முடிந்தவுடன் ராமானுஜர் காஞ்சிபுரம் சென்றார்.

ராமானுஜருக்கும் அவர்மனைவிக்கும் மனம் ஒற்றுமை இல்லை. அவருடைய நற்கொள்கைகளுக்கு அவள் விரோதமாய் நடந்து வந்ததால் அவளை தன் தகப்பனார் வீட்டிற்கு அனுப்பிவிட்டு அவர் வீட்டைவிட்டுப் பிரிந்து சந்நியாசம் பூண்டு கொண்டார்.

## ராமானுஜர் குருவுபதேசம் பெற்றது.

ராமானுஜருடைய பூட்டனாகிய ஆழவாண்டார் சிஷரில் முக்கியமானவர் பெயர் பெரியநம்பி என்பார். ராமானுஜர், தேவராஜ் என்ற தேவாலய வயோதிப பூசாரியிடம் தனது வாழ்க்கையைக் குறித்து கடவுளின் சித்தம் இன்னவென்று அறிந்துசொல்ல அவரை வேண்டிக் கொண்டார். அவருடைய ஆலோசனையின்படி பெரியநம்பியை தனக்குக் குருவாக வைத்துக்கொள்ளத் தீர்மானித்தார். அவரைச் சந்திக்கும்படி ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டார். இதே சமயத்தில் பெரிய நம்பியும் ராமானுஜரை ஸ்ரீரங்கத்திற்கு கொண்டு போகும்படி பிரயாணப்பட்டு வந்தவர் வழியிலே ராமானுஜரைச் சந்தித்தார். இருவரும் காஞ்சிபுரத்திற்குத் திரும்பி வந்து ஒன்றாகக் கூடியிருந்தார்கள். முன்னேயே கூறியிருக்கிறபடி ராமானுஜருக்கு இளவயதில் விவாகம் ஆயிருந்தது. ஆனால் இவர் மனைவி மனதிற்கு ஏற்றவளாயில்லை. தரும சிந்தையற்றவளும், சண்டைக்காரியுமாயிருந்தாள். இவள் நிமித்தம் பெரிய நம்பி ராமானுஜரை விட்டுப் பிரியவேண்டி இருந்தது. இந்நிமித்தம் ராமானுஜர் தன் மனைவியையழைத்து மாமனார் வீட்டிற்கு அவளை அனுப்பிவிட்டு சந்நியாசி உடையணிந்து துறவறம் பூண்டார். பின்பு ராமானுஜர் ஸ்ரீரங்கம் சென்றார். பெரியநம்பியுடன் காஞ்சிபுரம் திரும்பினார். வைணவ சாஸ்திரங்களை ஆழ்ந்து கற்றுக்கொள்ள ஆரம்பித்தார். பெரிய நம்பி இக்கல்வியின் ஒரு பாகத்திற்கு இவர் குருவாய் இருந்தார். ஆனால் மந்திரார்த்தம் என்ற இன்னொரு பாகம் கற்றுக்கொடுக்க கோட்டியூர் நம்பி என்ற இன்னொரு

குருவின் உதவி இவருக்கு அவசியமாயிருந்தது. பல தடவை இவரிடத்தில் சென்று அதிக பிரயாசம் எடுத்து வந்ததால் இவர் ராமானுஜருக்குக் கற்றுக்கொடுக்க சம்மதித்தார். ஆனால் திருக்கோட்டி நம்பி, ராமானுஜரிடத்தில் தான் கற்றுக் கொடுக்கும் மந்திரத்தை வேறொருவருக்கும் அவர் சொல்லிப் பிரசாரம் செய்யக்கூடாது என்று வாக்குறுதி வாங்கிக் கொண்டபின்தான் அவருக்குக் கல்வி கற்றுக்கொடுத்தார். மந்திரத்தை கற்றபின் அதின் இரகசியங்கள் இரட்சிப்புக்கு பேருதவி என்று ராமானுஜர் உணர்ந்ததால் தன்னைச் சுற்றி இருக்கும் யாவருக்கும் தான் கற்றுக்கொண்டதைப் போதித் தார். குருவுக்கு ராமானுஜர் மேல் கோபம் மூண்டுவிட்டது. இதைக் குறித்து விசாரித்தபோது குரு கொடுக்கிற தண் டனையை தான் ஏற்றுக்கொள்ள ஆயத்தமாயிருப்பதாக ராமானுஜர் சொன்னார். "உனக்கு நித்திய நரகமே" என்று அவர் சாபம்போட்டார். ராமானுஜர் "எத்தனையோ கோடிக் கணக்கான இந்த ஏழை மக்களுக்கு இரட்சிப்பு உண்டான படியால் எத்தனையளவு நித்திய நரகமும் எனக்குச் சந்தோ ஷமே" என்று உத்தரவுக் கொடுத்தார்!

இக்காலத்தில் தஞ்சாவூர் சோழ மன்னனின் பிரதம நகரம். இங்கு ஆண்டவன் குலோத்துங்கன். கி. பி. 1070........1118. இவன் சிவமத வைராக்கியன். சேக்கிழார் என்ற கவிராயரை ஆதரித்தவன். இக்காலத்தில் சிவமதம் தழைத்தோங்கி பலமடைந்து பரவியிருந்தது. தன் பிரஜைகள் சிவனுக்குமேல் ஒரு தெய்வமுமில்லை என்ற கொள்கையை

ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கட்டளையிட்டான். இது முக்கியமாக ராமானுஜருக்கு எதிர்ப் பிரசாரமாயிருந்தது. ராமானுஜர் மன்னன் முன் வந்து சோக்கட்டளை பிறந்தது. ஆபத்து கிட்டிவிட்டதென்றிந்த ராமானுஜரின் சிஷர்கள் ஒரு தந்திர ஆலோசனைசெய்தார்கள். கூறத்தாழ்வார் ராமானுஜரின் சந்நியாச உடையைத்தான் தரித்துக்கொண்டு, வயோதிபரான பெரிய நம்பியாருடன் சோழ மன்னன் சமஸ்தானம் சென்று அவன்முன் நின்றார். ராமானுஜரோ ஒரு கிரகஸ்தர் வேஷம் பூண்டு, தமது சில சிஷர்களோடு காவிரிநதியோரமாகப் பிரயாணம் செய்து ஹோய்சாலேபித்தி தேவராஜ்யம்சென்றார். சாலிகிரம் என்ற அங்கிருந்த ஒரு ஊரில் 12 வருஷங்கள் தங்கியிருந்தார். மன்னனின் மகளைப் பேய்பிடித்திருந்ததை ராமானுஜர் விரட்டிவிட்டதாக பித்திதேவ மன்னனும் ராமானுஜர் சிஷ்யனாகிவிட்டான். சமணனாயிருந்த மன்னன் மாத்திரமல்ல மற்றும் சமணர்களோடும் ராமானுஜர் தர்க்கித்து அவர்களில் பலரையும் தமது சிஷராக்கிவிட்டார்.

கூறத்தாழ்வார் பெரிய நம்பியாருடன் சோழ மன்னனிடம் சென்றதைக் குறித்து முன்னே சொன்னேன். அவர்கள் அங்கு சென்று சோழமன்னன் குலோத்துங்கன் சமஸ்தானத்தில் நின்றபோது, சிவமே பெரிது, சிவனுக்குமேலான தெய்வமில்லை என்றதை அவர்களிருவரும் ஏற்றுக்கொள்ளுகிறார்களா என்று கேட்டான். சிவத்திற்குமேல் துரோணமுண்டு என்று இவர்கள் உத்தரவு சொன்னார்களாம். இவர்கள் சிவம் என்ற சாதாரண அளவுக்குமேல் துரோணம்

என்ற அளவுபெரிதானது என்று பகடியாய்ச் சொன்ன உத்தரவைக் கேட்ட மன்னனுக்கு இவர்கள்மேல் கோபம் மூண்டது. இருவர் கண்களையும் தோண்டி எறியும்படி மன்னன் கட்டளையிட்டபடி அவர்களுக்குச்செய்யப்பட்டது. வயோதிபனான பெரியநம்பி இதனால் திரும்பும் வழியில் இறந்து விட்டார். பலசாலியான கூறத்தாழ்வார் ஸ்ரீரங்கம் திரும்பி அங்கு வசித்தார்.

1118-ம் ஆண்டில் குலோத்துங்கன் மரித்தான். சோழ அரசன் மரித்தபின் ராமானுஜர் ஸ்ரீரங்கம் திரும்பினார். இதன்பின் ஆழ்வார்திருநகருக்கும் திருப்பதிக்கும் போய்த் திரும்பினார். காஞ்சீபுரம், மதுராந்தகம், ஸ்ரீவில்லிப்புத்தூர் முதலிய வைணவ க்ஷேத்திரங்களும் யாத்திரை போய் திரும்பி ஸ்ரீரங்கம் சேர்ந்தார். தமது சிஷரில் தமது போதகங்களைப் பரவச் செய்ய 74 பேரைக்குறிப்பிட்டு ஏற்படுத்தினார். நாலாயிரப்பிரபந்தம் போதிக்க ஒருவரை விசேஷமாகத் தெரிந்தெடுத்தார். இவர் சொந்த இனத்தாராகிய பிள்ளான் என்பவரே இவர். இவர்தான் ராமானுஜரின் ஸ்தானத்திற்கு இவர் பின்வந்த தலைமை ஆண்டவராவார். ராமானுஜர் நீண்ட வயதுள்ளவராய் கி. பி. 1137-ம் ஆண்டில் மரித்ததாகக் கூறப்படுகிறது. ஆனால் அவர் இவ்வளவுகாலம் 120 ஆண்டுகள் உயிரோடிருந்தாரென்று நிச்சயமாகக் கூற முடியாது.

ராமானுஜரின் போதகம் :— இதற்கு விஷிஷ்டாத்துவைதம் என்று பெயர். சங்காரச்சாரியார் போதகம்

அத்துவைதம், அதாவது பிரமன் ஒன்றே உண்டு, மற்றும் காணப்படுபவையெல்லாம் மாயை என்பது. விஷிஷ்டாத்து வைதம் என்பது இப்படி பிரம்மன் ஒன்றே மெய்ப்பொருள் என்று ஒப்புக்கொண்டாலும், அத்துவைதம் போதித்தது போல பிரம்மன் நிர்குணரல்ல; அவருக்கு சேஷங்கள் அதாவது பண்பு, குணங்களுண்டு என்று போதிக்கும். இந்த பிரம்மனின் தோற்றம் சக்தி எனப்படும். பிரம்மனின் பண்பு அல்லது குணங்கள் சித்து அல்லது தனித்தனி ஆத்மாக்களும், அசித்து அதாவது சடப் பொருள் அல்லது வஸ்துக்களுமாகும். ஆனல் அத்துவைதம் பிரம்மன் மாத்திரம்தான் உண்டு, ஏனையாவும் வெறும் மாயா தோற்றம் அல்லது அக்கியானம் அவித்திமட்டுமே என்கும். ராமானுஜரோ பிரம்மனின் தோற்றம் அல்லது காணப்படுபவை மாயையல்ல நிச்சயமானவை, நிலையானவை, ஆனல் பிரம்மனின் கீழ் அடங்கியவை, அசைசையாமல் அணுவசையாது, எல்லாம் அவன் செயலால் மாத்திரம்தான் மாறும் வளரும் என்று போதித்தார், இதனுல் கடவுளின் ஏகத்துவமும் அவரால் உண்டான தோற்றங்கள் காணப்படுபவைகளும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய சம்பந்தத்துவமுள்ளதாக முரண்படாமலிருக்கின்றன என்பது ராமானுஜர் போதகம். இத்தோற்றங்கள் தன்னந்தனியே அல்லாக்காய் நிற்பவை யல்ல என்றார். காணப்படுபவை பிரமனின் பிரகாரங்கள் உடக்கையானவைகள், அவருக்கடங்கியவைகள். பிரமனே ஏக மத்தியபாத்தம், பிரமாவையன்றி ஜீவாத்மாக்கள் தனித்தனி உயிருள்ளவைகளல்ல. பிரமனே அறிவு புத்தி மாத்திரம் அல்ல, அவர் எல்லாமறிபவர்.

பிரம்மன் என்றும்மாறுத சத்தியம். ஜீவாத்துமாவோ மாறக்கூடியது கர்மக்கிரியைகளினால் வளரலாம் குறைவடையலாம். மிருக வகைகள், லோகம், தாவரம் முதலிய பொருட்கள் புத்தி ஒடுங்கிக்கீழ்ப்படுத்தப்பட்டு மறைந்துள்ளவை. இவைகளுக்குள்மாறுதல் ஈய வளர்ச்சி அதாவது பரிணாம (Evolution) முண்டு. அத்வைதன் ஜீவாத்மாக்களை அசத்தியமென்பான். விசிஷ்தத்வைதன் ஜீவாத்மா பிரம்மனை யொத்தவையென்பான்.

---

## அப்பர் அல்லது திருநாவுக்கரசு.

நாயன்மாரிலொருவரான அப்பர் என்பவர் பல்லவ மன்னன் முதலாவது மகேந்திரவர்மன் காலத்தவர் (கி. பி. 600-630). சோழநாடு பல்லவர் ஆட்சியிலிருந்தது. தமிழ் நாட்டிலே திருமுனைப்பாடி என்று தொண்டை நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் இடைப்பாகத்திலுள்ள திருவாமூர் என்ற ஊரிலே பிறந்தனர். இவர் தகப்பனார் புகழனார், தாயார் மாதினியார். இவரின் மூத்த அக்காள் பெயர் திலகவதியார். அப்பர் காலம் ஏழாவது நூற்றாண்டு. இவர் பெற்றோர் சிவ பக்தர். இவர் ஜாதி சிவ பக்தர் சிறந்து விளங்கும் வேளாளர் மரபு. இவர் பிறந்த நாட்டின் செழிப்பை சேக்கிழார் வருணிப்பதாவது :

> கருங்கதலிப் பெருங் குலைகள் களிற்றுக் கைம்முகங் காட்ட
> மருங்குவளர் கதிர்ச்செந்நெல் வயப்புரவி முகங்காட்டப்
> பெருஞ் சகடு தேர்காட்ட வினைஞரார்ப் பொலிபிறங்க
> நெருங்கியசா துரங்கபல நிகர்ப்பனவா நிறைமருதம்.

வாழைக்குலைகள் யானைகளின் தும்பிக்கைபோல் தள்ளிக் கொண்டிருப்பதும், செந்நெல் கதிர்கள் நன்கு விளைந்து குதிரைகள் முகம்போல் வளைந்து தோன்றுவதும், பெரிய வண்டிகள் தேர்கள்போல் செல்லுவதும், உழவர்கள் தொனி ஒலியின் ஆரவாரமும் நான்கு வகைப்படைகள் ஒன்றாகச் சேர்ந்துகொண்டிருக்கும் ஒரு இடம்போல் அந்த நாடு இருந்ததாம்.

திரு .... ஆம் ... ஊர் என்பது கடவுள் உண்மை விளங்கும் ஊர் என்று அர்த்தப்படுத்தலாம்.

சைவநெறித் தலைமேலும் யாவிக்கும் தகைமையினால்
தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திருவாமூர் திருவாமூர் (சேக்கிழார்).

புகழனார் வேளாண்மையில் சிறந்தவர். "இவன் தந்தை என்னோற்றான் கொல்" என்ற திருக்குறள் கூற்றுக்கேற்ப அப்பர் சுவாமியைப் பெற்ற இவருக்கு இப்பெயர் தகுந்ததே. திருநாவுக்கரசைப் பெற்றமாது இனியார் எந்த மாதினும் இனியவரே ஆதலின் அப்பெயரும் அவ்வம்மையாருக்கு மிகவும் பொருந்தியதே. ஒப்பற்ற கற்பினும் ஆழ்ந்த சிவ பக்தியினும் திலகம்போல் சிறந்து விளங்கிய திலகவதி யாருக்குங்கும் அவள் பெயர் நன்கு வாய்த்ததே. அப்பரை தனக்குத் தந்தைபோல் திருஞான சம்பந்தர் எண்ணியதால் அவர் அப்பர் என்று தமது சுவாமிகளுக்குப் பட்டப் பெயர் கொடுத்தார். அப்பருக்குத் தந்தை தாய் இட்டபெயர் மருணீக்கியார். மருள் அல்லது மயக்கத்தை நீக்கி ஒளி பரப்பியவர் என்று அர்த்தம் கொள்ளலாம்.

*அலகில்கலை துறைதழைப்ப வருந்தவத்தோர் நெறிவாழ*
*உலகில் மருணீக்கி யொளிவிளங்கு கதிர்போற்பின்*
*மலருமரு ணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார்*

(சேக்கிழார் புராணம்.)

திருநாவுக்கரசு என்ற பெயர், நாவினால் நவிலும் இவர், கனிமொழியில் நாவலரிலெல்லாருக்கும் சொற்கோ என்றர்த்தமாகும். மருள் நீக்கியாரின் பெற்றோர் இவரை இள வயதிலேயே கலை பயிலச் செய்தார்கள். இவரது அக்காள் திலகவதியாரையும் அவ்வூரில் வேளாண்மையில் சிறந்தவராகிய கலிப்பகையார் என்பாருக்கும் மணம் புரிய நிச்சயம் செய்யப்பட்டது. ஆனல் அக்காலத்தில் ஆண்ட அரசனுக்கு இவர் படைத்தலைவனுக வடநாடு செல்லவேண்டியதிருந்ததால் உடனே மணம் செய்துகொள்ள கலிப்பகையாருக்கு சமயம் கிட்டவில்லை. நெடுநாள் யுத்தம் நடந்துக்கொண்டேபோன சமயத்தில் புகழனரும் நோய்ப்பட்டு மரணமடைந்து விட்டார். பதிவிரதா பத்தினியாகிய அவர் மனைவி மாதினியார் கணவனை இழந்து ஆராத்துயரில் ஆழ்ந்து உயிர் துறந்துவிட்டனர். கலிப்பகையார் யுத்தத்தில் மடிந்து விட்டதாகச் செய்தி வந்தது. இதைக் கேட்ட திலகவதியார் உடனே தன்னுயிரையும் கலிப்கையாரோடு சேர்த்துவிடத் தீர்மானித்துவிட்டாள். ஆனல் அவள் தம்பி அவள் காலில் விழுந்து கெஞ்சி தன்னைத் தனியே அவள் அவரை விட்டுப் போகயோசித்தால்தான் அவளுக்கு முன்னமே தன்னுயிரையும் விட்டுவிடுவதாகப் புலம்பினர். தம்பியை உயிரோடு வைக்க நிறைவேற்ருது நிறுத் ஆசித்த திலகவதி தன் எண்ணத்தை

தினர். ஆனாலும் திரும்பி எவரையும் மணம்புரிய இசையாமல் கற்பரசியாக தவம் செய்துகொண்டிருந்தாள். அக்காலத்தில் அன்பு காரணமாக நெருப்பில் புகுந்து மனைவி தன்கணவனோடு உயிர் துறப்பது அன்பின் நெருக்குதலினாலே விளைந்த செயலாக எண்ணப்பட்டது. இப்படி தமக்கை தவம் நிலையிலே ஆழ்ந்திருப்பதைக் கவனித்த தம்பி உலகத்தில் தானும் மானிடரின் நிலையாமையை அதிகமாக உணர்ந்தவராக துன்பத்தை நீக்கவும் இன்பத்தை மானிடர்க்கு உண்டாக்கவும் முயன்று அறச்சாலைகள், தண்ணீர் பந்தல்கள், பூந்தோட்டங்கள், குளங்கள் முதலியன ஏற்படுத்தி ஏழைகளுக்கு உதவிவந்தார்.

> மாசின் மனத்துயரமொழிய மருணீக்கியார் நிரம்பித்
> தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராக
> காசினி மேற்புகழ் விளங்க நிதியளித்துக் கருணையினால்
> ஆசிலற சாலைகளுந் தண்ணீர் பந்தருமமைப்பார்.

இக்காலத்தில் சமணமதம் பலங்கொண்டு பரவியிருந்தது. இச்சமணர் பாயுடை தரித்திருப்பார்கள். பீலியென்ற மயில் தோகையும் இவர்கள்கூட இருக்கும். பூச்சி முட்டை எறும்புபோன்ற ஜெந்துக்கள் தங்கள் மேலேறிச் சாகாதபடி மிகக்கவனமாய் இருப்பார்கள். பூச்சிவிழுந்து ஆகாரத்துடன் அதைப்புசித்துவிடாதபடி பொழுதிருக்கும்முன் மாலை ஆகாரமருந்திவிடுவார்கள். மயிற்பீலிகளால் வழிப்பாதையில் செல்லும் எறும்புகளை மிதிபடாதபடி கவனத்துடன் அவற்றை பெருக்கிக்கொண்டு நடப்பார்கள். உறியில் கமண்டலத்துடன் எங்கும்சென்று நடந்து தங்கள் மதத்தைப்பரப்பினார்கள். இப்படிக் கடுந்துறவிகளாயிருக்

தாலும் அவர்களுள்ளத்தில் எள்ளளவும் இரக்கசிந்தைகிடையாது! தீமையின் பலன் தன்னாலேயே தன்கிரியைச்செய்து கொண்டேபோகும். எல்லாம் இயற்கையின் சட்டப்படியே நடந்துதான்வரும். தீமையைத்தடுக்க கடவுள் ஒருவர் அவசியமில்லை என்பது சமணர் போதகம். இதனால் இவர்கள் மதம் நாஸ்தீகத்தைச் சார்ந்திருந்தது.

உயிர் பிராணிகளுக்கு கருணைகாட்டி இவர்கள் நடந்து வருவதை இவர்கள் மிகமுக்கியப்படுத்தினது மருள் நீக்கியார் மனதைக்கவர்ந்தது. இவரும் சணசமயத்தைத் தழுவினர். தம்பி சமணனானதால் இவர் தமக்கையார் திலகவதியம்மை ஆராத்துயரடைந்தார்கள்.

திருவீரட்டானத்திருக்கோயில் பூசை செய்து தன் வாழ்க்கையை அங்கு தொண்டு செய்வதிலேயே செலுத்திவிட உடல், பொருள், ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்துவிட்டார்கள். தம்பி அப்பர் பாடலிபுத்திரத்திலுள்ள சமணர் மடம் சென்றார். சமண நூல்களை ஆராய்ந்தது தருமசேனர் என்ற பட்டம் பெற்று அங்கு தலைவருமானார். தேரர் என்னும் புத்த சமயப் பிரிவினையாரையும் தர்க்கத்தில் வென்றார். தன் தம்பியைச் சமணமதத் தவறான போதகங்களினின்று மீட்டருளவேண்டுமென்ற தமக்கை திலகவதியாரும் ஓயாது சிவபெருமானிடம் வேண்டிக்கொண்டிருந்தாள். அப்பருக்குச் சூலைநோய் பிடித்து வருத்தினர். இது கால் கைகள் வாதமுடக்குநோய். சமணர் தங்கள் கமண்டல நீரை அபிமந்திரித்துக் கொடுத்து தங்கள் பீலியால்

அவரைத் தடவிக் குணமாக்க முயன்றார்கள், ஒரு பயனு மில்லை. நோய் அதிகமேயாயிற்று. நாயனாரது மனம் தன் தமக்கையின்மேல் சென்றது. அவளுக்கு ஆள் அனுப்பி விசாரித்து அவருத்தரவின்படி அப்பர் அவரிருந்த சிவஸ்தல மடம் சென்றார். சமண அடையாளங்களைக் களைந்து வெள் ளாடை தரித்து தமக்குக் கைலாகு கொடுத்து நடத்தும் உதவியாளருடன் அக்காளிடம் சென்று வணங்கி நின்றார். திலகவதியார் அன்புடன் அவரை எழுந்திருக்கச்சொல்லி சிவபெருமான் அருளை நம்ப அவருக்குப் புத்தி சொல்லி நமசிவாய எனும் ஐந்தெழுத்தோதி திருநீற்றை அப்பருக்கு தமக்கையார் கொடுத்தனர். திருநீற்றை உடம்பு முழுவதும் பூசினவராய் அவர் தன் அக்காளுடன் கோயிலினுள் சென்று பெருமானை வணங்கி தமது பிணியும் ஏனையோர் பிணியும் அயர்வுற நீங்கும்படி "கூற்றாயினவாறு விலக்கினீர்" என்னும் ஆரம்பமுள்ள திருப்பதிகம் பாடினார். சூலைநோய் குணமாயிற்று.

> முன்பெலாமிளைய காலமூர்த்தியை நினையாதோடிக்
> கண்கணவிருமிநாளுங் கருத்தழிந்தருத்தமின்றிப்
> பின்பகலுணங்கலட்டும் பேதைமார் போன்றேனுள்ள
> மன்பனாய் வாழமாட்டேனதிகை வீரட்டனீரே

பாவத்தீர்ந்து தாம்பெற்ற திவ்விய ஆனந்தத்தையும் குறித்துப் பாடினார்.

> பத்திசேர்வழிகாட்டிப் பாவந்தீர்த்துப்
> பண்டைவினைப் பயமானவெல்லாம் போக்கித்
> தித்தித்தென் மனத்துள்ளேயூறுந் தேனைச்
> செங்காட்டங் குடியதனிற் கண்டேனே.

இவர்மேல் கோபங்கொண்ட சமணர்கள் அக்காலத்தில் ஆண்ட பல்லவ மன்னனிடத்தில் இவரைப்பற்றி பொய்யான குறைகூறுதல்செய்து இவரை பலவிதமாய் இம்சிக்க அம் மன்னனை ஏவிவிட்டார்கள். சிற்றுயிர்களும் சாகாதபடி பாதுகாக்க முயலும் இவர்கள், கொசுவை வடிகட்டி ஒட்டகத்தை விழுங்குவார்போல் நடந்துகொண்டார்கள். அப்பரை நீற்றறையில் போட்டுக்கொல்ல மன்னனை ஏவினார்கள். நஞ்சு கலந்த பாலை உண்பிக்கவும் செய்தார்களாம். பல்லவ அரசனும் சமண மதத்தனானதால் இவர்களுக்கு இணங்கினான். கத்தியினால் கொல்லுவது பாவமாகுமாம் அதனால் நீற்றறையில் போட வேண்டுமாம். கடலில் அவரை அழுத்தவும் செய்தார்களாம். ஒருவன் தன் மார்க்கத்தின் உள்ளான அருள் அர்த்தத்தையும் ஞானரசத்தையும் மறந்து அதன் வெளிச்சங்கள் சாரங்களையும் மேல்பூச்சுத் தோற்றங்களையுமே முக்கியப் படுத்துவதின் பலன் இதுதான். உள்ளன்பில்லாத மூடமான வீண் மதவைராக்கியப் பெருமை மதவெறியில் உண்டாவதும் இதுதான். ஆனாலும் கடவுளின் அதிசயப் பாமரிப்பினால் அப்பர் சமணரின் சதியோசனைகள் தீச்செயல்களிலிருந்து தப்பிக்கொண்டார். சமணனாயிருந்த முதலாவது மகேந்திரவர்மனும் சைவசமயம் தழுவினான்.

வானந் துளங்கிலென் மண்கம்பமாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண் கடலும்
மீனம்படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்
டூன மொன்றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே

என்ன துன்பம் வந்தாலும் அப்பர் மிகப் பொறுமை அன்போடு நடந்துகொண்டார். சமணர் கொடுஞ் செயல்கள் இவரை வருத்தவில்லை.

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பார் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞானவிகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞான திருஞானஞேயந்
தயங்கிய ஞானஞ்சங்கற் பனைஞானமாகும்
இருஞான மிவையெல்லாங் கடந்தசிவஞான
மாதலாற் சிவன்முத்தர் சிவமேகண்டிருப்பார்.

(சிவஞானசித்தியார்.)

கிறிஸ்தவ வேதபுத்தகத்தில் தெய்வபக்தனாகிய தானியேல் சிங்கக் குகையில் போடப்பட்டும், ஷாதராக், மேஷக் ஆபெத்நேகோவென்ற பெரியார் அக்கினியில் போடப்பட்டும், அவர்களுக்கு யாதொரு தீங்குமணுகவில்லை என்றதுபோல் அப்பர் சரித்திரமுமிருக்கிறது. கிறிஸ்துநாதர் வனாந்திரத்தில் காட்டு மிருகங்களின் மத்தியில் தங்கியிருந்தும் தீங்கு நேரிடாதிருந்ததாகவும் சுவிசேஷகர் கூறுகிறார். நல்லோரது சகவாசம் தீயதும் கொடியதுமான மிருகாதிகளையும் இயற்கையில் கேடுசெய்யும் வஸ்துக்களையும் மெல்லிய தன்மையுள்ளவாக மாற்றச்செய்துவிடும் என்பதற்குப் பல அத்தாட்சியுண்டு. அப்பர் பல சிவஸ்தலங்கள் சென்று திருப்பதிகங்கள் பாடி வந்தார். தில்லை என்ற சிதம்பரம் சென்று வணங்கி திரு விருத்தம், திரு நேரிசைப் பாட்டுகள் பாடினார்.

அவற்றில் ஒன்று "என்றுவந்தாய்" என்று இறைவனே தம்மை விசாரித்ததாகப் பாடியிருப்பது கவனிக்கத்தக்கது.

என்றுவந்தாய் ?

ஒன்றியிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவற்காய்ச்
சென்று தொழுமின்க டில்லையுச்சிற் றம்பலத்துநட்டம்
என்று வந்தா யென்னும் மெம்பெருமான் றன்றிருக் குறிப்பே.

பத்தனாய்பாடமாட்டேன் என்று தொடங்கும் திருப்பதிகம் பாடியபின், திருவீதியிலே தாம் எப்போதும் தன்னுடன் கையிலே கொண்டுபோகும் ஒரு புல் செதுக்கியால் கோயில் கற்கள்மேல் வளரும் புல்லைச் செதுக்கிப் பணிசெய்ய ஆரம்பித்தார். பொன்னம்பலம் சேர்ந்து அரியானை அந்தணர்தன் சிந்தையானை பாடினார்...............

பத்தனாய்பாடமாட்டேன் பரமனே பரமயோகி
யெத்திறற் பத்திசெய்கேனென்னை நீயிகழவேண்டா
முத்தனே முதல்வா தில்லையம்பலத் தாடுகின்ற
வத்தா வின்னுடல் காண்பானடியனேன் வந்தவாறே.
அரியானை அந்தணர் சிந்தையானை
யருமறை யினகத்தானை யணுவையார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங்கோனை மற்றைக்
கரியானை நான்முகக் கனலைக்காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற
பெரியானைப் பெரும்பற்றர் புலியூரானை
பேசாத நாளெல்லாம் பிறவாநாளே.

இவர் திருஞான சம்பந்தமூர்த்தியை இதன்பின் சீர்காழியில் சந்தித்து மகிழ்ந்தார்.

இவரின் பாவஉணர்ச்சியை குறிப்பிடும் ஓர் பாட்டு :

வெற்றிலேன் புலன்களைந்தும் வென்றவர்களாகத்தன்னில்
சென்றிதேனுதலாலே செந்நெறியதற்குச் சேயே
னின்றனே துரும்புகின்றே னீசனேனீசனேயோ
னின்றனேனுனையில்லே னென்செய்வான் தோன்றினேனே.

கடவுளை அண்டிக்கொள்ளுபவர்களை அவர்தம் உறவினராக்கிக் கொள்ளுகிறார் என்பதைப் பாடியிருக்கிறார் :

சிந்தையா னினைவார்களைச் சிக்கெனப்
பந்துவாக்கியுங் கொளுங் காண்மினே.
அப்ப நீ யம்மை நீ யையனு நீ யன்புடைய மாமனு மாமியு நீ
பொருளு நீ யொருகுலஞ் சுற்றமு மோரூரு நீ.

அப்பர் பாடிய வேறு பாட்டுகள் :—

1. உறுகயிறூசல்போல வொன்று விட்டொன்று பற்றி
மறுகயிறூசல் போவந்து வந்துலவு நெஞ்சம்
பெறு கயிறூசல் போலப் பிறை புல்குசடையாய் பாதத்
தறு கயிறூசலானே னதிகை வீரட்டனாரே.

2. கழித்திலேன் காமவெந்நோய் காதன்மையென் ஆபாசம்
ஒழித்திலேனுன் கணோக்கியுணர் வெனுமிமை திறந்து
விழித்திலேன் வெளிறு தோன்ற வினையெனுஞ்
சாக்குக் கொண்டேன்
அழித்திலேனயர்த்துப் போனேனதிகை வீரட்டனாரே.

3. மனமெனுந் தோணிபற்றி மதியெனுங் கோலையூன்றிச்
சினமெனுஞ் சாக்கையேற்றிச் செறிகடலோடும் போது
மதனெனும் பாறைதாக்கி மறியும்போதறிய வொண்ணா
துனையெனு முணர்வைநல்கா யொற்றியூருடைய கோவே.

4. கங்கையாடிலென் காவிரியாடிலென்
கொங்குதண குமரித்துறை யாடிலென்
ஓங்குமா கடலோத நீராடிலே
னெங்கு மீசனெனாத வர்க்கில்லையே

5. நன்று நோற்கிலென் பட்டினியாகிலென்
குறைமேறியிருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரித் ளிர்த்து திரியிலே
னென்று மீசனென் பார்க்கன்றி யில்லையே.

இவ்வுடலை நோயில்லாமல் காப்பது அன்போடு கடவுளைத் தொழுவதாலேதான் :

நாளு நம்முடை நாள்களறிகிலோம்
ஆளு நோய்களோ ரைம்பதொடாறெட்டும்
ஏழைமை பட்டிருந்து நீர்நையாதே
கோளிலி யரன் பாதமே கூறுமே.

நமது உடம்பை வீடாக வருணிக்கிறார்.........

கால்கொடுத்தெலும்பு மூட்டிக்கதிர் நரம்பாக்கையார்த்துத்
தோலுடுத்துழைஞர் கூடியொழிப்பது கஞ்சுகின்றேன்
சேலுடைப்பழனஞ் சூழ்ந்ததிருக் கொண்டீச்சரத்துள்ளானே.

உழவுசெய்து நெல்விளையச் செய்வதுபோல் சிவகதியடைய வழிகாட்டும் பாட்டு :—

மெய்ம்மையா முழவைச்செய்து விருப்பெனும் வித்தைவித்திப்
பொய்ம்மையாங்களையை வாங்கிப்பொறையெனு நீரைப்பாய்ச்சித்
தம்மையுநோக்கிக் கண்டுதகவெனும் வேலியிட்டுச்
செம்மையு ணிற்பாராகிற் சிவகதிவிளையுமன்றே.

---

# திருஞான சம்பந்தமூர்த்தி.

நாயன்மாரில் சிறந்த ஓர் பக்த கவிராயரான இவர் காலம் பல்லவ மன்னனாகிய நரசிங்கபோததரையன் அரசு புரிந்த காலமே — அதாவது கி. பி. 630–660. இவர் தகப்பனார் பெயர் சிவபாத இருதயர். சிவனுடைய பாதத்திற்கு தன்னுடைய இருதயத்தைப்படைத்தவர் என்று இது அர்த்தங்கொள்ளும். இவர் வசித்தஇடம் தஞ்சாவூர் ஜில்லாவில் சீயாழி என்ற ஊர்.

இவர் முதலாவது இயற்றிய பாட்டைக்குறித்து ஒரு கதையுண்டு. இவர் மிகச்சிறுபிராயமாயிருந்தபோது ஒருநாள், இவர் தகப்பனார் சீர்காழியில் கோவிற் குளத்தில் குளித்துப் பூசை செய்யப் போய்க் கொண்டிருக்கும்போது, குழந்தையாகிய சம்பந்தரும் பின் ஓடினாராம். பையனைக் கரையோரத்தில வைத்துவிட்டு தகப்பன் குளித்துக் கொண்டிருக்கையில், பிள்ளை அழுகிற சத்தத்தைக்கேட்ட சிவபெருமான் தனது மனைவியாகிய உமையை பிள்ளைக்கு பாலூட்ட உத்தரவு கொடுத்தபடி அவளும்பாலூட்டினளாம். அப்போது பின்வரும் சரணத்தை கர்த்தர் பாடினாராம்.

> தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
> காடுடைய சுடலைப்பொடிபூசி யென்னுள்ளங் கவர்கள்வ
> னேடுடைய மலரான்முன் னாள்பணிந்தேத்த வருள்செய்த
> பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பிரமாபுரம் என்பது சீயாழிக்கு முன்னிருந்த பெயராம்.

இவர் பல சிவக்ஷேத்திரங்கள் சென்று சிவாலயங்[illegible]ால் வணங்கித் தேவாரங்கள் பாடிவந்தார். திருநெல்வேலி ஜில்லாவிலிருக்கும் குற்றாலம் சென்றபோது அங்கு இந்நாள் மட்டும் குற்றாலநாதர் கோவிலில் இருக்கிற ஒரு பழம் பலா மரத்தைப்பற்றி இவர் பாடியிருக்கிறார்.

திருக்குறும்பலா — பண் — காந்தாரம்.

திருந்தமதி சூடித் தெண்ணீர் சடைகரந்து தேவிபாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தால் காடுறைதல் புரிந்த செல்வ
ரிருந்தவிடம் வினவிலேலங்கமழ் சோலையின் வண்டு யாழ் செய்
குருந்தமண நாறுங் குன்றிடஞ் சூழ்தண் சாரர் குறும்பலாவே.

குலைவாழைத் தீங்கனியும்மறுங்கனியும்
தேன்பிலிற்றுங் குறும்பலாவே.

திருநெல்வேலி, திருப்பத்தூர், ராமேஸ்வரம், மதுரை திருச்சினாப்பள்ளி, மயிலாப்பூர், திருவொற்றியூர், திரு அண்ணாமலை இப்படிப் பல சிவஸ்தலங்களும் சென்று அங்காங்குள்ள சிவாலயங்களின் பெருமையைக் குறித்துப் பாடிவந்தார்.

திருஅண்ணாமலை — பண் — நட்டப்பாடை.

உண்ணா முலையுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம் முழவதிரு
மண்ணாமலை தொழுவார் வினைவழுவாவணமுறுமே.

தனது ஏகபுத்திரனென்பதையும் பாராது தனது விருந்தினராய் வந்தவருக்கு சிறுவனைவிருந்தளிக்க சற்றும்

பின்வாங்காதிருந்த சிறுதொண்டர் கதை எல்லாருக்கும் தெரிந்த விஷயமல்லவா?

> பைங்கோட்டு மலர்ப் புன்னைப் பறவைகள் பயப் பூரச்
> சங்காட்டர் தவிர்த்தென்னைத் தவிர நோய் தந்தானே
> செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணி செய்ய
> வெங்காட்டுளனலேந்தி விளையாடும் பெருமானே.

சிறுதொண்டர் என்ற பெயர் அவருடைய அரிய சிவபக்தியினிமித்தம் தஞ்சாவூர் ஜில்லா திருச்செங்காட்டங் குடியில் சேனாபதியாக சிறந்து விளங்கிய பரஞ்சோதியாருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. இவருடைய மனைவி திருவெண்காட்டு நங்கையார் என்ற பத்தினி. இவர்களுக்கு சீராளதேவர் என்ற ஒரே மகவுதான் இருந்தான். ஐந்து பிராயத்திலேயே கல்வி பெற ஆரம்பித்துவிட்டான். சிறுதொண்டர் திருஞானசம்பந்த மூர்த்தியை நேரே அறிந்த அவர் காலத்தவர் என்று எண்ணிக்கப்படுகிறது. கி. பி. 642-ல் வாதாவி என்ற இடத்தில் இவர் பல்லவ மன்னனை எதிர்த்து சில அரசரோடு போர்புரிந்து வென்றதாகச் சரித்திரம் கூறுகிறது.

வாதாவிவெற்றி வருணிப்பு.

> மன்னவர்க்குத் தண்டு போய்
> வடபுலத்து வாதாவித்
> தொன்னகரம் துகளாகத்
> துளைநெடுங்கை வரையகத்தும்
> மன்மணியும் நிதிக்குவையும்
> பகட்டினமும் பரித்தொகையும்
> இகலரசன் முன்கொணர்ந்தார்.

(பெரிய புராணம் சிறுத்தொண்டர் சரித்திரம்.)

இந்த சம்பவத்தினால் திருஞான சம்பந்த மூர்த்தியின் காலமும் 7-வது நூற்றாண்டு நடுக்காலம் போலிருந்திருக்க வேண்டுமென்றும் நினைக்க இடமுண்டு. இவர் வைராக்கியத் தையும் மெய் அன்பையும் சோதித்தறியும்படி சிவபெருமான் வைரவன் வேஷம் பூண்டு இவர் இல்லம் வந்து இவர் ஏக புத்திரனையே தனக்கு ஆகாரமாகக் கொடுக்கச் செய்ததும், விருந்தருந்தினபின் அவர் கட்டளைபடி இளைஞன் திரும்பவும் உயிரோடு வந்து தன் தந்தை தாய் மனம் களிக்கச் செய்ததும் எவருக்கும் தெரிந்த கதையே.

மங்கையர்கரசியாரின் சரித்திரத்தையும் இங்கெடுத்துக் கூறுவது தகுதியாகும். மங்கையர்க்கரசி சோழ மன்னனின் மகள். மதுரையிலாண்ட கூன்மாறபாண்டிய மன்னன் மனைவி.

இக்காலத்தில் சமணமதத்தினருக்கும் சிவமதத் தினருக்கும் மிகப்போராட்டம் நடந்துக் கொண்டிருந்தது. சமணமதம் மகாவீரன் என்னும் பெரியாரால் முதல் போதிக் கப்பட்டது. எவ்வுயிரையும் கொல்லாமை இதன் முக்கிய பிரமாணம். தாவரவஸ்துக்களைக்கூட மாத்திலிருந்து நன்கு முற்றிப் பழுத்துக் காய்ந்து விழுந்தபின்தான் சாப்பிடலாம். கடிக்கும் மூட்டைப் பூச்சியோ, வேதனையுண்டாக்கும் எறும்போ எதையும் கொல்லலாகாது. சமணர் கடுந்துறவிகள். பாயுடுத்தி மயில் தோகையைப்பிடித்துக்கொண்டு திரிவார்கள். இன்னும் சில வைராக்கியமுள்ள துறவிகளிற் சிலர் புசியாமல் கடும் உபவாசமிருந்து மரிப்பதும் உண்டு. புதுக்கோட்டை சமஸ்தானத்தில் நார்தா மலையென்ற ஓர் இடத்தில் இப்படிப்

பட்ட சமண துறவிகள் படுத்திருந்த பாறையை இன்னும் பார்க்கலாம். இதின் மேலேயேக் கிடந்து உபவாசித்து செத்து உருண்டு விழுவார்களாம். பக்கத்திலே இவர்கள் வசித்த பாறையில் வெடிக்கப்பட்ட குகைகளுமிருக்கின்றன. கூன்மாற பாண்டியன் ஆதியில் சிவபக்தனாயிருந்தவன் சமண மதத்திற்குமாறிவிட்டான். மங்கையர்க்காசியோ சிவபக்தினி. தன் கணவனைக் குணப்படுத்திச் சரிப்படுத்த தனது நாட்டு கவிவல்லவனும் சிவபக்த குருவுமாகிய திருஞானசம்பந்த மூர்த்தியைத் தருவித்தாள். திருஞானசம்பந்தர் தனது பக்தியால் கூன்மாற பாண்டியன் கூன்வியாதி குணமாகச் செய்து விட்டார். மன்னனும் சிவமதத்திற்கு திரும்பி விட்டான். சமணமுனிவர் தர்க்கத்தில் தோல்வியுற்றார்கள். மதத்தர்க்கத்தில் சம்பந்தரால் தோல்வியடைந்த சமணமுனிவர்கள் கழுவேற்றப்பட்டார்கள். மேல்நாட்டில் ரோமருக்குள் சிலுவைத்தண்டனைக்கொப்பாக தமிழ் நாட்டில் கழுவேற்றல் இருந்தது.

மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை வரிவளைக்கை மடமானி
பங்கயச்செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாடோறும் பரவ
பொங்கழலுருவ பூதநாயகனால் வேதமும் பொருள்களுமருளி
யங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்தவாலவாயாவது மிதுவே.

மங்கையர்க்கரசி தனது கணவனுக்கு ஒரு மந்திரி போல விளங்கினாள். குலச்சிறையார் இவருக்கு உதவி அமைச்சர். சம்பந்தர்மேல் இவருக்கும் விசுவாசமுண்டு. பள்ளி என்பது சமணர் கோயில். பாழி என்பது அவர்கள்

தங்குமிடம். சமணமுனிவர் பாயுடுத்தி கமண்டலமும், மயிர் பீலியும், தடுக்கும் உடையவராய்ச் சென்றனர். சைவர்களைக் காண்பதும் கேட்பதும் தமக்குத்தீட்டு என்றெண்ணினார்கள். இரவில் விளக்கொளியில் உணவுகொள்ளார்கள். இவர்களின் அத்திநாத்தி என்ற மந்திரம் இருப்பது இல்லை என்ற பொருள்படும். உலகப்பொருளின் நிலையாமையை அவர்கள் வற்புறுத்தினார்கள். ஆனால் கடவுளின் கருணையை அவர்கள் எண்ணவில்லை. இதினால் சாவுக்குத்துணிந்து நின்றார்கள். சோழநாட்டில் புத்தர்களுடனும் சம்பந்தர் தர்க்கம் செய்து அவர்களைத் தோற்கடித்தார்.

## சம்பந்தரின் சில இனிய கவிகள்.

கடவுளைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் பாவித்துக் குயிலையும், கிளியையும் தூதுவிடுவதாகப் பாடியது பின்வருவது :—

பாறுறுமலர்ச் சூதப் பல்லவங்களவைகோதி
ஏனோர்க் குமினிதாக மொழியு மொழிவினக்குயிலே
தேனாரும் பொழில் புடைசூழ் திருத்தேணி புரத்தமரர்
கோனானை யென்னிடைக் கேவரவொருகாற் கூவாயே

சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே யுணத்தருவேன் மோய் பவளத்தொடு தரளத்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் றிருநாமமெனக் கொருகாற் பேசாயே.

சம்பந்தர் காலம் :— சம்பந்தர்காலத்தில் சிறுதொண்டர் செங்காட்டங்குடியில் வாழ்ந்தார். காஞ்சிபுரத்திலாண்ட

முதல் நரசிம்மனுக்கு இவர் சேனாதிபதி பம்பாய் ராஜதானியில் தற்காலத்திலுள்ள வாதாவி நகரத்தில் அங்கு ஆண்ட சாளுக்கிய மன்னன் இரண்டாவது புலிகேசன் சேனையை சிறுதொண்டர் முறியடித்தார். இம்மன்னன் காலம் 609 முதல் 642 வரை. (நரசிம்மவர்மன் காஞ்சிபுரத்தில் இக்காலத்தில் ஆண்டான்). இதனால் சம்பந்தர் காலம் 7-வது நூற்றாண்டில் தான் இருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கப் படுகிறது.

---

## பட்டினத்துப் பிள்ளையார்.

தஞ்சாவூர் ஜில்லாவில் கடலோரத்தில் காவேரிப்பூம் பட்டிணம் என்ற துறைமுகம் இருக்கிறது. காவேரி நதிக் கடலில் சேரும் சங்கம் இங்கிருக்கிறது. தற்காலத்தில் ஏராளமாய் கடல் மணல் பரந்த இந்த இடத்தில் ஒரு சிறிய ஊர் தான் இருக்கிறது. ஆனால் கொஞ்சம் குறைய 900 வருஷங்களுக்கு முன்னே இது ஒரு சிறந்த சோழநாட்டுத் துறைமுகமாய் இருந்தது. ராஜேந்திரன் சோழமன்னன் காலத்தில் அவருடைய கடல்படைக் கப்பல்களும், மற்றும் ஏராளமான வியாபாரக் கப்பல்களும் இத்துறைமுகத்துக்கு வந்து போய்க் கொண்டிருக்கும். ஐசுவரியவான்கள் இங்கிருந்து வியாபாரம் செய்தனர். கப்பல் வியாபாரியும் தனவந்தருமாக இங்கு வசித்த பட்டினத்துப் பிள்ளையார் எவ்விதமாக லௌகீக வாழ்க்கையைத் துறந்து பரம வாழ்க்கையில் ஈடுபட்டார் என்பதை 91-ம் பக்கத்தில் விவரமாக கூறியிருக்கிறேன். அதை வாசித்தறியவும்.

கட்டளைக் கலித்துறை:—

அத்தமும் வாழ்வும் அகத்துமட் டே,விழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டே,விம்மி விம்மி இரு
கைத்தலை மேல்வைத் தழுமைந் தரும்சுடு காடுமட்டே;
பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாபமுமே.

என்பெற்ற தாயாரும் என்னைப் பிணமென் றிகழ்ந்துவிட் டார்;
பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லிப் புலம்பிவிட்டார்;
கொன்பெற்ற மைந்தரும் செய்கடன் செய்து திரும்பிவிட்டார்;
உன்பற் றொழிய ஒரு பற்றும் இல்லை உடையவனே.

சொல்லால் வருங்குற்றம், சிந்தையால்வருந் தோடம், செய்த
பொல்லாத தீவினை, பார்வையிற் பாவங்கள், புண்ணிய நூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குகள், ஆயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாயென் இறைவனே.

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் ஓடுமுன்னே-மேல்விழுந்
துற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
பற்றாயோ ஈசன் பதம்.

(பட்டினத்துப் பிள்ளை.)

---

## மாணிக்கவாசகர்.

இவர் பிறந்த ஊர் வைகைநதி ஓரமுள்ள திருவாதவூர். வாதவூரான் என்று சிலர் இவருக்குப் பெயரிட்டார். பழைய காலத்தில் நமது தமிழ்நாடு மூன்று பாகமாயிருந்தன.

அவையாவன :- சேர, சோழ, பாண்டியநாடுகள் என்பனவே. பாண்டிய நாடு தற்காலத்தில் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் ஜில்லாக்கள் இருக்கிற பாகமே. இந்த பாண்டிய நாட்டிற்குத் தலைநகரம் மதுரை. மதுரையில் கி. பி. 810—835 மட்டும் வரகுணபாண்டியன் என்ற மன்னன் ஆண்டு வந்தார். அக்காலத்து பாண்டிய மன்னர்களுக்கு குதிரைமேல் மிகப்பிரியம். அரபி தேசத்திலிருந்து குதிரைகள் கொண்டு வரப்படும். வரகுண பாண்டியன்பிரதம மந்திரியாக மாணிக்க வாசகர் இருந்தார். இம்மன்னன் குதிரைகள் வாங்குமபடி மாணிக்க வாசகரிடத்தில் ஏராளமான திரவியம் கொடுத்து திருப்பெருந்துறை என்ற துறைமுகத்துக்கு அனுப்பிவைத்தார். போகிற வழியில் ஒரு சிவாலயத்தில் மாணிக்கவாசகர் சிவதரிசனம் கண்டு பரவசமாகி அரசன் கொடுத்த திரவியத்தை எல்லாம் ஆலயத்திற்கும், ஏழைகளுக்கும் கொடுத்துவிட்டார். இதைக் குறித்து கேள்விப்பட்ட மன்னன் மிகவும் கோபம் கொண்டு மாணிக்கவாசகரை சிறையில் அடைத்துவிட்டான். நரிகள் பரிகளான (குதிரைகளான) கதை எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. கடவுளை நோக்கி மாணிக்கவாசகர் மன்றாடினார். பின்பு விடுதலைப்பெற்று பல சிவஸ்தலங்கள் சென்று மாணிக்கவாசகர் இறைவனைப் போற்றி வந்தார். இவர் இயற்றிய சிறந்த நூலுக்கு திருவாசகம் என்று பெயர். இவர் மொழிந்த வாசகங்கள் மாணிக்கம் போன்றிருந்தமையால் மாணிக்கவாசகர் என்ற பெயர் இவருக்கு வந்தது. திருவாசகத்துக் குருகாதார் ஒரு வாசகத்துக் குமுருகார் என்று சொல்லப்படும்.

அம்மையே யப்பா வொப்பிலா மணியே
அன்பினில் விளைந்த வாரமுதே
பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவ பெருமானே,
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

அருளுடைச் சுடரே யளிந்ததோர் கனியே
பெருந்திற லருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவ பெருமானே,
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
யுலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவ பெருமானே.
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

(மாணிக்கவாசகர்.)

---

## தாயுமானவர்.

1704-ம் வருஷத்திலிருந்து 1731-ம் வருஷம் வரை பாண்டியநாட்டில் நாய்க்க வம்சத்தைச் சேர்ந்த விஜயரங்க சொக்கநாத நாயக்கன் என்னும் மன்னன் ஆண்டு வந்தான். இந்த மன்னனுக்கு சம்பாதியாக கேடிலி அப்பப்பிள்ளை என்ற ஒருவர் இருந்தார். கேடிலி அப்பப்பிள்ளையின் சொந்தவூர் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள வேதாரனியம் என்பது. கேடிலி அப்பப்பிள்ளைக்கு பிள்ளையில்லை. திருச்சிராப் பள்ளியில் தாயுமான ஈசுவரர் கோவில் என்ற ஒரு ஆலயம் இருக்கிறது. இந்த கோவிலில் கேடிலியப்பப்பிள்ளை வேண்டிக்கொண்டதின் பேரில்ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு தாயுமானவர் என்று பெயரிட்டார். தகப்பன் கேடிலி அப்பப்பிள்ளை இறந்த பிறகு அவர் வகித்த சம்பிரதிப் பதவிக்கு மகன் தாயுமானவர் வந்தார். இவர் வாலிபர். பார்க்க அழகிய தோற்றமுள்ளவர். அரசனின் மரணத்திற்குப் பின் அவன் விதவையாகிய மீனாட்சி பட்டத்திற்கு வந்தாள். ராணிக்கு தாயுமானவர்மேல் காதல் உண்டாயிற்று. தன்னைக்கலியாணம் செய்துக்கொள்ளும்படி மேல்சாடையாக குறிப்பிட்டாள். தாயுமானவரோ வாலிபாயிருந்தும் கடவுளின்மேல் மிக்க பற்றுதல் கொண்டவர் அரண்மனையில் இருந்தாலும் அவர் உள்ளான ஆத்துமாவோ தெய்வ தியானத் திலேயே இருந்தது. ராணியின் காதலுக்குப் பயந்து இராமநாதபுரம் போய் மறைந்து கொண்டார்.

பொன்னை மாதரைப் பூமியை நாடிடே
னென்னை நாடிய வென்னுயிர் நாதனே
யுன்னை நாடுவெ னுன்னருட் டுவெளி
தன்னை நாடுவென் தன்னந் தனியனே.

இரும்பைக் காந்த மிழுக்கின்றவாறென்னைத்
திரும்பிப்பார்க்க வொட்டாமற் றிருவடிக்
கரும்பைத்தந்து கண்ணீர் கம்பலையெல்லா
மரும்பச் செய்யென தன்னை யொப்பாமனே.

ஒரு பக்தன் தெய்வவழி நடத்துதலுக்காகத் தவித்துக் காத்திருக்கும்போது கடவுள் திருஅருள் தோற்றமாக தம்மை அவனுக்கு வெளிப்படுத்தி உபதேசம் செய்வாரென்பது சிவமதப்போதகம். தாயுமானவர் இப்படி குரு உபதேசம் பெறத் தவித்தபோது மௌன குருவாக தெய்வத் திருஅருள் தோற்றம் அவருக்குக்கிடைத்தது. மௌன குருசன்னதியில் தாயுமானவர் தயங்கி ஏங்கி நின்றபோது அவரிடம், "சும்மா இரு," என்ற சுருக்கமான இருபதங்களை மாத்திரம் கடைசியாக உபதேசம்சொல்லிவிட்டு குரு மறைந்துவிட்டார்.

கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோவேன்
சொற்கண்டாதேதென நான் சொல்லுவேன் — விற்கண்ட
வானமதிகாண மௌனி மௌனத்தனித்த
தானமதிலூருமமிர்தம்.

கரைந்து கரைந்துருகிக் கண்ணீராறுக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தாமு
நின்னையே சிந்திக்க நீ கொடுத்தாய் மோகா
னென்னை முழுதுங் கொடுத்தேனே.

மோனகுருவளித்த மோனமேயானந்த
ஞானவருளமது நானுமது—வானுதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
வென்றறிந் தேனனந்தமே.

இவர் இயற்றிய பாரபாக் கண்ணிகள் முதலிய பலகவிகள் உள்ளத்தை உருக்கிப் படிப்பவரை பரவசமாக்கும்.

எத்தன்மைக் குற்றம் இயற்றிடினும் தாய்பொறுக்கும்
அத்தன்மை நின்னளும் அன்றோ பாரபரமே.

அன்பர் பணிசெய்ய என்னை ஆளாக்கிவிட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பாரபரமே.

நேரே நினதருள் என்நெஞ்சைக் கவரினென்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பாரபரமே.

நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.

---

# வித்வான் கிருஷ்ண பிள்ளை வாழ்க்கை சரித்திரச் சுருக்கம்.

தமிழ்தாய்சேவையிலும் தமிழ்மொழி வளர்ப்பு சிறப்பிலும் ஆர்வம் காட்டிவிளங்கியதில் நற்பெயரெடுத்திருப்பது தமிழ்நாட்டின் தென்பாகமாகிய திருநெல்வேலிக்கோட்டமென்பது மிகையாகாது. வைணவப் பக்தர் திருமங்கையாழ்வார், மகாகவி பாரதியார், தேசாபிமானிகள் சுப்பிரமணிய சிவா, சிதம்பரம் பிள்ளை, பாஞ்சாலக்குறிச்சி வீரன் கட்டபொம்மு இப்படி எத்துணை பெரியாரை ஈன்றெடுத்த தென்பாகம் இது. மேலும் அந்நியநாட்டிலிருந்து வந்தவர்களைக்கூட தமிழ் புலவர்களாக்கி சிறக்கசெய்த நாடு இது. தேம்பாவணியென்ற அமிர்தகாவியம் பாடிய வீரமா முனியெனும் பெஸ்கி இத்தாலியா பாதிரியார், திருக்குறள், திருவாசகம் என்ற காவியங்களை ஆங்கிலத்தில் அழகாக மொழிபெயர்த்த ஆங்கிலநாட்டு சாஸ்திரி போப்பையர், திராவிட இலக்கணம், திருநெல்வேலி நாட்டுச்சரித்திரம் முதலிய அரிய நூற்களெழுதிய அத்தியக்ஷர் கால்டுவெல் என்போருக்கு தமிழை ஊட்டியநாடுமிதுவே. பாண்டியநாட்டின் தென்பகுதியில் தாம்பிரபாணி ஆற்றோரமுள்ள பாளையங் கோட்டை நகரத்திலிருந்து கொஞ்சம் குறைய 4-மைல் தூரத்திலே இரட்டியாபட்டி என்னும் கிராமமிருக்கிறது. இங்கு கொஞ்சம் குறைய 140-ஆண்டுகளுக்கு முன்னே வேளாளர்மரபினைச் சேர்ந்த சங்கரநாராயண பிள்ளை யென்ற ஒரு கம்பராமாயணப் பிரசங்கியிருந்தார். இராமாயணம், மகா

பாரதம், நாலாயிரப் பிரபந்தம் முதலிய வைணவ நூற்களில் நிபுணராயிருந்த வைணவ பக்தன் இவர். 1827-ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 23-ம் தேதிக்குச்சமமான கொல்லம் 1003-ம் ஆண்டு சித்திரைமாதம் 12-ம் தேதி இவருக்கு ஒரு ஆண்மகன் பிறந்தார். இவர்தான் நமது கதாநாயகன் கிருஷ்ணன். இவருக்குப்பின் பிறந்த இரண்டாமகனுக்கு முத்தையா என்ற பெயர். தானே பிள்ளைகளுக்கு குருவாயிருந்து வைணவ போதகம் இவர்களுக்குக்கற்றுக்கொடுத்து தமிழ்மொழியிலும் தமது மக்கள் புலவர்களாகும்படி சங்கரநாராயண பிள்ளை அரும்பிரயாசமெடுத்தார். "தந்தை மகற்காற்று நன்றி அவை யத்து முந்தியிருப்பச்செயல்" எனும் திருக்குறள் மொழிக் கிசைய இவர்கள் வளர்ந்தார்கள். தமிழ் இலக்கியத்தில் மாத் திரமல்ல, இலக்கணத்திலும் தம்மக்கள் வல்லுனராக விரும்பி அதில் கியாதிபெற்ற மாணிக்க வாசகத்தேவர் என்பாரையும் அவர்களுக்குப் பயிற்சி அளிக்க ஒழுங்கு செய்தார். அக்கால வழக்கத்தின்படி 15-வயதிலேயே கிருஷ்ணனுக்கு திருமண மாய்விட்டது. இதன் பின் சங்கரநாராயண பிள்ளை மரித்து விட்டார். தந்தைமறைந்தபின் இரு புதல்வர்களும் திருப் பாற்கடனூர் கவிராயர் உதவிதேடி யாப்பிலக்கணங்களையும் கற்றுவந்தார்கள். வைணவ நூல்களாகிய கலம்பகம், திருவாய்மொழி, சடகோபரந்தாதி முதலியனவற்றையும் பாராயணம் செய்துவந்தார்கள். கிருஷ்ண பிள்ளை பதினறு வயது பிராயத்திலேயே கம்பராமாயணக்கவிகளைப் பாரா யணம் செய்து பொருள் படித்தும் திறமையடைந்திருந்தார். சாயர்புரம் கிறிஸ்தவ கல்லூரிக்கு 1852-ம் ஆண்டு தமிழ்

பண்டிதராக கிருஷ்ண பிள்ளை அமைந்தார். இங்கு இருந்த கல்லூரித்தலைவரும் மற்றும் கிறிஸ்துவின் அடியார்களும் இவருக்குக்காட்டிய அன்பு இவர்மனதைக்கவர்ந்தது. "அவர்கள் பட்சத்தோடும், அன்போடும் போதிக்கிற அருமையான வார்த்தைகள் ஆரம்பத்தில் எனக்கு வெறுப்பாயும் கசப்பாயும் இருந்தாலும், நாளடைவில் அவர்கள் காட்டிய நற்குண செய்கைகள் மனதில் ஊன்றி, அவர்களைத்தடுத்துப் பேசாமலிருக்க என்னை ஏவினது," என்று கிருஷ்ண பிள்ளை தாமே கூறுகிறார். கிறிஸ்தவ வேதநூல்களை ஆராயத்தொடங்கினார். பாவிகளுக்காக தன்னுயிரையே தியாகம் செய்த அருள்வள்ளல் இயேசுக்கிறிஸ்து நாதரின் கருணை அவர் மனதைப் பலமாக இழுத்தது. இவருக்கு சற்றுமுன்னாக இவர் ஆப்தநண்பர்கள் சண்முகநாதக்கவிராயரும், வைத்திய நிபுணர் டாக்டர் தனுக்கோடி ராஜாவும், இவர் சொந்தத் தம்பி முத்தையாவும் கிறிஸ்துவின் அடியார்களாகி விட்டார்கள். தனுக்கோடி ராஜாவுடன் ஓரிரவு நடு நிசிமட்டும் மிக நேரம் அமர்ந்து பேசி வீடு திரும்பியபின் இவர் மனம் தெளிவு அடைந்தது. அதே இரவு தன்னை யேசுநாதருக்கு அர்ப்பணம் செய்து பின்வரும் செய்யுளை எழுதினார்.

கருணையங்கடலே அந்த காரமாம்வினையைப் போக்கும்
அருணனே அடியேற்காக ஆருயிர் விடுத்த தேவே
பொருணர்தய தெரியாத் தீய புல்லிய னென்னையாட்கொள்ள
தருணமென்னிதய நிற்க சமர்ப்பணத் தருமமூர்த்தி.

1858-ம் ஆண்டில் தமது முப்பதாம் வயதில் இவர் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்து மார்க்கம் சேர்ந்தார்.

இவர் இயற்றிய நூல்கள் :—

1. இரக்ஷணிய யாத்திரிகம்.

கம்பராமாயணப்போக்கில் கொஞ்சங் குறைய 4000 செய்யுட்களடங்கிய ஒரு பெருங்காப்பியமிது. ஆங்கிலத்தில் யோவான் பன்னியன் எனும் பெரியாரியற்றிய மோட்ச பிரயாணம் என்னும் நூல் கிருஷ்ணபிள்ளை மனதைக்கவர்ந்தது. அதை தழுவி இந்த காப்பியத்தை இவர் இயற்றினும் இது அதின் மொழிபெயர்ப்பல்ல, தனிப்பட்ட ஒரு வேறு நூலே. கற்றோரை மனப்பரவசமடையச் செய்யும் கம்பராமாயணத் திற்கு இது ஒத்திருக்குமாதலால் கிருஷ்ண பிள்ளையை கிறிஸ்தவக் கம்பர் என்று பெரியாரழைப்பார். வெஞ்செயல் அரக்கரை வில்வலிமையால் வென்றவர் இராமர். பாவத்தில் சிக்கிக் கறைபட்டுத் தீமையில் ஆழ்ந்து கிடந்த மானிடரை அத்திய நிலையிலிருந்து மீட்டு இரக்ஷிக்க கருணாமூர்த்தியாகிய கிறிஸ்து அவதார புருஷரானார். தமது சிலுவையில் பாவியின் மேலுள்ள அன்பினால் நெருக்கப்பட்டுத் தூண்டப்பட்டவராய் தமது உயிரையும் பரித்தியாகம் செய்தார். இதையே இக் காவியம் விவரித்துப் பாடுகிறது.

ஆகாமியத்திலே செத்துக் கிடந்த எனை
ஆவியில் உயிர்ப்பித்தனை
அஞ்ஞான இருளூடு கண்கெட்டலைந்தவெற்
கவியாத ஒளிகாட்டினை
மாசாதபேயின் அடிமையாய்ப் போன எனை
வலியப் பிடித்திழுத்துன்

மகிமைக் குயர்த்திக் கிறிஸ்துவுக்குள் எனையும்
மைந்தனாக பாவித்தனை
தேகாதி பிரபஞ்ச நச்சித் திரிந்தெனைச்
சேவியா பாவியெற்குத்
திருவுளம் இரங்கி நீ செய்த இந் நன்றியைச்
சிதையாத சிந்தை தருவாய்
பாகாயென் உளமுடு மதுரிக்க நல்லருள்
பழுத் தொழுகுவதருவே
பக்த ஜனபரிபால நித்யம் அவர் அநுகூல
பரமார்த்த பரமநிதியே.

பக்தியெனும் விருக்ஷத்தின் நற்கனி நல்நடத்தையே. கடவுளின் வசனமாகிய திவ்விய வித்து ஒருவன் மனதில் விசுவாசமாகிய வேரூன்றி வளரும்போது அன்பெனும் கிளைகள் பரிசுத்தமெனும் நற்கந்த வாசனை வீசும் என்பதை அழகாக பின்வருமாறு வருணிக்கிறார் :

வித்தாகும் திருவசன மூலைக்கிளம்பி விசுவாச
உத்தமவேர் அகத்தூன்றி உள்ளன்கிளைத்தோங்கி
சுத்த நினைவெனும் நறும்பூந்துணர் மலிந்துன்ன தந்தோயும்
பத்தியெனும் தருவினுக்கு நன்னடைக்கை பலமாமால்.

தெய்வ பக்தியில் இலயித்து தன்வயமிழந்து பரவச மடைந்து பாடிய தமிழ் நாட்டு பக்தர் நாமறிவோமே. இவ்வாறே கிருஷ்ண பிள்ளை தன்னை ஆட்கொண்ட கிறிஸ்துவின் அன்பில் ஆழ்ந்து அனல்கொண்டு பரமானந்தமாகிய கண்ணீர் சொரிந்து பின்வருமாறு பாடுகிறார்.

அன்பு மயமே கருணை ஆனந்தவாரியே
அருள் மொழி மழைக் கொண்டலே
ஆருயிர் குயிரான அமிர் சஞ்சீவியே
அடியரி தயாம்பரத்தில்
இன்புற உதித்திலகு மெய்ஞ்ஞான பானுவே
எத்தரும் சுகுண நிதியே
இதாசமயாதீத நிலையமேவானிழிக்
இம்பர் வருஜீவ நதியே.

மண்பதை புரக்க நடுகின்றோங்குரக்ஷணிய
மாமேருவே யென்று நின்
வண்புகழ் வழுத்தி மெய் அன்பினோடு சிந்தை பர
வசமாகி ஆவி அனல் கொண்டு
என்புருகி ஆனந்த பாஷ்பஞ்சொரிந்து நின்று
எத்தருள் செய்வதன்றோ
ஏக நாயக சருவலோகநாயக கிறிஸ்து
இயேசு நாயகஸ்வாமியே.

சத்துரு சிநேகம், துன்புறுத்துவார் நன்மையைக் கருதி அவருக்காக இறைவனை மன்றாடி வேண்டல், அதாவது அஹிம்சையென்று மகாத்துமா காந்தி நமக்கு போதித்திருக்கிற தர்ம வழியை கிருஷ்ண பிள்ளை நன்றாக வற்புறுத்தி ஆணித்தனமாகப்பாடியிருக்கிறார். இயேசுநாதரை சிலுவையில் அறைந்தவர்களுக்காக பிதாவே இவர்களுக்கு மன்னியும் தாங்கள் செய்வதென்னதென்று அறியாமலிருக்கிறார்களென்று அவர் சிலுவையிலிருந்து செய்தமன்றாட்டைப் பின்வருமாறு பாடுகிறார்.

தன்னரிய திருமேனி சதைப் புண்டு தவிப்பெய்திப்
பன்னரிய பல பாடுபடும்போதும் பரிந்தாய்
இன்னதெனவறிகிலார் தாஞ்செய்வதிவர் பிழையை
மன்னியு மென்றெனிற் கனிவாய் மலர்ந்தார் நம் மருள்வள்ளல்,

இத்தகையவரும் பொறையும் மன நலமுமியந்தவரே
வித்தகனுக்கடித் தொழும்பரென்தகுமெய்க் கிறிஸ்தவர் மற்
றித்தகைய குணமிலருங் கிறிஸ்தவரென்றிசை பெறுதல்
செத்தவரைத் துஞ்சினவரென வுரைக்குஞ் சீர்மைத்தால்.

அன்பின் அஹிம்சை வழி நடவாதார் ஆத்மீக மரண மடைந்தவரேயென்று நமது வித்வான் கூறுகிறார்.

## 2. இரக்ஷணிய மனோகரம்.

இரக்ஷணிய யாத்திரிகங்களிலடங்கிய தேவாரங்களில் இருந்து வித்வான் தாமே பொறுக்கியெடுத்து தனிப்பிரசுரமாக வெளியான நூலிது. இதில் மிகச்சிறுவர்களுக்கும் விளங்கக் கூடிய 45 கவிகளுண்டு. சக்கரமொழுங்குறையென்ற தாயுமானவர் பாடல்களைப்போன்றவையுமுள்ளன. தெய்வ தரிசனத்திற்காக தனது பரமவாஞ்சையை வெளியிடும் வேட்கை விளம்புதல் (ஆசை வெளியிடுதல்) என்ற பகுதியில் பின்வருமாறு உள்ளத்தை உருக்கும் வகையில் பாடுகிறார்.

அருள்பழுத்த திருமுக மண்டலத்தினனை
அளிநிறைந்த கமலலோசனத் தெம்மானைத்
தெருள் பழுத் ஜீவமொழி கனிவாயானை
ஜென்மவிடாய் தணித்தருள் சீர்பாதத்தானை
மருள்பழுத்த மனத்தேனைத் தெருட்டினனை
வான்கதிக்கு வழிதிறந்தவலத்தினனை

இருள் பழுத்த நரா கடைத்த வெம்பிரானை
யென்று கோலோ கண் குளிரக்காணும் நாளே
அலகை தலை நசுக்கிய யோராற்றலானை
அவித்தை யிருளறுத்தொளிர் மெய்ஞானத் தானை
உலகமயக் கொளித்திரனக்ஷயுத விஞனை
உத்தம சற்குணத்தானை யுலப்பிலானை
விலகி உயிருடலைத் விடுமையத் தென்னை
விலகாது விசுவாச விளக்கைத் தூண்டி
இலகுதிருவடி கீழ விருத்துவானை
யென்று கோலா கண்குளிரக் காணும் நாளே.

செய்யுளின் அடிவரியில் அவர் ஆசித்தபடியே 1900-ம் ஆண்டு பெப்ருவரி மாதம் 3-ம் தேதி இந்த பக்தன் மாணமாகுவதற்கு சிறிது நேரத்திற்குமுன், இயேசுவென்ற பெயரையும் தமது நடுங்கிய விரலால் எழுதுபவராக மலர்ந்த முகத்துடன் அந்த இரக்ஷபெருமானின் திருவடிசேர்ந்து கண்குளிர அவர் தரிசனம் அடைந்தார். இந்த நூலின் இறுதியில் தமது அன்பின் பக்திக்குரிய நாயகனை பின்வரும் வெண்பாவில் மகாவினயத்துடன் போற்றுகிறார்.

சிந்திக்க நெஞ்சடியேன் சென்னியிறைஞ்சக் காங்கள்
வந்திக்க ஞானநும் வாழ்த்துகவாய் — புந்திக்குள்
வீற்றிருக்கும் ஜேசு விரைமலர்ப் பூஞ்சேவடிக்கே
ஆற்றுக மெய்யன்பின் பணி.

3. இரக்ஷணியக் குறள்.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் போங்காக கிருஷ்ண பிள்ளையும் கிறிஸ்தவ சமய தத்துவங்களை இந்த நூலில் வெளியிட்டிருக்கிறார்.

## 4. இரக்ஷணியசமய நிர்ணயம்.

தமிழில் சிவஞான சித்தியார் என்ற சைவ சித்தாந்த நூல்முறையைத் தழுவி கிறிஸ்துவ மதத்தை இதர மதங்களோடு ஒப்பிட்டு அதன் மேன்பாட்டைக் காட்டும் நூலிது.

## 5. இலக்கண நூல்.

இது கிருஷ்ணபிள்ளை பேரன் திரு. தாஸ் கிருஷ்ணையா என்பவரால் சில ஆண்டுகளுக்குமுன் பிரசுரமாயிற்று.

கிருஷ்ணபிள்ளை உயர்ந்த மேனியும் அழகிய வடிவமும் சாந்த முகமும் படைத்த தோற்றமுள்ளவர். பொய்யை வெறுப்பார். தூய்மையுள்ள வாழ்க்கை நடத்திய இவர் தன்னை மிக அற்பமாகக் கருதி தன்னைப் பாவியில் பாவி என்றும், நாயினும் கடையேன் என்றும், கடவுளுக்கு முன் பாகத் தாழ்த்திப் பாடுகிறார். பலவீனரான தமது சிஷர்கள் காலடி பிசகியவராக பாவச்சேற்றில் விழுந்தாலும் அவர்களை விடாது பின் தொடர்ந்து மீட்கும் திவ்விய அன்பைப் பின் வருமாறு எடுத்துக் காட்டுகிறார்.

அவலமே யதம் மன்பர் காலடி நிலைபிசகித்
தவறி பாவவெஞ் சேற்றிடை விழினும்தாங்கிக்
கவலை யோடெடுத்தா தாம் புரிவர் தாய்கடுப்பப்
புவனாக்ஷணை சமைத்த நம் புண்ணிய மூர்த்தி.

---

# கவி சுப்பிரமணிய பாரதியார்.

---

அடிமை மோகத்திலே தன் சொந்த இலக்கியத்தை மறந்து, மேற்கத்திய நாகரீகத்திலே மயங்கிக்கிடந்த பாரத தேசத்தைத் தட்டியெழுப்ப, வங்கத்தில் கவி தாகூரும், பஞ்சாபில் கவி இக்பாலும் தோன்றிய அதேகாலத்தில் தமிழ் நாட்டில் கவி பாரதி தோன்றினார். திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த எட்டயபுரம் சமஸ்தானத்தில் வேலை பார்த்து வந்த சின்னசாமி ஐயருக்கு 1882-ம் வருடம் சுப்பிரமணியன் பிறந்தார்.

சுப்பிரமணியன் வயது வருமுன்னரே தன் தந்தையை இழந்தார். ஆயினும் அவருக்கு சமஸ்தானத்தில் சலுகை இருந்தது. 'பாரதி' என்ற பட்டம் அச்சமஸ்தான வித்வான்களால் அளிக்கப்பட்டதுதான். வயிற்றுப்பிழைப்பை உத்தேசித்து, தன் கவித்திறனை சமஸ்தானப் பதவியாளருக்கு விற்க அவர் விரும்பவில்லை. ஆகவே அவர் எட்டயபுரத்தில் இருக்க மனமின்றி காசியிலிருந்த தன் அத்தை வீடு சென்றார்.

காசியிலிருந்த உயர்தரப் பள்ளியில் சேர்ந்து படித்துத் தேறி, அக்காலத்தில் கல்லூரிப் படிப்புக்கு முதற்படியான எப். ஏ. வகுப்பிலும் சேர்ந்தார். தமிழ்மொழி வழங்காத அந்த நாட்டில் இரண்டே வருடங்களில் தனக்கு மிகவும் புதிதான ஹிந்தியைக் கற்றுத் தேறினது ஆச்சரியமே.

அவர் ஆங்கில முறையில் நடைபெற்ற கல்விமுறையை விரும்பவில்லை என்று தெரிகிறது.

கணிதம் பன்னிரண்டாண்டு பயில்வர், பின்
 களர்கொள் வானிலோர் மீனிலை தேர்கிலார்,
அணிசெய் காவியம் ஆயிரம் கற்கினும்
 ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார்
வணிகமும் பொருணூலும் பிதற்றுவார்
 வாழுநாட்டிற் பொருள்கொடல் கேட்டிலார்
துணியு மாயிரஞ் சாத்திர நாமங்கள்
 சொல்லுவார் எட்டுணைப்பயன் கண்டிலார்.

என்று கல்விமுறையினைக் கண்டித்தார். ஆங்கில மொழி கற்பதிலே அவர் தன் வாணாளிற் பெரும்பகுதி உபயோக மின்றிக் கழிந்தது என்பதினை

செலவு தந்தைக் கோராயிரம் சென்றது
 தீதெனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன
நலமோ ரெட்டுணையுங் கண்டிலேனிதை
 நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்.

என்று பறைசாற்றுகிறார். "பொழுதலாம் அந்தப் பாடத்தில் போக்கி நான் விழிழுந்து எனதுள நொய்தாகிட, ஐயம் விஞ்சிச் சுதந்திர நீங்கியென் அறிவு வரித்துரும்பென ஆயிற்றே" என்று புலம்புகிறார்.

இத்தகைய மனப்பான்மை கொண்ட பாரதி எப்படி சமஸ்தானத்தில் அடிமைவேலை செய்யமுடியும். ராஜாவின் சிங்காரம், அவருடைய நிலையில்லாத தயவு, சிப்பந்திகளின் அற்பப் பெருமை, பாரதியாருடைய உள்ளத்தின் தனிப் போக்கு இவையாவும் சேர்ந்து அவரை, எட்டையபுரத் தினின்றும் வெளிக் கொணர்ந்தன.

இந்தச் சமயத்தில் அவருக்கு மதுரையிலிருந்து சேதுபதி உயர்தரப்பள்ளியில் தமிழ்ப்பண்டிதர் வேலை கிடைத்தது. ஆனால் அவர் அங்கு அதிக நாட்கள் நீடிக்கவில்லை. ஏனெனில், நன்னூல் படித்தவன்தான் கவிதை புனையமுடியும் என்றகோட்பாட்டை எதிர்த்தார். நன்னூல் சூத்திரங்களை மாணவர்கள் உருப்போட்டு உருக்குலைவதை அவர் விரும்பவில்லை. தமிழ்ப்பண்டிதர்களுக்கென அமைந்த பிற்போக்கு உணர்வினை வெறுத்தார். ஆகவே அவர் தமிழ்ப் பண்டிதர் வேலையை விட்டு விட்டு, சென்னையில் நடந்துவந்த 'சுதேசமித்திரன்' பத்திரிகையின் உதவி ஆசிரியர் வேலையை மேற்கொண்டார்.

ராஜப்பிரதிநிதியாக இருந்த கர்ஸான் 1905-ல் வங்காளத்தை இரண்டாகப்பிரிக்கவே வங்காளத்திலும், இந்தியாவின் பிறபகுதிகளிலும் சுயராஜ்யக் கிளர்ச்சி பொங்கி எழுந்தது. பாரதியார் அச்சமயத்தில் சும்மாயிருக்கவில்லை. 'சுதேசமித்திரன்' ஆசிரியர் வேலையை விட்டுவிட்டு இக்கிளர்ச்சியில் கலந்துகொண்டார். அப்பொழுதுதான், பல நண்பர்களின் உதவிகொண்டு 'இந்தியா' என்ற வாரப்பதிப்பைத் தொடங்கினர்.

இது பாரதியாரின் வாழ்வில் மிகவும் நெருக்கடியான காலம். நண்பர்கள் ஒன்றுகூடி யோசித்தனர். பாரதிக்குச் சிறைத்தண்டனை வரும் என்பது எல்லோருக்கும் தெரியும். பாரதியின் சிறைச்சேவையைக் காட்டிலும், கவிதைத்

தொண்டு சிறந்தது என்பது அவர்களின் எண்ணம். ஆகவே அவரை 1908-ல் புதுச்சேரிக்கு அனுப்பிவிட்டனர்.

புதுச்சேரி போய்ச்சேர்ந்த பாரதிக்கு நிம்மதியில்லை. இந்திய அரசாங்கத்தின் ஒற்றர்களால் மிகவும் தொல்லைப் பட்டார். வெளியிலிருந்து வரும் பண உதவியை அரசாங்கம் தடுத்துவிட்டது. புதுச்சேரியிலிருந்துகொண்டே தொடர்ந்து நடத்தி வந்த 'இந்தியா' வும் நின்றது. ஆக மொத்தம் பாரதியார் உடல் வாழ்க்கை தரித்திரமும் பட்டினியும், நோயுமே. உப்புக்கும் புளிக்கும் திண்டாடினும் அவரின் கவிதையுள்ளம் பெருக்கெடுத்தோடுவது நிற்கவில்லை. கஷ்டத்தினிடையேதான் கவிதை அழகு பெருகிறது என்ற உண்மைக்கு பாரதியார் ஒரு நல்ல எடுத்துக்காட்டாவர். பெரியார் உயிரோடிருக்கையில் அவர்களைப் போற்றியாதரியாது, அவர்கள் மரணத்திற்குப் பின் அவர்களைப் புகழ்ந்துயர்த்திப் பாராட்டிப்பறைசாற்றுவது சொல்வது மனிதனுக்கு இயற்கை அல்லவா?

1914–18 மகாயுத்தத்தின்பின் இந்தியாவுக் சுதந்தாம் கிட்டும் என்று எதிர்பார்த்திருந்த பாரதியாருக்கு அது வீண் கனவாய்ப் போகவே, புதுச்சேரி வாழ்க்கை அவருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவர் பிரிட்டிஷ் இந்தியாவுக்குத் திரும்பி வந்துவிட விரும்பினார். புதுச்சேரி எல்லையைத் தாண்டியதுதான் தாமதம், அவர் கைது செய்யப்பட்டு கடலூரில் சிறையில் இருந்து, பின் விடுதலையானார். சிறிது காலம் திருநெல்வேலியைச் சேர்ந்த கடயத்தில் வாசம்

செய்தார். மறுபடியும் அவர் சென்னைக்கு வந்து 'சுதேச மித்திர'னில் சேர்ந்து வேலை செய்தார். இக்காலத்தில் 1921, செப்டம்பர் 11-ல் தன் நோயால் க்ஷீணித்து வாடிய பூத வுடல் நீத்து புகழுடம்பு எய்தினர்.

"காக்கை குருவி எங்கள் ஜாதி, நீள் கடலும் மலையு மெங்கள் கூட்டம்" என்ற பாந்த மனப்பான்மை கொண்ட பாரதியார், பாப்பா முதல் பாட்டிவரையில், காதலன் முதல் காதகன் வரையில், குரங்கு முதல் குயில் வரையில், பத்தன் முதல் பக்தன் வரையில், காளி முதல் கவி வரையில், கசடன் முதல் காந்தி வரையில், வம்பன் முதல் கம்பன் வரையில் எல்லாத் துறைகளிலும் அவர் கவிதை அழகுடன் சோபிக் கிறது.

பாரதியாரின் நினைவு விழாக் கொண்டாட்ட வைபவத் தின்போது "மாகாண பாஷைகளில், அதாவது வங்காளி, தெலுங்கு, குஜராத்தி, மாரத்திபோன்ற பாஷைகளில், சென்ற 300 வருஷகாலமாக, பாரதியாரைப் போன்ற கவி தோன்ற வில்லை. பாரதியார் தமிழ் நாட்டில் அவதாரம் செய்தது தமிழ் நாட்டின் பாக்கியமாகும்" என்று ராஜாஜி கூறியது முற்றிலும் உண்மை.

வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித்திரு நாடு.

---

# தமிழ்நாட்டுச் சரித்திரம்

## அரசியல் காண்டம்.

---

### இரண்டாம் பாகம்.

---

### அத்தியாயம் 5.

### தமிழ் நாட்டு அரசர்கள்.

#### உத்தேச காலம்.

---

(க) கி. மு. 300 — கி. பி. 300 சேர, சோழ, பாண்டியர்.

(உ) கி. பி. 300 — 900 வடபாக பல்லவ மன்னர்கள் தெற்கே பாண்டியர்.

(ங.) ,, 900 — 1200 சோழ அரசர்கள்.

(ச) கி. மு. 400 சங்ககாலம் — கி. பி. 1300 தெற்கே பாண்டிய மன்னர்கள்.

(ரு) கி. பி. 1310 — 1440 மகமதியர்.

(சு) ,, 1400 — 1646 விஜய நகர் அரசர்கள்.

இதற்குப்பின் சிலகாலம் கோல்கொண்டா மகம்மதியரும் அதற்குப் பின் மைசூர் ஹைதாலியும் ஆண்டார்கள். 1760 ஆங்கிலேயர் ஆதினமாயிற்று.

சோழநாடு:— என்றால் தற்காலத்து பின்வரும் ஜில்லாக்கள் அடங்கியவை. செங்கல்பட்டு, வட ஆற்காடு, தென்னாற்காடு, சேலம், கோயம்புத்தூர், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை.

பாண்டியநாடு:— மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம்.

சேரநாடு:—கொச்சி, மலையாளம், திருவாங்கூர். பூர்வ காலத்தில் சேரநாடும் தமிழ்நாட்டின் ஒரு பாகமே.

## சோழ மன்னர்கள்.

சோழ மன்னர்களைப்பற்றி கிறிஸ்துவுக்குப் பின் பல நூற்றாண்டுகள் மட்டும், கொஞ்சங் குறைய ஏழாவது அல்லது எட்டாவது நூற்றாண்டு மட்டும், திட்டவட்டமாக சரித்திரம் கூறுவது இலகுவல்ல. ஆனாலும் ஆதியிலிருந்த சோழ மன்னர்களில் சோழன் கரிகால பெருவளத்தான் முக்கிய மானவனாதலால் சுருக்கமாக கரிகாலன் என்ற மன்னனைப் பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

காவியங்களும் கல் வெட்டு சாசனங்கள் முதலிய னவும் இந்த அரசனின் பெருமையைக் குறித்து சொல்லு கின்றன. பூர்விக நூலாகிய சிலப்பதிகாரம் இவனைப்பற்றிக் கூறுகின்றது. வெண்ணியூர் குயத்தி என்ற கவிராய முள்ள பெண் இவனைக் குறித்து பாடியிருக்கிறாள். இவனுக்குமுன் இருந்த சோழர்கள் பின் குறிப்பிட்டவர் என்று யூகிக்கப் படுகிறது.

1. கி. பி. முசுகந்தன், காந்தன், தூங்கெயில் எறிந்த தொடிவிளங்கு செம்பியன் இவர்கள் காலம் கி. மு. மூன்ரும் நூற்ருண்டுமுன்.

2. இளஞ்சேட் சென்னி கி. மு. மூன்ரும் நூற்ருண்டு.

3. மநுநீதிச் சோழன் கி. மு. இரண்டாம் நூற்ருண்டு.

## மனுச்சோழன்.

இவன் ஆண்ட நகர் திருவாரூர் என்ற பட்டணம் இக்காலத்தில் பேர் பெற்றிருந்தது. இவன் நீதியில் சிறந்தவன். தான் இருக்குமிடத்துக் கருகில் ஒரு மணியைத் தூக்கி தங்களுக்கு நீதி செய்யும்படி கேட்க விரும்பும் எவரும் அந்த மணியை அடிக்கலாம் என்று கட்டளை பிறப்பித்திருந்தான். இந்த மணி அடிபடுவது வெகு அபூர்வம். ஆனல் பின் காலத்தில் ஒருநாள் இந்த மணி அடிக்கப்பட்டதாம். அரசன் திடுக்கிட்டு என்ன காரணம் என்று விசாரித்தான். அக்காலத்தில் மன்னர்கள் தேர்களை அதிகமாக உபயோகித்தார்கள். மன்னனுடைய மகன் தேர் ஓட்டிக்கொண்டு போகும்போது ஒரு பசுவின் கன்றின்மேல் ஏற்றிக்கொன்று விட்டதாக கேள்விப் பட்டான். இந்த மணியை பசுவே அடித்ததாகக் கூறுகிருர்கள். தன் மகன் மேலேயே இரதத்தை ஓட்டி கொன்றுவிட வேண்டுமென்று கட்டளை கொடுத்தான்.

## கரிகாலன்.

முதற்கரிகாலன் ஒருவன் கி. மு. 120 — கி. மு. 90 இருந்ததாக சில ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அப்படியிருந்தால் பின் வருகிற கரிகாலன் அப்பெயருடைய இரண்டாவது மன்னனுவான்.

கி. மு. 60 — கி. மு. 10. சேட் சென்னி என்ற மன்னன் உறையூரில் ஆண்டு வந்தான். இவனுக்குப் பிள்ளைகள் இல்லை. இவன் இருதாமும் கலியாணம் செய்தான். இவனுடைய மந்திரிகள் மூன்றாந் தாமும் மணம் புரிய வேண்டும் என்று ஆலோசனை சொன்னார்கள். மன்னன் இதற்கு இணங்காமல் தன் தம்பி இளஞ்சேட் சென்னிக்கு விவாகம் செய்து வைத்தான். அழுந்தூர்வேள் என்ற ஒருவருடைய மகளை இளஞ்சேட் சென்னிக்கு விவாகம் முடித்தார்கள். பெண்ணுடைய தகப்பன் தன் மகனாகிய இரும்பிடர்த் தலையாரை சோழ அரசனுக்கு பணி செய்யும்படி விட்டுப்போனான். இளஞ்சேட் சென்னிக்கு ஒரு ஆண் குழந்தைப் பிறந்தது. ஆனால் சேட் சென்னிக்கு பிள்ளை இல்லாததினால் தாங்களே அரசு புரியலாம் என்று நாட்டில் சிலர் சதி செய்து கொண்டிருந்தார்கள். இவர்கள் பொறாமை கொண்டு கூடிச் சேர்ந்து அரசனோடு போர்புரிய ஆரம்பித்தார்கள். சேட் சென்னியும் அவன் தம்பியும் யுத்தத்தில் மடிந்தார்கள். கலகக்காரர் விருத்தியடைந்தார்கள். சிங்காசனத்தைப் பிடித்துக் கொண்ட கலகக்காரத் தலைவன் இளஞ் சேட் சென்னியின் மகன் இளையனுயிருந்த திருமாவளவன் என்ற பையனை சிறையில் அடைத்து வைத்தான்.

இரும்பிடர்த்தலையார் தப்பியோடி சேர நாட்டுத் தலை நகரமாகிய கரூரில் மறைந்து வசித்து வந்தான். ராஜ்யத்தைப் பிடித்துக்கொண்ட கொடுங்கோலன், சிறுவனாகிய திருமால் வளவனையும் தொலைக்க யுத்தி செய்தான். சிறைக்களத்தை தீயிடும்படி ஒரு கொடியனை ஏவினான். ஆனால் திருமால் வளவனை சிறியவனோ நெருப்பின்மேல் குதித்துத்தாவி வெளியே வந்து கரூருக்கு ஓடிப்போய்விட்டான். இவன் கால் நெருப்பில் வெந்து கரிந்ததால் இவனுக்கு கரிகாலன் என்று பெயர் வந்தது. கரிகாலன் இரும்பிடர்த்தலையாரிடம் திரும்பி வந்து பிரதான நகரை உறையூரிலிருந்து காவிரிப்பூம் பட்டினத்திற்கு மாற்றி ஆண்டு வந்தான்.

கரிகாலன் ஆண்ட காலம்:— சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோவடிகளும், அதனோடு தொடர் நிலைச் செய்யுளாகிய மணிமேகலையை இயற்றிய சித்தலைச் சாத்தனாரும் ஒரே காலத்தில் இருந்தவர் என்பது வெளிப்படையான காரியம். சிலப்பதிகாரத்தில் திருமால்வளவன் புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள் என்று கரிகாலன் மரணத்தைக் குறித்து சொல்லியிருக்கிறது. மணிமேகலையில் மன்னன் கரிகால்வளவன் நீங்கிய நாள் என்று கூறப்பட்டிருக்கிறது. இதனால் கரிகாலன் இந்த நூற்களுக்கு முன்னமே ஆண்டிருக்கவேண்டும். மேலும் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் அக்காலத்திலிருந்த வேறு அரசரைக் குறித்து நூலாசிரியர்கள் கூறும்போது, கரிகாலன் அவர்கள் காலத்தில் இருந்தால், ஆசிரியர்கள் இவனுடைய

பெருந்தகையைக் குறித்தும் எப்படியாவது கூறியிருப்பார்கள். இலங்கையில் முதற் கயவாகு மன்னன் ஆண்டகாலம் கி.பி.113–125. தமிழ் மன்னர் கி.மு. 170 முதல் கி.மு. 100 வரையும், பின்பு கி.மு. 44 முதல் 17-வரையில் இலங்கையை ஆண்டார்களென்று ஆராய்ச்சியாளர் கூறுகிறார்கள். செங்குட்டுவன் வஞ்சி நகரில் கண்ணகி தேவிக்கு ஓர் கோயில் ஏற்படுத்திய காலத்தில் முதற் கையவாகு மன்னன் அங்கு வந்திருந்திருந்தான். இதனால் கயவாகும் சோான் செங்குட்டவனும் ஒரேகாலத்தில் இருந்தவர்கள்.

அருஞ்சிறை நீங்கிய வாரிய மன்னரும்
பெருஞ் சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்
குடகக் கொங்களு மாலவை வேந்தனும்
கடல் சூழி லங்கைக் கயவாகு வேந்தனும்
எந்நாட்டாங் கணிமைய வரம் பனி
னன்னாட் செய்த நாளணி வேள்வியில்
வந்தா கென்றே வணங்கினர் வேண்டத்
தந்தேன் வாமென்றெ ழுந்ததொரு குரல்பு

சோான் செங்குட்டவன் 50 வருஷம் ஆட்சி செய்தான். கயவாகும் தன் ஆளுகையின் பின் காலமான கி.பி. 119-ல் வஞ்சி நகாம் வந்ததாக எடுத்துக்கொண்டால் சோான் செங்குட்டவன் உத்தேசம் கி.பி. 74-ம் ஆண்டில் ஆள ஆரம்பித்தாக உத்தேசிக்கலாம். சோான் செங்குட்டவன் தகப்பனுகிய நெடுஞ் சோலாதன் கி.பி. 6-ம் ஆண்டில் சிங்காசனம் ஏறினவனுக யூகிக்கப்படுகிறது. இவனுடைய முப்பாட்டன் சோமான் பெருஞ் சோலாதன் கரிகால்

மன்னனால் யுத்தத்தில் தோல்வியடைந்து புறப்புண் வாங்கி இறந்து போனான். ("வடக்கிருந்தான்")

ஒண்படைக் கரிகால்வ வளவனோடு
வெண்ணிப் பறந்தலைப் பொருதுனன்
புண்ணாணிய சேரலாதன்
அழிகள் மருங்கின் வாள்வடக்கிருந்தது.

அகநானூறு.

சேரமான் நெடுஞ்சேரலாதன் காலம் கி. மு. 36-ம் ஆண்டு.

கரிகால் வளவனின் யுத்தங்கள் :— சோழ் பெருஞ் சேரலாதன் பாண்டிய அரசனின் துணைகொண்டு வெண்ணி என்னும் ஊர் பக்கத்தில் கரிகாலனோடு போர் புரிய வந்தான். சோன் பெருஞ் சேரலாதன் தோல்வியுற்று புறப்புண் வாங்கி வடக்கிருந்தான். இதைச் குறித்து வெண்ணியூர் குயத்தியார் புறநானூறு என்னும் நூலில் பாடியிருக்கிறார்.

பாட்டு :—

களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர் கடந்தநின் னாற்றல் தோன்ற
களிகொன் யானர் வெண்ணிப் பறந்தலை
மிகப் புகழுலக மெய்தி
புறப் புண்ணாணி வடக்கிருந்தோனே.

(புறநானூறு.)

இதற்குப் பின் கரிகாலன் அருவாநாடு என்ற தொண்டை மண்டலம் வென்று அடக்கி ஆண்டான். அதை 24 கோட்டங்களாக பகுத்து வேளாளர்க்கு கொடுத்து அங்கு குடியேற்றினன். இக்காலத்தில்கூட செங்கல்பட்டு ஜில்லாவில் கோவூர் குன்றம்பேடு முதலிய இடங்களிலுள்ள சில முதலிமார்கள் தாங்கள் கரிகால மன்னனால் குடியேற்றப்பட்ட வேளாளர் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். இதற்குப் பின்பு கரிகால் வளவன் தமிழ் நாட்டு வட எல்லையாகிய திருப்பதி சென்றான். இங்கிருந்தவர்களுக்கு வடுகர் என்று பெயர். இவர்களை வென்றான். மலையமா நாட்டுக்கு சென்றான். இந்த மலையமா நாட்டில் பெண்ணையாற்றின் கரையோரத்தில் திருக்கோயிலூர் உள்ளது. இதின் அரசன் சண்டையில்லாமலே கரிகாலன் வரவை ஏற்றுக் கொண்டான். இதற்குப்பின் நாகப்பட்டணம் சென்றான். இது பன்றி நாட்டுக்குத் தலை நகரம். இங்கு நாகர் என்ற வகுப்பினர் இருந்தார்கள். இவர்களை அடக்கிய பின்பு தென்பாண்டி சென்றான். இதையும் அடக்கினபின் சேர நாடுச் சென்றான். அங்குள்ள (1) பூழி (வடமலபார்) 2. குடம் (தென் மலபார்) 3. குட்டம் (கொச்சி) 4. வேள்நாடு (திருவாங்கூர்). 5. கற்கா (பாலக்காடு) என்ற இந்த ராஜ்யத்து நாடுகளெல்லாம் ஜெயித்தான். சேர நாட்டிற்குத் தலை நகரம் வஞ்சி. இவ்விதமாக தமிழகம் முழுவதும் கரிகாலன் தன் அதிகாரத்துக்குள் கொண்டு வந்தான். இதற்கு பின்பு கரிகாலன் வட நாடு சென்றான். இங்கே பின்வரும் நாடுகளை ஜெயித்தான். 1. வஞ்சிரநாடு

(பண்டல்கண்டு) 2. மகதநாடுச் சென்றான். மகத நாட்டு மன்னன் இவனோடு கடும் போர் புரிந்தான். இவற்றை யெல்லாம் ஜெயித்தபின் இலங்கைச் சென்று முதற்கயவாகு முன்னிருந்த சிங்கள மன்னன் ஒருவனை வென்றான். இதனாலே கரிகாலன் தமிழகத்தை மாத்திரம் அல்ல, இமய மலையிலிருந்து கன்னியாகுமரி வரையிலும் தேசத்தை அடக்கி இருந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

கரிகாலன் அரசியல்:— அரசியல் விஷயங்களில் ஆலோசனை சொல்ல அரசனுக்கு உதவியாக ஐம்பெருங்குழு என்ற ஐந்து ஆலோசனைக் கூட்டங்கள் இருந்தன. அவையாவன:— 1. ஜனங்களின் பிரதிநிதிகளான மகா ஜனங்கள், 2. மார்க்கச் சம்பந்தமான குருக்களடங்கிய பார்ப்பார். 3. சுகாதார விஷயங்களுக்காக மருத்துவர். 4. ஜோஸியம் சொல்லுகிற நிமித்தர். 5. நிதி விஷயங்களைக் கவனிக்கும் அமைச்சர். இப்படி ஐந்து ஆலோசனை சபைகள் இருந்தன. கரிகாலன் எவ்வளவோ சாமார்த்தியமுடைய வனாயினும் இந்த ஆலோசனை சபைகளுடன் கலந்து அரசாட்சி செய்து வந்தான். கரிகாலன் மார்க்க விஷயங்களில் தங்கள் மனசாட்சியின்படி நடந்துக்கொள்ள குடிகளுக்கு சுயாதீனம் கொடுத்து வந்தான். பலவகைப்பட்ட கொள்கையுள்ள சமயத்தினராகிய புத்தர்கள், இந்துக்கள் முதலியவர்களுக்கு வெவ்வேறு கோவில்கள் இருந்தன. இதுவுமல்லாமல் இதர தேசத்திலிருந்து வாணிக காரணமாக வந்திருந்த சீனர், சாவகர், யவனர் முதலியனர் தமிழ் நாட்டில் வியாபாரம்

செய்து சந்தோஷமாக வாழ்ந்தனர். இவன் நல்ல அரசாட்சியின் மூலமாய் குடிகள் அதிகரித்தார்கள். இதின் நிமித்தம் இவன் காடுகளைவெட்டி குடிகள் குடி ஏறும்படி ஊர்கள் உண்டு பண்ணினன். குளங்கள் முதலியவைகள் வெட்டி கோயில்களும் கட்டினன். அக்காலத்தில் காவிரிநதி பெருகி வெள்ளம் புரண்டு தீமை செய்ததினிமித்தம் காவிரி நதி ஓடும் நாடுகளிலிருந்த சிற்றரசர்களும், குடிகளும் இலங்கை நகரத்திலிருந்து கொண்டு வந்த சிறைகளும் நதிக்குக் கரை கட்டும்படி செய்தான். இதனல் நாடு செழிப்படைந்தது. காவிரி நதிக்கு புண்ணிய நதி அல்லது பொன்னி என்ற பெயர்களும் வழங்கின து. இப்படி வளம் பொருந்திய சோழ நாட்டின் அரசர்களுக்கு வளவர் என்றுப் பெயர் வந்தது.

பாட்டு :—

அரசியல் சம்பந்தம்.

கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல்
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து

(பட்டினபாலை.)

காடுகொன்று நாடாக்கிக்
குளந் தொட்டு வளம் பெருக்கி
கோயிலோடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயிறொறும் புதை நிறீஇ.

(பட்டினபாலை).

## பிரதான நகரம் மாற்றுதல்.

---

கடல் வியாபாரத்திற்கு உறையூர் வசதியில்லாமலிருந்ததினால் தன் இராஜதானியை சோழ மன்னன் காவிரிபூம் பட்டிணத்திற்கு மாற்றினான். காவிரி நதி கடல் சேருகிற இடத்தில் இருக்கிறது. காவிரிபூம் பட்டிணம் சீர்யாழியில் இருந்து 14 மைல். இதற்கு பெரிபிளஸ் என்ற புஸ்தகத்தில் கமாரம் என்றும், டாலிமி எழுதினதில் கபேரிஸ் என்றும் கூறுகிறார்கள். புகார் என்னும் பெயரும் உண்டு. முன் காலத்தில் காவிரி நதி தற்காலத்தில் இருப்பது போல பிரியவில்லை. தற்காலத்தில் போல இரண்டாகப் பிரியாமல் ஒரே நதியாக இருந்தது. இதனால் மரக்கலங்கள் போக்கு வரத்துக்கு ஏதுவாயிருந்தது. காவிரிபூம் பட்டிணம் ஆற்றுக்கு வட பக்கம் இருக்கிறது. பட்டினபாக்கம், மருவூர்பாக்கம் என்று இரண்டு பிரிவாக இருந்தது. கடலோரத்திலிருந்து மருவூர் பாக்கம், பட்டினபாக்கம் அதற்கு மேற்கு. பட்டின பாக்கத்தில் அரச வீதி, ஆவண வீதி, கொடிதேற் வீதி, வாணிகர், உழுவோர், வைத்தியர் ஜோஸியர் முதலியவர்கள் இருக்கும் இடமெல்லாம் இருந்தன.

சிற்பிகள், கொல்லர், தச்சன் இவர்களைக்கூட்டி அரசரால் அமைத்த அழகிய கட்டடங்கள் இருந்தன. அரசனுடைய அரண்மனையிருந்தது. பலவித நாகரீகங்களுக்கு

அடையாளமான கவிராயர்கள், நாழிகைக்கணக்கர், பாணர், நடிகள், மாலைதொடுப்பவர் வாழும் இடங்களும், கோட்டம், அம்பலம், மன்றம், அரவை, சோறுசோலை, வேள்விச்சாலை, கலைக்கழகம், சந்திரக்கண்டம், சூரியக்கண்டம், இந்திர வாவிகளும் அமைக்கப்பெற்றிருந்தன. கடலோரத்தில் கலங்கரை விளக்கம் (தீபஸ்தம்பம்) இருந்தது. கடல் வழியாக வரும் பண்டங்களுக்கு தீர்வை வரையறுத்து கடமை கொள்ளும் ஆயத் துறைகள் இருந்தன. சுங்கம் வாங்கிய பின்னர் புலி முத்திரை போட்டுப் பண்டசாலைகளிலும், கிடங்குகளிலும் சேர்ப்பார்கள். கப்பல் சாமான்கள் இறக்க உயர்ந்த மேடைகள் இருந்தன. யவ்வனர், சீனர், சாவகர், வியாபாரிகளின் மாளிகைகள் இருந்தன. சகலவிதமான வாணிகம் செய்யும் வியாபாரிகளும், வெண்கலம், செப்பு, மரம், பொன் வேலை செய்பவர்களும், சித்திரக்காரர்களும், சிற்பிகளும் வசித்தார்கள் பலவிதமான துளைக்கருவி, நரம்புக் கருவி இசைக்கருவி வாசிப்பவர்களும் இருந்தார்கள். பர்மாவிலிருந்து குதிரைகள் வந்தன. மலையாள நாட்டிலிருந்து மிளகு வந்தன. இமயமேரும் மலையிலிருந்து மாணிக்கம், பொன், பொதிய மலையிலிருந்து சந்தனம், அகில், தென் கடலிலிருந்து முத்து, கீழ்கடலிலிருந்து பவளம், கங்கையிலிருந்து யானை, பொன், காவிரி பாய்ச்சலினால் உண்டாகும் பொருள்கள், இலங்கை உருப் பொருள், காளகத்திலிருந்து (பர்மா) வந்த நுகர்ச்சிப் பொருள், சீனவிலிருந்து பட்டு, பன்னீர், குங்குமம் இப்படி பற்பல வஸ்துக்கள் ஏற்றுமதி, இறக்குமதியான இடம்.

பாட்டு.

நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும், குண் கடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரி பயனும்
ஈழத்துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெளிய ஈண்டி,
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுக.

(பட்டினப்பாலை).

## அத்தியாயம் 6.

## பல்லவர்கள் கி. பி. 300—900.

இந்த பல்லவ மன்னர்கள் காஞ்சிபுரத்தை பிரதான நகரமாக வைத்துக்கொண்டு உத்தேசம் கி. பி. 300 — 900 அல்லது 600 வருஷம் போல சோழநாட்டை ஆண்டுவந்தார்கள். இந்த பல்லவ மன்னர்கள் யார்? இவர்களின் பூர்விகத்தைப் பற்றி ஒன்றும் நிச்சயமாக சொல்ல இயலாததால் மிகுந்த தர்க்கம் ஆராய்ச்சியாளர்க்குள் நடந்திருக்கிறது. இவர் அந்நிய நாட்டார், அல்லது, தொண்டை மண்டலத்திற்கு வடக்கே இருந்து வந்த ஆந்திரர் என்றும், ஏனையோர் இவர்கள் தெற்கேயிருந்து வந்தவர்களென்றும் கூறுகிறார்கள். இதற்கு ஆதாரமாக இப்படிப்பட்ட சம்பந்த

முடைய பல்லவர்கள் வட நாட்டில் ஆண்டதைக் குறித்து ஆதாரமாகக் கூறுகிறார்கள். இவர்கள் கல் வெட்டுகளில் விட்டுப் போயிருக்கிற சாசனங்களும் பல்லவ கிரந்த மென்ற தமிழுக்குச் சற்று வேறான அச்சரங்களில் இருக்கின்றன. தமிழ் கவிகள் இவர்கள் தொண்டைமான் என்றும் கூறுகிறார்கள். ஆனால் வேறு சில சாஸ்திரிகளோ இவர்கள் தமிழ் மக்கள்தான், அந்நிய நாட்டாரல்ல தற்காலங்களில் கள்ளர் என்று அழைக்கப்படும் வம்சத்தைச் சார்ந்தவர்கள் என்றும் சொல்லுகிறார்கள். புதுக்கோட்டை மன்னர்கள் தங்களை பல்லவ சந்ததியார் என்று உரிமைப் பாராட்டுகிறார்கள். இவர்களுக்கு காடு வெட்டி என்று பெயர் வழங்கினது, காடுகளை வெட்டி நாடாக்கினார்களென்று இது அர்த்தமாகும். இவர்கள் தமிழ் மக்கள்தானோ அல்லது ஏனைய நாட்டார்களோ என்று திட்டமாக தற்காலத்தில் கூற முடியாவிட்டாலும் நாம் விசேஷமாக அறிய வேண்டியது காஞ்சிபுரத்தை பிரதான நகரமாகக் கொண்டு இவர்கள் மிக மாண்புடன் ஆண்ட பல்லவ ஏகாதிபத்தியத்தைப் பற்றியே.

மெய்க்கிரகக் காளை, விரசிங்கம், கோடரி இவர்கள் சின்னங்கள். எல்லா சமயத்தினரையும் ஆதரித்தனர். இவர்கள் நந்தி வைத்ததினால் சிவ மதத்தினர் என்று ஊகிக்க இடம் இருந்தாலும், வைணவர், சமணர், பௌத்தர் இவர்கள் எல்லாரையும் ஆதரித்து வந்தார்கள். இதற்கு இவர்கள் கட்டியிருக்கும் கோவில்கள் அத்தாட்சி. ஆனால் 7-வது நூற்றாண்டுகளுக்குப் பின் இருந்து தான் இவர்கள் சரித்திரத்தைக் குறித்து

திட்டமாகப் பேசலாம். பல்லவர்களுக்கு முன் கடைசியாக ஆண்ட சோழமன்னன் பெயர் இளம்கிராயன். இந்த இளம் கிராயனிடத்திலிருந்து ராஜ்யம் எப்படி பல்லவரிடம் போனது என்று கூற சரித்திரப்பிரகாரமான ஆதாரங்கள் ஒன்றும் இல்லை.

பிரஹிர்தகாலம்:- கி. பி. 200 — 350 பிராக்ருதகால செம்புசாசனங்களை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம்.

(1) மயிதவோலுத்தட்டு.
(2) ஹிரஹதகல்லித்தட்டு.
(3) பிரிட்டிஷ் காட்சிசாலையிலிருக்கும் தட்டு.

இந்தப் பிராக்ருதகால அரசர்கள்:— பாபாதேவர் (பாபா = அப்பா) சிவகாமவர்மன், புத்திவர்மன், வீரவர்மன், விஷ்ணுகோபன். பாபா மகாராஜ்யம் இரண்டு பாகமாக இருந்தது. வட பாகம் தெலுங்கு நாடு. தென் பாகம் தமிழ் நாடு. வடபாகத்தின் தலைநகர் அமராவதி. தென் பாகத்திற்கு தலைநகரம் காஞ்சிபுரம். அதாவது ராஜ்யம் தெற்கே பாலாற்றிலிருந்து வடக்கே கிருஷ்ணா நதி வரைக்கும் பரவியிருந்தது. இவனுக்கு பின்வந்த சிவகாம வர்மன் காலத்தில் தென்பெண்ணையாறு வரையிலும் இராஜ்யம் பரவியிருந்தது. இவனுடைய ராஜ்ய காரியங்கள் மூன்று பிரிவாகப் பிரிந்திருந்தன. விஷயம், இரதம், கிராமம் என்ற மூன்று பாகமாகப் பிரிக்கப்பட்டிருந்தன. மூன்றையும் கண்காணித்தவர்களுக்கு முறையே விஷயக்காரர், இரதக்காரர், தேசாதிபதி என்றுப் பெயர். இந்த அதிகாரிகள் இராஜ

வம்சத்தைச் சேர்ந்தவர்கள். பட்டாளத்திற்கும் அதிகாரிகளாயிருந்தார்கள். அமைச்சர்களும், காரியதரிசிகளாகவும் இருந்தார்கள். தர்மசாஸ்திரம், அர்த்தசாஸ்திரம் என்ற நூல்களின் வழக்கப்படி அசோக முறையாக அரசாங்கமிருந்தது. 18-முறையான வரிகளிருந்தன. மாடு வியாபாரிகள், கொல்லர், ஆடைவிற்போர், தாகர், வலைஞர், பதனீர் இறக்குபவர், முதலிய பல தொழிளாளிகளுக்கு வரியுண்டு. பிரயாணம் செய்யும்போது தங்க இடங்கள் உண்டு. இறக்குமதி சாமான்களுக்கு தீர்வை வாங்கியபின் புலி முத்திரையிடப்பட்டு பண்டசாலைகளில் பத்திரமாய் வைப்பார்கள். உப்பும், வெல்லமும் செய்ய அரசாங்க அனுமதி வேண்டும். உள்நாட்டு வியாபாரமும், வெளிநாட்டு வியாபாரமும் தழைத்து பெருகியிருந்தது. இதற்கு ஆதாரமாக அந்நிய நாட்டு நாணயங்கள், ரோம நாணயங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன.

8-ம் நூற்றுண்டு ஆரம்பத்தில் மகாபலிபுரம் ஒரு சிறந்த துறைமுகமாகயிருந்ததென்பதை திருமங்கையாழ்வார் நூல் மூலமாக தெளிவாய் அறியலாம்.

அநேகமாக இந்தக்கால சாசனங்கள் செம்பிலும், சில கல்லிலுமாக அமாரவதி, வயலூர்போன்ற இடங்களிலிருந்து எழுதப்பட்டதாகக் கருதப்படுகிறது. விசேஷமாக பிராமணர்க்கும் ஆலயங்களுக்கும் இனமாகக் கொடுக்கப்பட்ட நிலங்களைப் பற்றியும், கொடுத்த மன்னனைப் பற்றியும் இச்சாசனங்களில் கூறப்பட்டிருக்கிறது. இச் சாசனங்கள் பல்லவகிரந்த அச்சாங்களில் இருக்கின்றன. தமிழில் இவற்றை

எழுதத் தொடங்கினது 7-வது நூற்றாண்டிலிருந்தே. பரமேஸ்வரன் என்ற மன்னனின் செம்பு சாசனங்களைத்தான் தமிழில் முதலில் காணலாம். காசக்குடி, வேலூர் பாளையம், கோரங்குடி, தத்தன் தோட்டம், உதயேந்திரம் என்ற பேருள்ள செம்புசாசனங்களில் மன்னர்களின் வம்சவாலாறுகளைப் பார்க்கலாம். இவை 7-வது, 8-வது, 9-வது நூற்றாண்டுகளில் எழுதப்பட்டது. இதே காலத்தில் எழுதப்பட்ட சில வெளி நாட்டு சாஸ்திரங்களும் நூல்களும் பல்லவ அரசனைப்பற்றி நாம் அறிவதற்கு அனுகூலமாக இருக்கிறது. விசேஷமாக கங்கா அரசனாகிய இரண்டாவது மாதவனின் பேனுகொண்டா சாசனங்களும் சமண நூலாகிய லோக விவாதம் என்ற நூலும் இதற்கு உதவியாயிருக்கின்றன. சமஸ்கிருத நூலாகிய அவந்தி சுந்தரி கதாசாரம் என்ற நூலும் இப்படி உதவியே. இந்த சமஸ்கிருத காலத்தில் ஆண்ட மன்னர்கள் விஷ்ணுகோபன் என்பவன் தொடங்கி சிங்க விஷ்ணு என்பவன் மட்டும் ஆண்டவர்கள். இந்த வம்சத்தில் இடையில் ஆண்ட வீரகுருச்சன் என்ற மன்னன் ஒரு நாகவம்சத்தின் அரசனுடைய மகளை மணம் புரிந்ததாக வேலூர் பாகாயசாஸ்திரத்தின் மூலமாகத் தெரிகிறது. இந்தப் பெண்ணின் மூலமாக இவனுக்கு ஒரு பெரிய ராஜ்யம் கிடைத்தது. இது பல்லவ ராஜ்யம் பெருகுவதற்கு உதவியாக இருந்தது.

இந்தப் பல்லவர் ஆண்ட காலத்திற்கு இடையிலே சிறிதுகாலம் சோழ மன்னர்கள் திரும்பவும் இராஜ்யத்தை பிடித்துக்கொண்டதாக சிலர் கூறுகிறார்கள். ஆனால் இதற்கு

போதுமான ஆதாரமில்லை. ஆரும் நூற்ருண்டின் கடைசிக் காலத்தில் பல்லவ ராஜியம் தமிழ் நாடுகளில் பரவ ஆரம்பித்தது. இந்தக் காலத்தில்தான் ஆழ்வார்கள் என்ற விஷ்ணு பக்தர்களும், நாயன்மார் அல்லது ஆண்டார்கள் என்ற சிவ பக்தர்களும் தழைத்து சமய பிரசாரம் செய்தார்கள். இவர்கள் எழுதிய நூல்களும் பக்தி பிரசாரங்களும் தமிழ் நாட்டில் மிகுந்த ஆத்மீகப் புரட்சி செய்து கொண்டிருந்தன. ஆருவது நூற்ருண்டில்தான் தமிழ் நாட்டில் கற்களினுல் ஞாபகச் சின்னங்களும், தெய்வாலயங்களும் கட்டப்பட்டன. சிவன் கோயில்கள், விஷ்ணுக் கோயில்கள் பிரமாவின் ஆலயங்கள் தென்னிந்தியாவில் எழும்பின.

பல்லவ மன்னர்கள் நிலத்தை விருத்தி செய்தார்கள். உழவுத் தொழில் முன்னேற்ற மடையச் செய்தார்கள். கைத்தொழில் அபிவிருத்திக்கு உதவி செய்தார்கள். பல பெரும் பாதைகள் ஏற்படுத்தினுர்கள். பல யுத்தங்கள் செய்து சித்தியடைந்து இராஜியத்தை விஸ்தாரமாக்கினுர்கள். இவர்கள் காலத்தில் இந்தியாவுக்கு வந்த சீனயாத்திரிகனுகிய ஹையூந்தசன் இவர்களைப்பற்றி எழுதி வைத்திருக்கிருன். பல்லவ கிரந்தம் கி. பி. 4-ம் நூற்ருண்டில் பல்லவர்கள் ஆண்ட தொண்டை மண்டலத்தில் வழங்கப்பட்டதாக யூகிக்கப்படுகிறது. திருஞான சம்பந்தர், அப்பர் என்ற இந்த இரண்டு சிவபக்த கவிராயர்கள் இவர்களைப் பற்றி பாடியிருக்கிருர்கள். நளவெண்பா இயற்றிய புகழேந்தி புலவரும் இவர்களைப்பற்றி பொய்யுரையாதவர்கள் என்று புகழ்ந்து பாடியிருக்கிருர்.

பாட்டு :—

வையம் பெயரினும் ஒரு பொய்யுரைக்க மாட்டார்
தொண்டை நன்னாட்டார்

(புகழேந்தி)

தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து

(ஔவையார்)

பல்லவ சரித்திரத்தை பல்லவ மன்னர்களைக் குறித்து வெட்டப்பட்டிருக்கும் எழுத்து சாசனங்களைக் கவனித்ததின் படி 1. பிராக்ருத பாஷைக் காலம். 2. சமஸ்கிருத காலம் 3. கிரந்த தமிழ்காலம் என்ற மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். ஆனால் 7-வது நூற்றாண்டுக்குப்பின் இருந்ததுதான் இவர்கள் சரித்திரத்தைக் குறித்து திட்டமாக பேசலாம்.

செம்புத்தகடு சாசனங்கள் பத்திர எழுத்துக்கள் பிராக்ருத மொழி. ஸ்கந்தவர்மன் பத்திரம் சமஸ்கிருதம். குறம், காசக்குடி, வேலூர்பாளையம் இவைகளின் சரித்திர ஆதாரங்களைத் திரும்பவு மொழி சுருக்கமாய்க் கூறுவோம். இவைகளின் 1 பிரகிருதி சிவஸ்கந்தவர்மன் பத்திரம். தானம் கொடுத்தவைப்பற்றியன்றி சரித்திர காரியங்களொன்றும் இல்லை. மூன்று பாஷை கால எழுத்துக்கள். பிராக்ருதமொழி, சமஸ்கிருதம், தமிழ்.

2. சிலாசாசனங்கள் மஹாபலிபுரம், பல்லாவரம், திருச்சிராப்பள்ளி, சித்தன்வாசல், புதுக்கோட்டை திருக்கழுங்குன்றம், முதலிய இடங்கள்.

3. கல்வெட்டெழுத்துக்குள். இங்கு கிரந்த தமிழ் வெட்டெழுத்துக்கள் இருக்கின்றன. இவைகளும் பல மன்னர்கள் கோயில்கள் தானம் கொடுத்த காரியங்களையே குறிப்பிடுகின்றன.

4. இலக்கியங்கள். மதுரைச் சங்க நூற்கள் பல்லவர்களைப்பற்றி ஒன்றும் கூறுததால் இவர்கள் சங்க காலத்திற்குப் பின்னரோ அதாவது முதல் இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னரோ இருந்திருக்கவேண்டுமென்று ஊகிக்க வேண்டும். ருத்திரக்கண்ணர் இயற்றிய பெரும்பாணாற்றுப் படைமாத்திரம் காஞ்சியைப்பற்றிபாடி, கரிகாலனையும், காவிரி பூம்பட்டினத்தையும், பல்லவர்களுக்குமுன் ஆண்டிருந்திருக்கக்கூடிய தொண்டைமான் இளம்திரையனைக் குறித்தும் போற்றி பாடியிருக்கிறது. வைணவ, சிவபக்தர்கள் பாடிய பிரபந்தங்கள் தேவாரங்களில் ஆழ்வார்களும் ஆண்டார்களும் பல்லவ மன்னர் சிலரைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். நந்தி கலம்பகம் என்ற தமிழ்நூல் இரண்டாவது சிங்க விஷ்ணுவம்ச பல்லவ மன்னன் சிங்க விஷ்ணுவர்மன் (கி. பி. 575 — 600), நந்திவர்மனைப் பற்றி பாடியிருக்கிறதும் உண்டு. சிங்கவர்மனைக்குறித்துக் கூறுகிற அவந்தி சந்தரிக்கதாசாரம் என்ற வடமொழி நூல் இருக்கிறது. இந்த 6-வது நூற்றாண்டின் கடைசி பாகத்திலிருந்து 125-வருஷங்களாக மன்னர்கள் தொடர்சியாக ஆண்டு வந்தார்கள். இந்த மன்னன் சோழ நாட்டை காவேரிமட்டும் பரவச்செய்ததாக அறிகிறோம். சிங்க விஷ்ணுவைணவன் காஞ்சியிலாண்டபோது சிலர்

சிவமதத்தாரும், சிலர் வைணவர்களுமாக இருந்தார்கள். கந்தவர்மன் பாமேஸ்வாவர்மன் என்கிற பெயர்கள் சிவ மதத்தைக் குறிக்கிறது. ஒரு மன்னன் பெயர் புத்தவர்மன் என்றிருந்தால் இவன் புத்த மதத்தில் அனுதாபமுள்ளவ னென்றும் யூகிக்க இடமிருக்கிறது. சென்னைக்கு சமீபமாக திருவுறையூருக்கு அடுத்தாற்போலிருக்கும் மணலி என்ற கிராமத்தில் பண்டைகாலத்தில் சிங்கவிஷ்ணு சாந்தூர் வேதி மங்கலமென்றிருந்தது. தெற்கே கும்பகோணம் தாலு காவில் கஞ்சனூர் என்ற கிராமத்திற்கும் இதேபேர் முன் காலத்தில் இருந்தது. இதனால் வடக்கே மணலியிலிருந்து தெற்கே கஞ்சனூர் வரையில் இவனது இராஜ்யம் பாவியிருந் தது என்று யூகிக்கலாம். மாவல்லபுரத்திலிருக்கும் ஆதிவாாக ஆலயத்தில் சிங்கவிஷ்ணுவர்மனின் சிலையிருக் கிறது. இதனால் இந்த எழுபகோடாக்கள் என்று சொல்லப் படும் கல்வெட்டுக் கோயில்களில் சிலவாவது இவன் காலத் திலேயே வெட்டப்பட்டிருக்க வேண்டுமென்று நினைக்க இடமுண்டு.

திகாம்பாசபணர்கள் நூலாகிய லோகவிபாகம் என்பதில் பல்லவ மன்னர்கள் காலத்தைக் குறித்தும் வம்ச தொடர்புகளையும் அறியத்தக்க சங்கதிகளுண்டு. மேலும் காஞ்சிபுரத்திற்கு சீன யாத்திரியாக வந்தவரும் சட்ட நிபுணரு மான ஹையூன்தசங்கு கி. பி. 640-ல் அங்கு போனார். அவர் எழுதிவைத்திருப்பதும் சரித்திர ஆதாமானதே. புத்தமத சாஸ்திரக் கலையில் காஞ்சிபுரம் பேர் போனதாயிருந்ததையும்

நலந்தா சர்வகலாசாலைத் தலைவரான தர்மபாலன் பிறந்தது இங்கேயே என்பதையும், காஞ்சிபுரத்தில் புத்தசமய நிலைமை, அங்குள்ள சிலவளம், சீதோஷ்ணஸ்திதி, ஆலயங்கள், ஜனங்கள் முதலியவற்றையும் அவர் வருணிக்கிறார்.

## மகேந்திரவர்மன் கி. பி. 600 — 630.

இவனுக்கு மகேந்திரவர்மன், மதவிலாசன், குணபரன் என்று இப்படி பல பட்டப் பெயர்களுண்டு. ஒரே பாறையை வெட்டி குகைகோவில்கள் இயற்றுவதில் சிறந்தவன் இம் மன்னனே. இவர் காலத்தில்தான் அப்பர் அல்லது திருநாவுக்கரசு என்கிற சிவ பக்தன் வாழ்ந்து வந்தார். யுத்தம் ஒய்ந்து சமாதானம் பரவியிருந்தது. நாடகம், சங்கீதம், சித்திரம் முதலிய கலைகள் தழைத்தோங்கின. மகேந்திரன் முதலாவது சமண மதத்தைத் தழுவி இருந்தானும். இதர சமயத்தினரை இம்சைச் செய்தானும். மன்னர்கள் முதலில் துறத்திய அப்பர் என்ற சிவ பக்தனாகிய கவிராயர் மூலமாய் இம் மன்னன் சிவ பக்தனானதை குறித்துப் பெரிய புராணத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. திருச்சிராப்பள்ளியில் ஒரு மலைக்கோயில் கல் சாசனத்தில் இப்படி இந்த மன்னன் லிங்க வணக்கத்திற்கு திரும்பினதைக் குறித்து குறிக்கப் பட்டிருக்கிறது. இவன்கால குகைவெட்டு ஆலயங்கள் செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள வல்லம், வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள மகேந்திரவாடி, தென்னாற்காடு ஜில்லாவிலுள்ள தளவானூர், சீயமங்கலம், பல்லாவரம், புதுக்கோட்டை, சித்தன்னவாசல் என்ற இடங்களில் காணலாம். மகேந்திர

வர்மன் கட்டிய ஒரு விஷ்ணு கோவிலும் (மகேந்திரவாடி) அரக்கோணம் சமீபத்தில் இருக்கிறது. பல்லவ கிரந்த அட்சரத்தில் குணபரன் இதை வெட்டினதாக இதில் கூறப் பட்டிருக்கிறது. இதனால் இக்காலத்து மனிதர்கள் பாரசிந்தை யுள்ளவர்களும் இதர சமயத்தினர் விஷயத்தில் தயாளமுள்ள வர்களாயுமிருந்தார்களாம்.

மாமண்டூர், மகேந்திரவாடி, சிங்கவரம், நாமக்கல் இந்த இடங்களில் பாறைகளில் குடையப்பட்டவை விஷ்ணு கோயில்கள் ஆகும். சீயமங்கலம், பல்லாவரம், வல்லம், தளவானூர், திருக்கழுகுன்றம், திருச்சிராப்பள்ளியில் இவன் இயற்றியவை சிவன் கோயில்கள். பண்டப்பட்டியில் திரி மூர்த்தி ஆலயம், சித்தன்வாசலில் சமண கோயிலும் வெட் டப்பட்டன. பாறைகளில் வெட்டி இயற்றிய கோயில்களை பின்வரும் அடையாளங்களினால் மகேந்திரனியற்றப் பட்டவை என்றறியலாம். மலைச்சரிவுகளில் குடைந்து வெட்டப்பட்டவை. உச்சியிலுமல்ல அடியிலுமல்ல, சரிவிலே மாத்திரந்தான் தூண்களுக்கு வேண்டிய இடம் விட்டு கோயில் குடையப் பட்டிருக்கும். மேலும் கீழுந்தான் சதுரவடிவுள்ளவை. இடையில் செதுக்கப்பட்ட மூலையுள் ளவை. சதுரமாக நடுவில் தாமரை மலர் வெட்டப் பட்டிருக்கும். தூண்மேலிருக்கும் போதிகை சதுரக்கல் பலகையானது. கோவில் சுவர்களில் சித்திரவேலைகள் காண லாம். கோயில் நடுவிலே மூலஸ்தானமிருக்கும். இதன் இருபுரங்களில் துவாரபாலகர் உருவங்களிருக்கும். தலையில்

பாகை இடக்கையில் தடியிருக்கும். சிலைகள் கல்வெட்டெழுத்துகள் கோயில் சுவர்களில் உண்டு.

## நரசிம்மவர்மன் கி. பி. 630 — 660.

இவனுக்கு மகாமல்லன் என்ற பட்டப்பெயருண்டு. இவன் பெயரிலிருந்துதான் மஹாமல்லபுரம் என்று துறைமுகத்துக்கு பெயர் வந்தது. இவன் காலம் கி. பி. 630 முதல் 660 வரை. இவன் காலத்தில் விசேஷங்கள் :—

1. சாளுக்கிய நகராகிய வாதாவியை பிடித்தது.
2. இலங்கையின் மேல் படையெடுத்துச் சென்றது.
3. மஹாமல்லபுரத்தில் பாறைகள் குடைந்து கோயில்களை வெட்டியது.
4. காஞ்சிபுரத்துக்கு சீனயாத்திரியாகிய அயுந்தசன் வந்தது.

1. சாளுக்கிய அரசனாகிய புலிக்கேசன் படையெடுத்து வந்தான். மணிமங்கலம் என்று காஞ்சிபுரத்துக்கு சமீபமாய் இருக்கும் ஒரு கிராமத்தில் நடந்த யுத்தத்தில் புலிக்கேசன் தோல்வி யடைந்தான். இதன்பின் நரசிம்மவர்மன் தன்னுடைய சேனாதிபதியாகிய சிறுத்தொண்டர் எனும் பரஞ்ஜோதியாரைப் பட்டாளத்துடன் அனுப்பினான். இவன் சாளுக்கிய பிரதம நகராகிய வாதாவி நகரத்தை பிடித்தான். அங்கு கிட்டிய பொருள்களுடன் இவன் திரும்பியதைக் குறித்து பெரியபுராண காவியத்தில் பாடப்பட்டிருக்கிறது.

பாட்டு :—

மன்னவர்க்குத் தண்டு போய்ப் வடபுலத்துவாதாவித்
தொன்னகாம் துளாகத் துளே நெடுங்கை வரையுகைத்தும்
பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்
இன்ன லெண்ணிலகவர்க்தேயிகலரசன்முன் கொணர்ந்தார்.
(பெரியபுராணம்).

2. இலங்கைமேல் படையெடுத்து சென்றது :—இதைப் பற்றி மஹாவம்சம் கூறுகிறது. மானவர்மன் என்ற ஒரு இலங்கை பிரபு தப்பியோடி காஞ்சிபுரத்துக்கு நாசிம்மவர்மன் அரசனிடம் புகலிடம் தேடி வந்தான். சாளுக்கிய அரசனோடு போர்புரிதலில் இவன் நாசிம்மவர்மனுக்கு உத்தம ஊழியனாக இருந்தான். பின்பு நாசிம்மன் உதவியினால் இலங்கை சென்று சிங்காசனம் ஏறினான். மறுபடியும் அவனுக்குத் தொந்தாவு நேரிட்டதால் திரும்பவும் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தான். நாசிம்மவர்மன் ஒரு பெரிய கடல்படையை மறுபடியும் மாமல்லபுரத்திலிருந்து இலங்கைக்கு அனுப்பினான்.

2-வது மகேந்திரவர்மன்.

முதலாவது நாசிம்மவர்மனுக்குப்பின் 2-வது மகேந்திரவர்மன் காலத்தில் நாட்டில் யுத்தம் முடிந்தது. சமாதானம் அடைந்திருந்தது. இந்த அரசனைப்பற்றி நமக்கு அதிகமாய் தெரியாது. இவனுக்குப்பின் முதலாவது பாமேஸ்வரன் அரசாண்டான்.

1-வது பரமேஸ்வரன்.

இவன் காலத்தில் சாளுக்கிய மன்னனாகிய முதலாவது விக்கிரமாதித்தன் படையெடுத்து வந்தான். முதலாவது

இவன் காஞ்சிபுரத்தை பிடித்துக் கொண்டான். பல்லவ ராயர்களுக்கு போசத்தாயர் என்றும் பெயருண்டு. போத்த ராயனை ஜெயித்து மாமல்ல குடும்பத்தை விக்கிரமாதித்தன் அழித்தானென்று கதுவால், செம்பு, சாசனத்தில் கூறப் பட்டிருக்கிறது. இத்தக்கதுவால் சாசனத்தின் தேதி கி. பி. 674 ஏப்ரல் 25 என்று யூகிக்கப்படுகிறது. இதற்குப்பின் பரமேஸ்வர வர்மன் விக்கிரமாதித்தனை போரில் முறியடித்து துரத்திவிட்டான். இலட்சஷக்கணக்கான வீரர்கள் அடங்கிய விக்கிரமாதித்தன் படை கந்தையைப் போர்த்திக்கொண்டு ஓட்டம் பிடித்ததாக இ க் கா ல த் தி ல் வெட்டப்பட்ட கூரம்சாசனம் கூறுகிறது. சூரியன் மூடுபனியை அழிப்பது போல் பரமேஸ்வரன் தன் சத்துருக்களின் அகந்தையை அழித்தான் என்று பாளையம் சாசனம் கூறுகிறது. யுத்தம் நடந்த இடம் திருச்சினப்பள்ளியிலுள்ள லால்குடி தாலுக்கா விலுள்ள பெருவான் நல்லூர் என்று உதயேந்திர சாஸ்திரம் கூறுகிறது. இந்த அரசன் சிவ பக்தன். ராஜியங்களில் பல இடங்களில் சிவன் கோயிலை கட்டிவைத்தான். மாமல்ல புரத்தில் இதைக்குறித்து கல்வெட்டு இருக்கிறது. இதனால் இந்த ஆலயம் பரமேஸ்வரன் என்பவனால் வெட்டப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இவற்றில் பதினேரு சுலோகங்கள் இருக்கின்றன. இவன் கட்டின ஒரு ஆலயத் திற்கு பரமேஸ்வரன் மங்கலம் என்ற கிராமத்தை மானிய மாக கொடுத்ததாக கூரம் சாசனத்தில் கூறப்பட்டிருக்கிறது.

---

## 2-வது நரசிம்மவர்மன் கி. பி. 680 – 700. (இராஜ சிம்மன்)

இவன் காலத்தில் யுத்தமில்லாமல் சமாதானம் அடைந்து வாழ்ந்தது. காஞ்சிபுரத்தில் கைலாசநாதர் கோவில் ஐராவதி ஈஸ்வரர்கோயில் மாமல்லபுரத்திலுள்ள ஒரு கரைக்கோவிலில் பானைமலை கோவில் இந்த மன்னனால் கட்டப்பட்டது. கைலாச நாதர் கோவிலில் இதைக்குறித்து கல் வெட்டு இருக்கிறது. பெரிய புராணத்தில் ஒரு கதை இருக்கிறது.

பாட்டு :—

1. காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுக்க முற்ற
மாடலாஞ் சிறுவனுக்காக பெருஞ் செல்வம் வகுத்தல் செய்வா
னூட பாலறியா தானத் தாபிக்குமன்னன் முன்னன்
எடவர் கொன்றை வேய்ந்த பிரவிடை கணவி னெய்தி.

2. நின்றவூர் பூசன்ப னெகுது நாணிணைந்து செய்த
நன்று நீடாலயத்து நாளை நம்புகுவோ நீயிங்
கொன்றறியே செயலை நாளை யொழிந்து பின்கொள்வா யென்று
கொன்றை வாய சடையார் தொண்டர் கோயில்
கொண்டருள போந்தார்.

(பெரிய புராணம்).

இரண்டாவது நரசிம்மவர்மனுக்கு ராஜ சிங்கம் என்று பெயருமுண்டு. இவன் காலத்திலேயே சமஸ்கிருத கலையும் தென்னாட்டில் சிறப்புற்றிருந்தது. விசேஷமாக இவன் சமஸ்தானத்தில் தந்தீன் என்ற சமஸ்கிருத கவிராயர் வாழ்ந்து

வந்தார். காவிய தரிசா இவர் இயற்றிய நூலுக்கு பெயர் இரண்டாவது நரசிம்மவர்மனுக்குப்பின் இரண்டாவது பர மேஸ்வரன் பட்டத்துக்கு வந்தான்.

## 2-வது பரமேஸ்வரன் கி. பி. 705—710.

இவர் சிறு காலம் ஆண்டமையால் இவரைப்பற்றி அதிகமாய்த்தெரியாது. இவருக்குப்பின் பட்டத்துக்குவர பிள்ளையில்லாததினால் மந்திரிகளும் பெரியாரும் குருகுலமன்னவர்களும் கூடி பல்லவ அரசர் குலத்தில் பிறந்த இரண்ய வர்மன் மகன் இரண்டாம் நந்திவர்மன் அரசனாக தெரிந்தெடுத்தார்கள். இதைக்குறித்து வைகுண்ட பெருமாள் கோயிலில் உள்ள கல்வெட்டு மூலமாக அறிந்து கொள்ளலாம். பரமேஸ்வரன் நான்போகிறேனென்று தொழுது நின்றயிடம் என்ற வெட்டெழுத்துக்கள் முதலியனவற்றை இங்குப் பார்க்கலாம். இதில் நந்திவர்மன் பட்டாபிஷேகம் பெற்றதைக் குறித்தும் குறிப்பிட்டிருக்கிறது.

எட்டாவது நூற்றாண்டில் 710 — 775 கி. பி. மதுரை கோயிலினது பீடத்தில் கீழ் மூன்று செம்பு இதழ்களில் வெட்டப்பட்டிருந்தது. இதற்கு உரை நக்கீரனர் இயற்றினர். இப்பொழுது கிடைத்து அச்சிட்டிருக்கிற உரை நீலகண்டர் நீவிரமாக எழுதியதாக தோன்றுகிறது. 329 பாக்களடங்கிய ஒரு கோவை உண்டு. இவற்றில் நந்தி வர்மனுக்கு எதிரியான பராங்குசன் செயல்களை பாடி இருக்கிறது.

பாட்டு :—

பாவடியானைப் பாரங்குசன் பாழிப்பகை தணித்த
தவடி வேள் மன்னன்
வேறு மெனதின்றிகள் மலைத்தார் விழிஞத்து விண்போ
யேலுந்திரங் கொண்ட கோன்.

## நந்தி வர்மன். (710 — 775 கி. பி.)

மேற் கூறியபடி பரமேஸ்வரனுக்கு பிள்ளை இல்லாத தினால் நந்திவர்மன் பட்டத்துக்கு வந்தான். இவன் காலத்தில் சாளுக்கிய மன்னனாகிய இரண்டாவது விக்கிரமாதித்தன் படையெடுத்து வந்து காஞ்சிபுரத்தைப் பிடித்து சிறிது காலம் தன் வசமாக்கிக்கொண்டான். இதே காலத்தில் நந்திவர்மனுக்கு தென்நாடுகளோடும் யுத்தம் நடந்துக்கொண்டிருந்தன. ஆனால் நந்திவர்மன் காஞ்சிபுரத்தை திரும்பவும் பிடித்து விக்கிரமாதித்தனை விரட்டி விட்டான். திருமங்கையாழ்வார் பாடிய பெரிய திருமொழி என்ற நூலில் இந்த யுத்தங்களின் சிலவற்றைப் பற்றி கூறப்பட்டிருக்கிறது. நந்திவர்மன் பல்லவன்காலத்தில் (710—775) உள்ள பல கல்வெட்டுகள் அகப்பட்டிருக்கின்றன. இவற்றில் முக்கியமானவை :— உதயேந்திர சாசனம், காசாகுடி சாசனம், தண்டன் தோட்ட சாசனம் என்பவையே. சரித்திரம் அறிந்துகொள்ள இவை மிகவும் உதவி. நந்திவர்ம பல்லவன் தானம் அளித்த கிராமங்கள் பல உண்டு. உதயேந்திர சாசனத்தால் தானம் செய்த கிராமத்திற்கு உதயேந்திர மங்கலம் என்றுப்பெயர். காசாகுடி சாசனத்தால் ஈன்ற சாசனத்திற்கு ஏகதீர மங்கலம் என்றுப் பெயர். தண்டன்

தோட்ட சாசனத்திற்கு தயாமுக மங்கலம் என்றுப் பெயர். உதயேந்திர சாசனத்தில் தான்கொடுத்த நிலத்தோடு மன்னன் இரண்டு தண்ணீர் பாய்ச்சும் இயந்திரங்களையும் கொடுத்தான். தொண்டை மண்டலத்தில் ஆற்று பாய்ச்சல் அதிகமாகயில்லை. இதனால் இங்கு நீர் இறைத்து பாய்ச்சுவதில் சாமர்த்தியம் அடைந்தவர்க்கு கார் காலத்து வேளாளர் என்றுப் பெயர். பின்காலத்தில் இவர்கள் சோழமண்டலம் போய் குடியேறினார்கள். இம்மன்னன் பல குளங்கள், கால்வாய்கள் வெட்டுவித்தான். சக்கர தீர்த்தம், திரையன் ஏரி, முதலிய உதாரணம். ஆறுகளுக்கும், கால்வாய்களுக்கும், உதாரணம். செய்யாறு, சீரநதி, வேகவதி. இக்காலத்தில் தமிழ் நாட்டில் ஆரிய கலைகளை பரவச்செய்தவர் தெலுங்கர் என்று யூகிக்கப்படுகிறது. பல்லவர் காலத்தில் கும்பகோணத்திற்கு அருகான நாத கோவில் அல்லது நந்திபுரம் என்ற ஊரில் ஒரு கோட்டை இருந்தது. இந்தக் கோட்டையிலிருந்த நந்திவர்மனை பாண்டிய அரசன் மான்தேரமாறனும், சித்திரமாயினும் முற்றுகைப் போட்டார்கள். பல்லவர்களுக்கும், பாண்டியர்களுக்கும் நடந்த போர்கள் பல கும்பகோணத்தருகில் நடந்தன.

பாட்டு :—

1. சொல்லுவன் சொற்பொருள் தானவையாய்ச்
   சுவை யூறொலி நாற்றமும் தோற்றமுமாய்
நல்லரன் நான் முகன் நாரணனுக்க இடந்தான்
   தடஞ் சூடிந்த முகாயச்சி
பல்லவன் மல்லையர் கோன் பணிந்த
   பரமேச்சுர விண்ணகர மதுவே.

2. கார்மன்னு நீர் விசும்பும் கடலும் சுடரும்
நிலனும் மலையும் தன்னுந்தித்
தார் மன்னு தாமரைக் கண்ணனிடம்
தடமாமதின் சூழ்ந்தழ காய கச்சி
தேர்மன்னு தென்னவனை முனையிற் செருவில
திறல் வாட்டிய திண்சிலையோன
பார்மன்னு பல்லவர் கோன்பணிந்த
பாமேச்சா விண்ணகர மதுவே.

3. குடைத்திறலை மன்னவனாய் ஒருகால்
குறங்கைப் படையாமலை யார்கடலை
யடைத்தவ வெந்தை பிரதான திடம்
மணிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி
விடைத்திறல் வில்லவன் செல்மெலியில்
வெருவச் செருவேல் விலங்கைப் பிடித்த
படைத்திறற் பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சர விண்ணகர மதுவே.

(திருமங்கையாழ்வார் பாடியது).

---

சமயநிலை.

சைவ மதமும், வைணவ மதமும் பரவியிருந்தது. சமண மதமும், பௌத்த மதமும் குன்றிப் போயிருந்தன. திருமங்கையாழ்வார் இவர்களைக் குறித்து இகழ்ச்சியாகப் பாடியிருக்கிறார்.

பாட்டு :—

பொக்கு போதியும் பிண்டியு முடைப்புத்தர் நோன்பியா
பள்ளியுள்ளுறை
தங்கள் தேவரும் தாங்களுமேயாக என் னெஞ்ச மென்பாய்
எங்கும் வானவர் தானவர் நிறைந்தேத்தும் வேங்கடமேவி நின்றருள்
அங்கணுயர்க்கு இன்றடிமைத் தொழில் பூண்டாயே.

(திருமங்கையாழ்வார்).

இக்காலத்திலேயே கேரளநாட்டில் உதித்த சங்கராச்சாரியார் அத்வைத வேதாந்தம் போதித்திருக்கலாம். அத்துவிதம் என்றால் பிரமம் அல்லது கடவுள் ஒன்றே, மெய்ப்பொருள் காணப்படுகிறவைகளெல்லாம் கடவுளின் அம்சமே. சங்கராச்சாரியார் இதைக் குறித்து வடமொழியில் விவரமாக எழுதினதுமல்லாமல் இந்தியாவில் பல இடங்களில் யாத்திரை செய்து எல்லாருக்கும் போதித்து வந்தார். சங்கராச்சாரியார் நம்பூதிரி பிராமணர். இக்காலத்தில் சமணமதம் குன்றியிருந்தாலும் முற்றிலும் இல்லாமல் போகவில்லை. ஆற்காடு பக்கத்தில் பஞ்சபாண்டவமலை என்று ஒரு குன்று இருக்கிறது. இந்தக் கோயிலில் சமணர் வசித்திருந்தார்கள். இக்குகையில் சமணவிக்கிரங்களை செதுக்கியிருக்கிறார்கள். இக்காலத்திலிருந்த பாண்டிய மன்னன் பெயர் மாறன் சடையன் என்ற பராந்தகன். கேரள நாட்டில் குலசேகர பெருமாள்.

## தமிழ் இலக்கியம்.

இக்காலத்திலிருந்த சிறந்த கவிராயர் திருமங்கையாழ்வார். சோழமண்டலத்தில் திருமங்கை நாட்டில் கள்ளக்

குடியில் இருந்த ஒரு சேனதிபதியின் மகன். கொஞ்சக்காலம் இளவாசனுய் வாழ்ந்தார். பின்பு விஷ்ணு பக்தனுய் ஊர் ஊராய் யாத்திரைச்செய்து பல பாசுரங்கள் பாடினுர். இவர் இயற்றிய நூல்கள் 1. பெரிய திருமொழி. 2. திருக்குறுந் தாண்டகம். 3. திருநெடுந் தாண்டகம். 4. சிறிய திருமடல். 5. பெரிய திருமடல். 6. திருவெழுக் கூற்றிருக்கை.

பாட்டு :—

1. எம்பிரானெந்தை என்னுடைய சுற்றம்
எனக்கரச என்னுடைய வாணுள்
அம்பினலரக்கர் வெருக் கொள நெருக்கி
அவருயிர் செகுத்தவெம் மண்ணல்
வம்புலாஞ் சோலே மாமதின் தஞ்சை
மாமணிக் கோயிலே வணங்கி
நம்பிகாள் உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராயணு வென்னும் நாமம்.

2. குலந்தரும் செல்வந் தந்திடும்
அடியார் படுதுயராயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள் விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும்
பெற்றதாயினு மாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லே நான் கண்டுகொண்டேன்
நாராயணு வென்னும் நாமம்.

இக்காலத்தில் இறையனுர் அகப்பொருளுரை என்பது எழுதப்பட்டது.

மேற்கூறிய பல்லவமன்னர்கள் காலங்களைத் திட்ட வட்டமாய் ஆண்டுகள் கூறி உறுதியாகக்கூற இயலாது. மேலும் இந்த நூலின் ஆரம்பத்தில் நான் குறிப்பிட்டபடி தமிழ் நாட்டுச் சரித்திரத்தில் மன்னர்களையும் போர்களையும் முக்கியப்படுத்தி விவரித்து எழுதுவது என் நோக்கமல்ல. இவ்விதமாக அரசர்களைக்குறித்து விவரமாக, மற்றும் எத்தனையோ சரித்திர நிபுணர்கள் இப்போது தமிழ் நாட்டில் சரித்திர நூல்கள் எழுதி பிரசுரம் செய்திருக்கிறார்கள். ஆதலின் இங்கு பல்லவ மன்னர்கள் வரலாறுகளைச் சுருக்கி முடித்து, அவர்கள் காலத்தில் அரசியல்முறைமைகள் எவ்வாறு நடந்தேறியன என்பவற்றைக் குறித்து சற்று குறிப்பிடுகிறேன். அதோடுகூட மங்கி மறைந்திருந்த சோழ அரசு எப்படி திரும்பவும் தலைதூக்க ஆரம்பித்ததென்பதையும் சுருக்கமாய் சொல்லுகிறேன். அப்படியே, இந்த அரசியல் காண்டத்தில் சோழமன்னர்கள், பாண்டியர்கள் இவர்கள் சரித்திரத்திலும் முக்கியமானவைகளை மாத்திரமே குறிப்பிடுவேன். அதிக நுட்பமாக அறியவிரும்புவோர் நான் இறுதியில் குறிப்பிட்டிருக்கிறபடி இந்த நூலெழுத எனக்கு உதவிய பல சரித்திர நிபுணர்கள் மேற்கோள் நூல்களை வாசித்தறியவும்.

மூன்றும் நந்திவர்மன் (825–850 கி. பி.) காலத்தில் நந்திகலம்பகம் என்ற காவியம் இயற்றப்பட்டது. தெள்ளாற் போரின் விவரங்களை இந்த நூல் விரிவாக குறிப்பிடுகிறது. இப்போர் பாண்டிய மன்னவனோடு நடந்தது (கி. பி. 832

224A.



ஆலயத்தின் விசாலமான உள்பிரகாரம், சுற்று மண்டபங்களின் சிற்ப மாண்பை, கவனிக்கவும்.

போலிருக்கலாம். காவேரிபாக்கம் இக்காலத்தில் அவனி நாரயண சதுர்வேதி மங்கலம் என்ற பெயருடையதாய் இருந்தது. இதேகாலம்தான் தமிழ் வியாபாரி ஒருவன் சீயாம் நாடு (தற்காலத்தில் தாய்நாடு என்ற பெயருடையது) சென்று அவன் அங்கு வெட்டிய குளத்திற்கு அவனி நாரயணகுளம் என்று பெயரிட்டான் என்று சீயாமிலுள்ள ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. இதனால் தமிழ் நாடு அக்காலத்தில் எத்துணையாக கடல் கடந்து தூர நாடு சென்று வியாபாரம் செய்வதில் சிறந்திருந்ததென அறியலாம். இதோடு சீயாம்நாடுகளுக்கும் தமிழ் நாட்டுக்கும் மிகப்பழமையான சம்பந்தமுண்டு. மன்னனுக்குச் சிறந்த கடல் படையிருந்ததாகவும் நந்திக்கலம்பகாவியம் கூறுகிறது. பல்லவ ஏகாதிபத்திய இறுதியில் ஆண்ட மன்னவர்களின் விவரமெல்லாம் எடுத்துக்கூறின் விரிவாகிவிடும். ஆதலின் சுருங்கச்சொல்லி முடித்து சோழமன்னர்கள் பாண்டியர்களைக் குறித்து எழுத விரும்புகிறேன்.

---

சோழர்களும், பாண்டியர்களும்.

கி. பி. 885–883. அப்பராஜித்த வர்மன் என்ற பல்லவ மன்னன் அரசாண்டான். இவன் அரசாண்ட மூன்றும் ஆண்டிலிருந்து எட்டாவது ஆண்டு மட்டும் வெட்டி வைத்த சாசனங்களை சென்னைபட்டணத்திற்கு அருகாமையிலுள்ள சத்திய வீடு என்ற ஊரில் பார்க்கலாம். இவன் பாண்டிய மன்னனாகிய இரண்டாவது வாகுணனோடு போர் புரிந்து

உறிபாம்பிரியம் என்ற ஊரில் (அதாவது கும்பகோணத்துக்கு சமீபமாயிருக்கும் திருப்புறம்பியம்) என்ற ஊரில் வெற்றியடைந்தானும். இவனுக்கு தற்காலத்து மைசூர் ராஜியத்திலிருக்கும் கோலாரை பிரதம நகராகக்கொண்டு ஆண்ட முதலாவது பிரிதிவிபதி என்ற கங்கை மன்னன் உதவி புரிந்தான். இந்த யுத்தத்தின் வருஷம் உத்தேசம் கி. பி. 880.

## பல்லவ ஏகாதிபத்தியத்தின் முடிவு.

ஒன்பதாவது நூற்றாண்டின் கடைசி பாகத்தில் முதலாவது ஆதித்தியன் என்ற சோழ மன்னன் பல்லவ ராஜியத்துக்கு தென் பாகத்திலுள்ள நாடுகளை ஆண்டு வந்தான். இவன் கொஞ்சம் கொஞ்சமாக சில நாடுகளை ஜெயித்துக் கொண்டு வந்தான். கடைசியில் ஒன்பதாவது நூற்றாண்டின் முடிவில் தொண்டை மண்டலம் முழுவதையும் ஆதித்தியன் தன் அரசாட்சிக்குள் கொண்டு வந்து விட்டான். இவ்விதமாக பல்லவ ஏகாதிபத்தியம் முடிவிற்கு வந்தது. சோழர் ஏகாதிபத்தியம் திரும்பவும் தொடங்கிற்று. இந்த மன்னன் இயற்றிய தமிழ் பாட்டுக்கள் திருத்தணியிலிருக்கும் விருத்தனேஸ்வர ஆலயத்தில் வெட்டப்பட்டிருக்கிறது.

## பல்லவ அரசியலில் விசேஷமாக கவனிக்கத்தக்க பொது விஷயங்கள்.

1. அரசியல் முறைமை :— மூன்றும் நூற்றாண்டிலிருந்தே பின்வருமாறு அரசியல் முறைமையிருந்தது.

அதாவது :— முதலாவது அரசன்.
மாகாண அதிபதிகள்.
அரசனுக்கு உதவியாக அமைச்சர்கள்.

தோட்டங்கள், தீர்த்தங்கள், மாடுகள் ஆகிய இவைகள் அமைச்சர்கள் மேல்பார்வையில் இருந்தது. நாட்டை சிறு பாகங்களாகவும், பெரும் பாகங்களாகவும் பிரித்திருந்தார்கள். அரசியல் இலாக்காக்களுக்கு தலைவராக இராஜ வம்சத்தினர் அல்லது சேனை உத்தியோகஸ்தர்களில் சிறந்தவர்கள் தலைவராகயிருந்தார்கள். மகாணங்களுக்கு மண்டலம் அல்லது ராஷ்ட்டிரம் என்று பெயர் இருந்தது. ஒவ்வொரு மண்டலத்துக்கும் ஒரு ராஜபிரதிநிதி இருந்தார்கள். இந்த ராஜபிரதிநிதிக்கு விஷயக்காரர் என்று பெயர். ஒரு மண்டலத்தை பல கோட்டங்களாக பிரித்திருந்தார்கள். தொண்டை மண்டலமாவது இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரித்திருந்தன.

கோட்டங்களுக்கு கீழே கிராமம் இருந்தன. கோட்டத்தை மேல்பார்ப்பவர்களுக்கு தேசாதிபதிகள் என்று பெயர். கிராமத்தை மேல்பார்ப்பவர்களுக்கு வபித்தர் என்றுப் பெயர். மன்னர் அரசியல் விஷயங்களை குறித்து அமைச்சர்களையும் சட்ட நியாய சாஸ்திரிகளையும் ஆலோசனைக் கேட்டு வந்தான். ராஜாவுக்கு இரகசிய காரியதரிசியும் ஒருவரிருந்தார். எற்றுமதி இறக்குமதியுக் குரிய வரிகளைப் பார்ப்பதற்கு உத்தியோகஸ்தர்களும் இருந்தார்கள். இவர்கள் பார்க்கும் இடத்திற்கு மண்டபம் என்று பெயர்.

இதைப்பார்ப்பவர்களுக்கு மண்டபிகள் என்று பெயர். தீர்த்த உத்தியோகஸ்தர்கள் தீர்த்தத்தை கவனிப்பார்கள். சேனுதிபதிகளுக்கு நாயகர் என்று பெயர்.

2. கிராம அரசியல் :— கிராமங்களில் கிராம விஷயங்களை மேல்பார்க்க கிராம சபைகள் இருந்தன. கிராம நிலங்களை அளந்து அளவிட்டு வரி விதித்தார்கள். பயிரிடக் கூடிய நிலங்கள், பயிரிடப்படாத நிலங்கள், ஏரிகள், குளங்கள், கிணறுகள், ஆறுகள், மரங்கள் முதலிய கணக்கு கள் போட்டிருந்தார்கள். பிராமணருக்கு கொடுக்கப்பட்ட மானிய நிலங்களும் கணக்கிடப்பட்டிருந்தன. பிராமணருக் குக் கொடுக்கப்பட்ட நிலங்களுக்கு வரி கிடையாது. பால், மோர், சர்க்கரை, காய்கறி, புஷ்பம், உப்பு முதலியவற்றிற் கெல்லாம் வரி போடப்பட்டிருந்தன. ஒவ்வொரு தொழிலுக் கும் உத்தியோக வரி இருந்தன. ஆலை, பானை, பொன் வேலை, கள், பாக்கு வியாபாரம், தறி, முதலியவைகளுக்கு வரி விதிக்கப்பட்டிருந்தது. மன்னர்களுக்கு தரும மகா ராஜன் என்று பெயர்.

---

## கிராம சபைக்கு அங்கமாக நிபந்தனைகள்.

பிராமண மந்திரம், தர்மம் இவற்றில் கற்றவனுயிருக்க வேண்டும். கிராமத்தில் விலைக்கு அல்லது சீதனமாகப் பெற்ற ஜீவனம் இருக்கவேண்டும். வேத அறிவு இருக்க வேண்டும். கிராம விஷயங்களைக்குறித்து தீர்மானிக்க இந்த

சபையில் அங்கமாக இருந்தால்தான் தீர்மானிக்கலாம். இந்த கிராம சபையில் இருக்கிற அங்கத்தினர்கள் ஏற்படுத்தும் சட்டங்களை எப்போதும் எதிர்க்கிற எவனாவது இருந்தால் அவன் அங்கமாயிருக்கக்கூடாது. இப்படி எப்போதும் எதிர்க்கிறவர்கள் அபராதம் கொடுக்கவேண்டும்.

கலை :—பல்லவர் காலத்தில் சமஸ்கிருத கல்வி மிகவும் விருத்தியானது. ஏனெனில் பல்லவ மன்னர்கள் சமஸ்கிருத கலையை அதிகமாய் ஆதரித்தார்கள். ஆனால் ஆழ்வார்களும், ஆண்டார்களும் இக்காலத்தில் தழைத்தார்கள். மதவில பிகாசனம் என்ற புஸ்தகத்தை முதலாவது மகேந்திர வர்மன் எழுதியிருந்தான். குடுமியா மலையில் காண்கிற சங்கீத வெட்டுகளும் இக்காலத்துக்கே உரியன.

தேவாரம், நாலாயிர பிரபந்தம் இயற்றப்பட்டகாலம் இதுவே. சமண மதத்திலிருந்து சிவ மதத்திற்கு அப்பர் மகேந்திரவர்மனைத் திருப்பினர். இவர் தேவாரம் 3000 அடிகள் அடங்கியவை. முதலாவது நரசிம்மன் காலத்தில் திருஞானசம்பந்தர் வாழ்ந்தவர். இக்காலத்தில் சிவ மடங்கள் சிவ ஆலயங்களும் பல கட்டப்பட்டன.



# சோழ இராஜியம்.

## வம்ச வரலாறு.



குலோத்துங்கச் சோழன்.

### முதலாவது ஆதித்தன் கி. பி. 880 — 907.

ஆதித்தன் பல்லவ ராஜனாகிய அபாராஜிதத்தனை தோற்கடித்து தொண்டைமண்டலத்தை சோழ அரசாட்சிக்குள்

கொண்டுவந்தான். ஒன்பதாவது நூற்றூண்டின் கடைசி பாகத்தில் நடந்தது. தொண்டைமண்டலம் என்றூல் வட பெண்ணை தென் பெண்ணை ஆறுகளுக்கு இடையிலுள்ளது. தற்காலத்தில் செங்கல்பட்டு, வடாற்காடு, தென்னுற்காடு ஜில்லாக்கள் அடங்கியநாடு. இக்காலத்தில் ஆண்ட சோழ மன்னர்களுக்கும், கோள மன்னர்களுக்கும் நெருங்கிய சிநேகமிருந்தது. ஆதித்தன் தொண்டைமண்டலத்தை ஜெயிக்க கோள மன்னன் உதவியாயிருந்தான். கோள மன்னனின் பெயர் தாணுரவி. விக்கி அண்ணன் என்ற ஒரு சேனைத்தலைவனும் ஆதித்தனுக்கு உதவியாயிருந்தான். இவன் செய்த உதவிக்கு நன்றியாக ஆதித்தனும் தாணுரவியும் சேர்ந்து விக்கி அண்ணனுக்கு ஒரு வெண்சாமரை பல்லக்கு, மேளம், அரண்மனை, சங்கு, யானை பட்டாளம் கொடுத்தார்கள். செம்பையன் தமிழ்வேல் என்ற பட்டமும் தரித்தார்கள். ஆதித்தன் பாண்டிய மன்னனுகிய வாருண னேடும் கும்பகோணத்திற்கு சமீபமாகிய திருப்புரம்பியம் என்ற ஊரில் போர் புரிந்து வெற்றியடைந்தான். கோலாரை பிரதான நகராகக் கொண்டு ஆண்ட முதலாவது பிருதிவிபதி என்ற கங்கை பாணன் இதற்கு உதவியாயிருந்தான். ஆனல் யுத்தத்தில் பிரிதிவிபதி மாண்டுபோனுன். திருவேலங்காடு சாசனமும் திருக்கழுக்குன்றம் சாசனமும் இதற்கு முக்கிய ஆதாரமாகயிருக்கின்றன. இந்த மன்னன் கொங்கு நாட்டையும் தன் ஆதினத்துக்குள் கொண்டு வந்தான். இவன் தற்காலத்தில் கலகாஸ்தி எனும் திருக்காளத்திக்கு சமீபமுள்ள தொண்டநாடு என்ற கிராமத்தில்

இறந்துப்போனதாகத் தெரிகிறது. இவனுக்கு இருந்த பேர் தொண்டைமான் ஆரூர் துஞ்சின தேவா.

## முதலாவது பராந்தகன் கி. பி. 907–953.

இவனுக்கு மதுரைக் கொண்ட பாகேசரி வர்மன் என்ற பட்டப் பெயர் உண்டு. இவன் காலத்தில் கேரள மன்னனுக்கும் சோழ மன்னனுக்கும் சிநேகமிருந்தது. இவன் மனைவி கேரள மன்னனின் மகள். சோழநாட்டுக் குடிகளுக்கும், கேரள நாடு குடிகளுக்கும் நெருங்கிய சம்பந்தமிருந்தது. இக்காலத்தில் பாணர் என்ற சிற்றரசர் பாலாற்றுக்கு வடக்கே ஆண்டனர். சோழருக்கு அடங்காமல் இருந்தார்கள். இப்பாணரை பராந்தகன் அடக்கி தன் அதிகாரத்துக்குள்கொண்டு வந்தான். பாண்டிய நாட்டிற்கும் படையெடுத்துச் சென்று மதுரையை தன் கீழ் கொண்டு வந்தான். தோல்வி அடைந்த பாண்டிய மன்னனாகிய ராஜசிம்மன் இலங்கைக்கு ஒடிப்போய் அத்தேச மன்னனின் உதவியை நாடினான். இது கிறிஸ்துவுக்குப் பின் 915-ம் வருஷம்போல் நடந்தது. இதைக்குறித்து இலங்கை சரித்திர புஸ்தகமாகிய மகாவம்சா என்ற நூலில் கூறப்பட்டிருக்கிறது. இலங்கை மன்னனின் பெயர் ஐந்தாவது காசப்பன். காசப்பனுக்கு உதவியாக பாண்டிய மன்னன் ஒரு படையை அனுப்பினான். ஆனால் பாண்டியனும் இலங்கை மன்னனும் பட்டாளமும் தோல்வி அடைந்தார்கள். இலங்கை மன்னனின்மேல் கோபங்கொண்ட பராந்தகன் இலங்கைக்கும் கி. பி. 945-ம் வருஷம் படையெடுத்து போனான். இவற்றை

யெல்லாம் குறித்து பின் குறிப்பிட்ட சாசனங்கள் கூறு கின்றன. திருவேலங்காடு சாசனம், மதுரைக்கு சமீபமான ஆனைமலை, பெரியகுளம், தாலுக்காவிலுள்ள சின்னமானூர், அம்பாசமுத்திரம்.

இதன்பின் பராந்தகன் சிதம்பரம் சென்று அங்குள்ள சிவன்கோயிலுள்ள சிற்றம்பலத்துக்கு தான் திரட்டி வந்த பொன்னை தானமாகக் கொடுத்தான். இவன் காலத்தில் அரசியல் இவன் செய்த பல சீர்திருத்தங்களால் சிறப் படைந்து தழைத்து வந்தது. கிராமசபைகளை ஏற்படுத்தினான். ஆலயங்கள் கட்டினான். பல கால்வாய்கள் வெட்டி நீர்ப் பாய்ச்சலுக்கு உதவிசெய்தான்.

இருதியாகச் சுருங்கச் சொல்லில் விஜயாலனாகிய இவன் முற்பிதா தஞ்சாவூரில் சோழவம்சத்தை நாட்டினவன். இவன் மகன் முதலாவது ஆதித்தன் பல்லவர்களைத் தோற் கடித்து தொண்டைமண்டலத்தை சோழ ஆதினத்துக்குள் கொண்டு வந்தான். ஆனால் முதலாவது பராந்தகன்தான் சோழ ராஜியத்துக்கு ஏகாதிபத்திய அஸ்திபாரம் போட் டான். பாணர்களை ஜெயித்தான். கங்கை வம்ச அரசனாகிய இரண்டாவது பிரதிவிபதியை தன் அதிகாரத்துக்கு கீழாக ஆளும்படிச் செய்தான். பாண்டியர்களை வென்று இலங் கையும் சென்று ஜெயம் பெற்றான். அரசியல் விஷயங்களில் பல சீர்திருத்தங்கள் கொண்டு வந்தான். பராந்தகன் இறந்த பின் உத்தேசம் 33-வருஷ சரித்திரம் தெளிவாக நாம் அறியக்கூடாதபடி பல குழப்பங்கள் தோன்றினதாக




தமிழ் மன்னர்களுக்குள் ஒரு அரசன் வயதானபின் பட்டதாரியாகிய தன் மகனை தான் உயிரோடிருக்கும்போதே அரசனுக்கி இருவரும் ஆள்வார்கள்.

தெரிகிறது. பாரந்தகன் யுத்தத்திற்காக தென்னாடுகள் சென்ற போது ராஷ்ட்ராக் கூத்த வம்சத்தை சேர்ந்த மன்னனாகிய மூன்றாவது கிருஷ்ணன் தொண்டைமண்டலத்தின் மேல் படையெடுத்து வந்தான். இவனை எதிர்க்க பராந்தகனின் மூத்தமகனாகிய ராஜாதித்தன் படையோடு வடக்கே சென்றான். யுத்தத்தில் ராஜாதித்தன் கொல்லப்பட்டான். இதனால் பராந்தகன் காலத்திலேயே மூத்த மகன் இறந்துப் போனதாகத் தெரிகிறது. இது உத்தேசம் கி. பி. 942-ல் நடந்திருக்கலாம். தக்கோலம் என்ற இடத்தில் யுத்தம் நடந்தது. தொண்டைமண்டலமும் ராஷ்ட்ர கூத்த மன்னனாகிய கிருஷ்ணன் வசம் 942-லிருந்து கீழ்ப்பட்டிருந்ததாக தெரிகிறது. பராந்தகனுக்கு மூன்று ஆண் மக்கள் இருந்தார்கள்.

## கந்தராதித்தன்.

கந்தாராதித்தன் வயது சென்றபின் கலியாணம் செய்தான். பின்பு சிறிதுகாலத்துக்குள் ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அதன்பின் கந்தாராதித்தனும் இறந்து போனான். உத்தம சோழன் சிறு குழந்தையானதால் அரிஞ்செயன் அவனுக்கு பதிலாக ஆண்டுவந்தான். இறந்துபோன கந்தராதித்தன் தமிழ் வித்வானாக இருந்ததாக தெரிகிறது. திருஇசைப்பா என்ற தேவாரம் பாடியிருக்கிறார். இந்நூலின் கடைசியில் தன்னை மதுரைக்கொண்ட சோழனின் மகன் என்று அழைக்கிறார். வயது முற்றின காலத்தில் இவன்

விவாகம் செய்துகொண்ட ராணியும் தெய்வபக்தியுள்ளவளும், ஆலயங்கள் கட்டி அவற்றிற்கு மாணியங்களும் கொடுத்தவளுமாயும் இருந்தாள். இவள் தன் கணவனுக்குப் பின் வெகுகாலத்துக்கு இருந்து முதலாவது ராஜராஜன் காலத்தில் 1001-ம் வருஷம் இறந்தாள். இவள் குழந்தை உத்தம சோழன் பாலகனாய் இருந்ததினால்தான் இவன் சிறிய தகப்பனார் அரிஞ்செயன் பட்டத்துக்கு வந்தான். அரிஞ்செயனுக்குப் பின்னால் அவன் மகன் சுந்தர சோழனும் ஆண்டு வந்தான். இவனுக்கு இரண்டாவது பராந்தகன் என்று பெயர். இவன் ராஜகேசரி வர்மன். சோழ மன்னர்களுக்குள் ராஜகேசரி வர்மன், பரகேசரி வர்மன் என்று மாறி மாறி பட்டம் வரும். சுந்தர சோழன் பாண்டிய மன்னனாகிய வீரபாண்டியனோடு போர் புரிந்து வெற்றி பெற்றான். இலங்கை சரித்திரமாகிய மகாவம்சா இதைப்பற்றி கூறுகிறது. பாண்டிய மன்னன் குடிகாரனும் சோம்பேறியாகவும் போய் விட்டதாகவும், இதனால் சோழ மன்னன் படையெடுத்து வந்து அவனை வெல்ல அவன் இலங்கைக்கு ஓடிப்போனதாகவும் சொல்லியிருக்கிறது. சுந்தர சோழன் திரும்பவும் காஞ்சிபுரத்தை ராஷ்ட்ர கூடத்தரிடத்திலிருந்து பிடித்து தொண்டைமண்டலத்தை தன்கீழ் கொண்டுவந்தான். இவன் மதுரையும் ஜெயித்ததால் இவனுக்கு மதுரைகொண்ட ராஜகேசரிவர்மன் என்று பெயர். இவனுக்குபின் இவன் மகன் இரண்டாவது ஆதித்தன் பட்டத்திற்கு வந்தான். இவனுக்குப்பின் உத்தமசோழன் வயது வந்துவிட்டதால் பட்டத்துக்கு வந்தான். இவன் பரகேசரி.

## சிலகுறிப்புகள்.

(1) பராந்தகன் 907 — 953.

(2) 3-வது கிருஷ்ணன் 942ல் தொண்டைமண்டலத்தை பிடித்தான்.

(3) தக்கோல சண்டையில் ராஜாதித்தன் மாண்டது.

(4) கந்தராதித்தன், அவன்பின் அரிஞ்செயன், சுந்தா சோழன் சோழ நாட்டில் ஆண்டது.

(5) மதுரைகொண்ட ராஜகேசரி என்ற சுந்தா சோழன் மதுரையை ஜெயித்தான்.

(6) இரண்டாவது ஆதித்தன் ஆண்டான்.
அதற்குபின் உத்தமசோழன் ஆண்டான்.

## (985 — 1014) 1-வது ராஜ ராஜன்.

இவன் மூத்த சகோதரன் இரண்டாவது ஆதித்தன் இறந்த உடனே இவன் பட்டத்திற்கு வரவேண்டுமென்று ஜனங்கள் விரும்பினார்கள். ஆனால் தன் சிறியதகப்பனர் உத்தம சோழன் தேசத்தை ஆளவேண்டுமென்று விரும்பி தான் அரசனாகமாட்டேன் என்று மறுத்து விட்டான். ராஜ குடும்பத்தில் எவ்வித சண்டைகளும் உண்டாகக் கூடாதென்பது இவனுடைய எண்ணம். ஆனால் உத்தம சோழன் ஆண்டு கொண்டிருக்கும்போதே இவன் பட்டதாரி என்று முழுதும் அங்கீகரிக்கப் பட்டிருந்ததினால் அரசியல் விஷயங்களை உற்று நோக்கி சகலத்தையும் கவனித்து வந்திருந்தான். பட்டத்துக்கு வந்த உடன் இரண்டு விசேஷித்த காரியங்களின் மேல்

கவனம் செலுத்தினன். தேசத்தின் மூல தனங்களை விருத்தி செய்யவும் சிறந்த சேனையை உண்டாக்கவும் முயற்சி செய்தான். வேளைக்காரர் என்ற வலக்கை வம்சத்தாரை போர் வீரராக திரட்டினன். வெவ்வேறு பேர்களையுடைய பட்டாளங்களை ஏற்படுத்தினன். குதிரை, யானை, வில்லாளர், கால் நடைப் பட்டாளம் முதலிய பல சேனை பகுதிகள் ஸ்தாபித்தான். தெலுங்கு ஜனங்களும் கால் நடைப் பட்டாளத்தை சேர்ந்திருந்தார்கள். தஞ்சாவூரில் சிறுந்தனம், பெறுந்தனம் என்ற தெருக்களில் பட்டாள உத்தியோகஸ்தர்கள் வசித்து வந்தார்கள். ஏராளமான ஏவலாளர்களும், மெய்க்காவலர்களும் இருந்தார்கள். பின்பு பல இடங்களும் சென்று போர் செய்து நாட்டை விஸ்தீரணமாக்க முயற்சி செய்தான். கோளம், பாண்டிய நாடு இவற்றிற்கு சென்று போர் புரிந்தான். கோள நாட்டார் தங்களுக்கு எல்லையும் பாதுகாப்பாயிருந்த பெரும் மலைகளைக் கடந்து தங்கள்மேல் வெற்றி பெற ஒருவராலும் ஆகாதென்று பெருமையை பாராட்டி வந்தார்கள். வெற்றியில் சிறந்த ராஜராஜனே மலைகளைக் கடந்து வில்லினம் என்ற கோட்டையைப் பிடித்து துறைமுகமாகிய காந்தளூரிலுள்ள கப்பல்களையும் பிடித்துக் கொண்டான். தங்கம், பொன், முத்துக்கள், பவளங்கள் முதலியன பறிமுதல் செய்தான். (கி. பி. 989) இதன் பின்பு வடக்குதிசைகளிலுள்ள தற்காலத்திலுள்ள மைசூர் ஒரு பாகம், குடகம், பல்லாரி, இந்த பிராந்தியங்களெல்லாம் பிடித்துக் கொண்டான். இதன் பின் வேங்கி நாட்டை ஜெயித்தான். ஆந்திர மன்னனுகிய பீமனையும் ஜெயித்தான். கோள நாட்டிலிருந்தும், பாண்டிய

நாட்டிலிருந்தும் தொந்தரவு வந்ததினால் திரும்பவும் அவற்றை அடக்கினான். கொல்லத்தை தன்வசப்படுத்தினான். இலங்கையும் சென்று வெற்றிபெற்றான். இதற்கு ஆதாரமாக பல உறுதியான ரூபகாரங்கள் உண்டு.

(1) இலங்கை பிராந்தியங்களிலிருக்கும் பலவித சாசனங்கள்.

(2) பாண்டிய நாட்டிற்கு ராஜபாண்டி என்று பேர் வந்தது.

(3) இலங்கையின் வரியில் ஒரு பாகத்தை தஞ்சாவூர் ராஜ்ஜியத்திற்கு கொடுத்தான்.

இதற்கு பின் இரட்டப்பாடி என்ற மேல் சாளுக்கிய ஏகாதிபத்தியத்தை ஜெயித்தான். இச்சமயத்தில் சோழ மன்னனுக்கு 9-லக்ஷம் வீரமுள்ள பட்டாளங்கள் இருந்தது. இந்து மகாசமுத்திரத்திலுள்ள சில தீவுகளையும் தன் ஆதினத்துக்குள் கொண்டுவந்தான்.

## சாளுக்கியர்.

சாளுக்கியர் என்றால் எவர்?

ஆறாவது நூற்றாண்டில் நடுக்காலத்தில் சாளுக்கியர் என்ற ஒரு வம்சத்தினர் இந்திய சரித்திரத்தில் தோன்றுகிறார்கள். இவர்கள் ராஜபுத்திரராய் இருக்கலாம் என்று யூகிக்கப்படுகிறது. பின்காலத்தில் இவர்களைச் சேர்ந்த இரண்டு சாளுக்கிய அரச வம்சம் தக்ஷணபாகத்தில் ஆண்டதாக தோன்றுகிறது. மேல்பாகத்திற்கு பிரதான நகரம்

வாதாபி என்ற இடம். தற்காலத்தில் பம்பாய் ராஜதானியில் பிஜப்பூர் ஜில்லாவில் பாதாமி என்று சொல்லப்பட்ட இடம் இதுதான். இந்த ராஜ்ஜியம் ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் மிகுந்த சிறப்போடு ஆண்டுவந்தது. இந்த ராஜ்ஜியத்தை முதலாவது ஸ்தாபித்த மன்னன் முதலாவது புலிகேசன். சாளுக்கியரின் அரசியல் அடையாளம் முள் பன்றி. இக்காலத்தில்தான் அதாவது புலிகேசன் போனபோது இரண்டாவது புலிகேசன் காலத்தில் சீனயாத்திரிகனாகிய ஹுயுந்தசங் (கி.பி. 641) இங்கு வந்தான். இக்காலத்தில் இதற்கு மகாராஷ்டிரம் என்று அழைக்கப்பட்டதுண்டு. ஆனால் கி. பி. 642-ம் ஆண்டிலே பல்லவ மன்னனாகிய நரசிம்ம வர்மன் சாளுக்கியரை ஜெயித்து அடக்கினான். சாளுக்கியரின் இன்னொரு கீழ் ராஜ்ஜியம் இருந்தது. இதற்கு பிரதான நகரம் வேங்கி. வேங்கியை ராஜராஜ சோழன் ஜெயித்தான்.

ராஜ ராஜன் செய்த பொது நன்மைகள்.

இவன் சிறந்த சிவபக்தனானதால் சிவபாதசேகரன் என்று வழங்கினது. தஞ்சாவூரில் பிரதீஸ்வரன் என்று தற்கால மட்டும் சிற்பாதிகமையோடு விளங்குகிற பெரிய ஆலயத்தைகட்டுவித்தான். தென் இந்தியாவில் சிற்ப அமைப்பில் சிறந்ததில் இது பேர்பெற்றது. ஏராளமான தொழிலாளிகள் இதில் வேலை செய்தார்கள். நாட்டின் சிற்ப வித்தை முன்னேற்றத்திற்கு இது உதவியாய் இருந்தது. சிற்ப சாஸ்திரிகள் எவ்வளவு நிபுணர்களாய் இருந்திருக்க வேண்டுமென்பதை இதனால் அறிகிறோம். சிதம்பரத்தில்

உள்ள ஆலயத்திற்கு ராஜராஜன் மண்டபங்கள் முதலியவை கள் கட்டுவித்தான். தஞ்சாவூர் ஆலயத்தில் மூலஸ்தானத்தின்மேல் இருக்கும் சின்ன கோபுரத்தின் உச்சியில் சுமார் 40-சதுர அடி கருங்கல் வைக்கப்பட்டிருக்கிறது. இது 80 டன் கனமுள்ளது. இந்த கோபுரத்துக்கு நிழல் கிடையாது என்று சொல்லுகிறார்கள்.

2. நீர்ப்பாய்ச்சல். காவேரி நதியிலிருந்து குடிகொண்டான், கீர்த்தி மார்த்தாண்டன், சோழ சுடாமணி, உய்யகொண்டான், என்றபலகால்வாய்களை வெட்டுவித்தான். இவைகளால் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் செழிப்பிக்கப் பட்டன. 1010-ம் 1011-ம் வருஷங்களில் நாட்டின் நிலங்களை அளக்கவும், அளவின்படியும் விவசாய வருமானத்தின் படியேயும் வரியிடவும் ஒழுங்கு செய்தான். வரிஜாபிதாவுக்கு வரி புஸ்தகம் என்று பெயர். இக்கணக்குப் பார்த்த உத்தியோகஸ்தர்களுக்கு வரி புஸ்தகக் கணக்கர் என்று பெயர். பிரதான காரியதரிசிக்கு ஓலை நாயகன் என்று பெயர். இந்த ஓலைகளை சரியானபடி பாதுகாப்பது இவருடைய கடமை. கிராமங்களின் எல்லைகள் வெகுநுட்பமாக கவனிக்கப்பட்டிருந்தன. வட ஆற்காடு ஜில்லாவில் ஒரு கிராமத்தின் நான்கு எல்லைகள் வருணிக்க 281 வரி அடங்கியிருக்கின்றன. நிலத்தை அளக்க அளவுகோல் ஒன்று இருந்தது. இதற்கு மானதண்டம் அல்லது ராஜ விபாதன கோல் என்று பேர் உண்டு. துரோணமல்லம் என்பது அளக்கும் பாத்திரம். இடங்களுக்கு தக்க அளவு வித்தியாசம் இருந்தது. மண்

தன்மைக்குதக்க நிலத்தை பிரித்திருந்தார்கள். நிலத்தின் விளைவுக்கு விதைக்கக்கூடிய தன்மை, விதைக்கப் பட்ட தானியம், நீர்ப்பாய்ச்சல் சௌகரியங்கள் இவைகளெல்லாம் சோதித்து அறிந்து வரி போட்டிருந்தது. அளக்கப்பட்ட நிலத்துக்கு இவ்வளவு தானியம் என்று வரி போடப்பட்டிருந்தது.

ராஜராஜன் பற்பல கலை வித்தைகளையும் அபிவிருத்தி செய்தான். நாட்டிய சாஸ்திரம், சங்கீத சாஸ்திரம், வாத்தியங்கள் முதலிய முன்னேற்றத்திற்கு மிகுந்த சிரத்தை எடுத்தான். பிரகதீஸ்வரன் கோயிலில் ராஜேஸ்வரம் என்ற நாடகம் புதிதாக நடிக்கப்பட்டதாம். நாட்டிய சாஸ்திரம் விருத்தியாக நடன சாலைகள் ஏற்படுத்தினான். பிள்ளைகளின் படிப்புக்காக பல கல்லூரிகள் ஏற்படுத்தினான்.

இக்காலத்தில் இருந்த ஆலயங்களின் பல உபயோகங்கள்.

1. ஒரு ராஜன் வெற்றியடைந்தபோது அல்லது தேசத்திற்கு பெரும் பாக்கியம் கிடைத்தபோது தெய்வத்திற்கு தனது மனமார்ந்த நன்றியை காட்ட இது ஒரு உபகாரணமாக இருந்தன.

2. ஜனங்கள் கடவுளை வழிபட பிரித்துவைக்கப் பட்ட பக்திக்குரிய ஸ்தலமாக இருந்தது.

3. இதின் மண்டபங்கள், மாணவர்கள் படிக்கும் கல்லூரிகளாய் இருந்தன.

4. விவகாரங்களை நியாயந்தீர்க்க நீதி மண்டபமாகவும் இருந்தன.

5. தூர இடத்திலிருந்து வரும் யாத்திரிகர்களைப்பாற ஒரு சத்திரமாகவும் இருந்தன.

6. சிற்ப வித்தை முன்னேற்றமடைய மிக உதவியாய் இருந்தன.

நிலவரி திட்டவட்டமாக குறிப்பிட பதிவு புஸ்தகங்கள் இருந்தன. ஆலயங்களின் மானியங்களை சரியானபடி செலவழிக்கிறார்களா என்று கவனித்து ஆராய தருமகர்த்தாக்கள் இருந்தார்கள். இவர்கள் ஊர் ஊராய் போய் சாட்சிகளையும் அழைத்து மானிய முதலிய விஷயங்களில் தவறினவர்களை தண்டித்தார்கள். மானியங்களை குறித்து பதிவு புஸ்தகங்கள் இருந்தன.

அரசனுக்கு பல மெய்க்காவலர்கள் இருந்தார்கள். அரசனுடைய கட்டளைகளைப் பரவச் செய்கிறவர்கள் இவர்களே. கிராம சபைகள் கிராமாந்தர காரியங்களை கவனித்துக் கொண்டிருந்தன. இந்த கிராம சபைகளை மேல் பார்க்க அரசனால் ஏற்படுத்தப்பட்ட உத்தியோகஸ்தர்களும் இருந்தார்கள். அரசனுடைய சகோதரிபெயர் குந்தவை. அவனுடைய சிறிய தாயார் பெயர் செம்பையன் மாதேவியார். அவனுடைய ராணிகள் எல்லாரும் அவர்களைப்போலவே சிவபக்தராயிருந்தார்கள். ராஜராஜனுக்கு ராஜேந்திர சோழன் என்ற ஒரு பிள்ளை இருந்தான். ராஜராஜன் மரணமடைகிறதற்கு மூன்று வருஷத்துக்கு முன்னமே தன் தகப்பனோடு சேர்ந்து ஆண்டுவந்தான்.

## ராஜேந்திர சோழன் (கி. பி. 1012–1044.)

இந்த மன்னன் தன் தகப்பனைவிட போர்களிலும், வெற்றிகளிலும் சிறந்து விளங்கினவனாய் இருந்தான். முதலாவது தளக்காடில் ஆண்ட பேல்கங்கா வம்சத்து அரசனை ஜெயித்தான். கீழ்பாகத்து சாளுக்கியரும் இவன் அதிகாரத்துக்குள் கீழ்பட்டிருந்தார்கள். பாண்டிய கேரள மன்னர்கள் இதுவரை முழுதுமாக அடக்கப்படவில்லை. இவனுக்கு முன்னிருந்த சோழ அரசர்கள் ஒருவாராக அவர்களைப் பல யீனப்படுத்தியிருந்தாலும் அவர்கள் சோழ மன்னன் அதிகாரத்தை முழுதுமாக ஏற்றுக்கொள்ளவில்லை. ராஜேந்திர சோழன் இவர்களை முற்றிலும் கீழ்படுத்தி பாண்டிய கேரளநாட்டில் தன்னுடைய பிரதிநிதியாக சோழ பாண்டியர் என்று பட்டங்கொடுத்து ராஜபிரதிநிதிகளை ஏற்படுத்தினான். இதற்குபின் மேல்பக்கத்து சாளுக்கிய அரசனாகிய மூன்றாவது ஜெயசிங்களை ஜெயித்தான். இதற்குபின் வட இந்தியா சென்று கங்கை நதி நாடுகளில் ஆண்டுகொண்டிருந்த இந்திரத்காரண சூரா, தரும பாலா என்னும் ராஜ வம்சங்களை தன் கீழ் அடக்கினான். இதற்கு ஞாபகார்த்தமாக கங்கை கொண்ட சோழபுரம் கட்டுவித்தான். இந்நாட்டு மன்னர்களை அடக்கிய பின் ஒரிசாவையும் பிடித்துக்கொண்டான். பின்னும் பல வடஇந்திய மன்னர்களோடு போர் புரிந்து வெற்றி பெற்றான். கீழ் சாளுக்கிய தேசத்தில் அரசனை தன் சொந்த மைத்துனனாகிய விமலாத்களை ஜெயித்து அதற்கு அடையாளமாக மகேந்திரமலையின்மேல் ஒரு ஜெயஸ்தம்பத்தை கட்டுவித்தான். சோழ பாண்டிய அடையாளமாகிய புலியும்,

மீனும் சேர்ந்த ஒரு அடையாளத்தை இந்த மலையின்மேல் வெட்டிவித்தான். இதற்குபின் கடல் தாண்டி தற்காலத்தில் மலேயா தீபகற்பம் என்று அழைக்கப்படுகிற கடாரம் சென்று அங்கும் வெற்றி சிறந்தான். பீகு என்ற பர்மாவின் ஒரு பாகத்தை தமிழ் நாட்டு ஏகாதிபத்தியத்தோடு சேர்த்துக் கொண்டான் என்று முன்சொல்லப்பட்டது சரியல்ல என்று தற்கால ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள். இவனுக்கு பெரிய கப்பல் படை இருந்தது. இந்துமகா சமுத்திரத்திலுள்ள நிக்கோபார், மாப்பாளம் என்கிற இடங்களையும் சோழ ராஜ்ஜியத்துக்குக் கீழ்படுத்தினான். சுமத்ரா, சாவகம் முதலிய தீவுகள் மட்டும் இவன் கப்பல் படை சென்றது. இந்நாள் மட்டும் சாவகம் என்ற தீவிலே இந்து நாகரீகத்துக்கு அடையாளமான ஆலயங்கள், சிற்பங்கள் முதலியன காணலாம். அந்தத் தீவு ஜனங்களின் பெயர்களிலும், கலைகளிலும், நாடகங்களிலும், அவர்கள் பூர்வீக நாட்களில் இந்துக்களோடு கலந்தவர்கள் என்று தெளிவாக அறியலாம். இவனுடைய ஸ்தானாதிபதிகள் 1033-ம் வருஷம் சீனாவுக்கு சென்றார்கள். இதைக் குறித்து சீன புஸ்தகமாகிய சுன்ஷி என்ற புஸ்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறது. சீன சக்ரவர்த்தியின் சிநேகத்தை ராஜேந்திரன் விரும்பியது தனது ஏகாதிபத்தியத்தை இன்னும் விசாலமாய் பெருக்கும் யோசனையினாலோ என்று நினைக்க இடமிருக்கிறது. ரஜேந்திர சோழனுக்கு பண்டித சோழன் என்று பெயர் இருந்தது. கணிகத்து பாணி என்கிற நூலில் இந்த பெயர் கொடுக்கப்படிருக்கிறது. இவனுக்கு வில் வீரர்கள் இருந்திருக்கிறார்கள். கி. பி. 1044-ம் வருஷம்

ராஜேந்திர சோழன் மரணமானான். இவன் மரணமாகு முன்னமே கி. பி. 1018-ம் வருஷத்திலிருந்தே ராஜாதிராஜன் இவனோடு சேர்ந்து ஆண்டுவந்தான்.

### ராஜாதிராஜன் (கி. பி. 1018–1054.)

இவன் அதிகமாக போர்கள் செய்து ரத்தம் சிந்தின வனாக தோன்றுகிறது. சத்ருக்கள் விஷயமாக கடூரமாக இருந்ததாகவும் தெரிகிறது. இலங்கையும் ஜெயித்தான். பாண்டியனோடும், சாளுக்கியரோடும் யுத்தம் செய்தான். கடைசியாக கிருஷ்ணா ஆற்றோரமிருந்த கொப்பம் என்ற இடத்தில் யுத்தத்தில் மாண்டான். இவனுக்குபின் ராஜேந்திர தேவன் 1050 முதல் 1062-ம் வருஷம் மட்டும் ஆண்டான். இவன் அரசாண்ட காலத்தில் விசேஷம் ஒன்றும் இல்லை. இவனுக்குப்பின் வீர ராஜேந்திரன் பட்டத்துக்கு வந்தான். (கி. பி. 1062 — 1070).

### வீர ராஜேந்திரன் 1062 — 1070.

இவன் மேல் சாளுக்கிய அரசனாகிய 6-வது விக்கிரமாதித்தனுடன் போர் புரிந்து வெற்றி பெற்றான். தோல்வி அடைந்த சேனைகளை துங்கபத்திரா நதிமட்டும் விரட்டினான். கேரள பாண்டிய அரசர்களோடும் சண்டை செய்தான். 1070 வருஷத்தில் மரணமானான். இதற்கு பின் சோழ வம்சத்தில் சிங்காசனத்துக்கு உரிமையுள்ள ராஜமக்கள் ஒருவருமில்லை. முதலாவது ராஜேந்திர சோழன் மகளை கீழ் சாளுக்கிய அரசனுக்கு கலியாணம் செய்து கொடுத்திருந்தான். ராஜேந்திர சோழனுடைய பேரன் குலோத்துங்கன் பட்டத்

திற்கு வந்தான். இப்படியாக விஜயாலயன் வம்சம் முடிந்தது. இக்காலத்தின் சோழ நாட்டின் விஸ்தீரணம் ————.

தற்காலத்தில் சென்னை ராஜதானி முழுதும், இலங்கையின் ஒரு பாகம், மைசூரில் ஒருபாகம், புதுக்கோட்டை, கொச்சி, திருவாங்கூர், இவைகளெல்லாம் சோழ மன்னன் ஆதீனத்துக்குள் இருந்தன. இதுவுமல்லாமல் வங்காளம், மத்திய மாகாணம், முதலியவைகள் சோழனுக்குக் கப்பம் கட்டி வந்தார்கள். இரண்டு வகையினுலே சோழ ராஜ்ஜியத்தை பரவச் செய்தார்கள். ஒன்று யுத்தத்தினுலே இரண்டாவது அரசியல் சாமர்த்தியத்தினுலே.

ஜெயிக்கப்பட்ட நாடுகளின்மேல் அரசனுக்கு சொந்தமானவர்களை ராஜப்பிரதிநிதியாக ஏற்படுத்தினுன். மூன்ருவது சீர்திருத்தங்கள் செய்தார்கள். பலவித அரசியல் ஒழுங்குகள் செய்தார்கள். ஆனுலும் இவ்வித அரசியல் சாமர்த்தியங்களெல்லாம் காட்டப்பட்டிருந்தும் விஜயாலயன் வம்சத்துக்கு சரியான ஆள் இல்லாததினுலும், உள் பிரிவினைகள் பொருமை கலகங்களினுலும், சோழ ஏகாதிபத்தியம் முடிவுக்கு வந்தது.

தேன் நாட்டில் பொது அரசியல்.

ஒவ்வொரு நாட்டையும் மண்டலமாக பிரித்திருந்தார்கள். இந்த மண்டலங்களை வள்ளநாடு அல்லது கோட்டங்கள் (ஜில்லாக்கள்) என்று பிரித்திருந்தார்கள்.

வள்ளநாடுகளை நாடு என்று (அதாவது தாலுகா) என்று பிரித்திருந்தார்கள். இதற்கு பிறகு பல கிராமங்கள் சேர்த்து சதுர்வேதி மங்கலம் என்று பிரித்திருந்தார்கள்.

அரசன்தான் எல்லாவற்றிற்கும் தலைவன். அரசன் சொன்னபடிதான் எல்லாம் நடக்கும். இவனுக்கு கீழ் இருந்த அதிகாரிகளுக்கு தங்களுக்கு குறிக்கப்பட்ட வேலைகளுக்கு சுயாதீனம் கொடுத்திருந்தான். இவர்களுக்கு மன்னன்மேல் மிகுந்த விசுவாசம் உண்டு. அரசியலை சேர்ந்த காரியத்தையும் மன்னன் உற்று கவனித்து வந்தான். ஆனால் விசேஷமாக சானுவம், அந்நியநாடு சம்பந்தம், இந்த இரண்டு விஷயத்திலும் அரசன் விசேஷித்த சிரத்தை எடுத்து வந்தான். இவனுக்கு கீழ் ஐந்து மகா ஆலோசனை சபைகள் இருந்தன. (1) மகா ஜனம், (2) குருக்கள், (3) வைத்தியர்கள், (4) ஜோஷியர்கள், (5) மந்திரிகள் சபை.

## அத்தியாயம் 7.

## பாண்டிய நாடு.

---

பாண்டியநாடு என்றால் எது?

வடக்கே திருச்சிராப்பள்ளி முதல் தெற்கே கன்னியா குமரிமட்டும், கிழக்கே வங்காளக் குடாக்கடலிலிருந்து மேற்கே தென் திருவாங்கூர் வரைக்கும் பரவி இருந்தது.

தென் திருவாங்கூருக்கு தென் பாண்டி என்று பெயர். வடமொழி அபிமானமுள்ளவர்கள், பாண்டிய என்பது பாண்டுஅரசனின் வம்சம் என்று அர்த்தம் சொல்வர். ஆனால் ஆரியர்களுக்கும், தமிழ் மக்களுக்கும் அவ்வளவு பூர்வீகத் தொடர்பு இல்லை என்று வலியுறுத்தும் தமிழர்

பாண்டிய என்பது பண்டை (பழமை) என்று அர்த்தம் கொண்டது என்பர். தமிழ் மக்கள் தமிழ் நாட்டின் பூர்வீகக் குடிகள் என்றே சொல்லவேண்டும்.

பாண்டிய நாட்டின் சரித்திரத்துக்கு ஆதாரம் என்ன ?

1. கல் வெட்டு சாசனங்கள். இவற்றில் முக்கிய மானவை, ஐவர்மலை, ஆனைமலை இந்த இரண்டு மலைகளில் கண்டுபிடிக்கப்பட்டவை.

2. செம்பு சாசனங்கள்.

3. தமிழ் இலக்கியம்.

4. இலங்கை சரித்திரமாகிய மகாவம்சா.

5. சோழ ராஜாக்களின் சாசனங்கள். விசேஷமாக முதலாவது பாரந்தகன், சோழ மன்னர்களில் மூன்றாவது குலோத்துங்க சோழன் மட்டும் இந்த மாதிரியான கல்வெட்டுகள் இருக்கின்றன.

6. பூர்வ தமிழ் மக்களைப் பற்றி விசெஷமாக எழுதி யுள்ள பெரியார்கள் சிலரின் பெயர்களாவன:

(1) கனகசபாபதி பிள்ளை இவருடைய நூலில் 1800-வருஷத்துக்குமுன் இருந்த தமிழ் மக்களை பற்றி எழுதியிருக்கிறார்.

(2) சுவாமிக்கண்ணு பிள்ளை நூல்கள் எழுதி இருக்கிறார். ஞானப்பிரகாச சுவாமியார், பி. டி. சீனிவாச ஐயங்கார், கந்தையா பிள்ளை முதலிய பலர்.

7. இராமாயணம்:—கிஷ்கண்ட காண்டத்தில் தமிழ் சங்கத்தில் பேர் பெற்ற கபாடபுரத்தைப் பற்றி ஒரு குறிப்பு இருக்கிறது.

8. கௌடில்யர் எழுதிய அர்த்த சாஸ்திரத்தில் தென் நாட்டு பாண்டியர்களைப் பற்றியும் கூறியிருக்கிறார். பாண்டிய கவாடகம் என்ற முத்தும், மதுரம் என்ற ஒருவித பஞ்சு ஆடையும் இந்நூலில் குறிப்பிடப்பட்டு இருக்கின்றன.

9. மகாவம்சா என்ற இலங்கை சரித்திரம்.

சேர, சோழ, பாண்டிய இந்த மூன்று சகோதரர்கள் கொற்கையில் முக்காணி என்ற நிலத்தை பொதுவாய் அனுபவித்தார்களாம். பின்காலத்தில் பிரிந்து மூன்று ராஜ்ஜியங்கள் ஆய்விட்டதாம்.

10. அசோக மன்னனின் கல் வெட்டுகள் :—

இவர் காலத்திற்குபின் மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் பௌத்தமதம் பரவியிருந்ததால் புத்த சந்நியாசிகள் வசித்திருந்த மலைக்குகைகளும், படுக்கைகளும் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. இக்கல்வெட்டுகளின் மூலமாய் கி. மு. 2-ம் அல்லது 3-ம் நூற்றாண்டிலேயே பாண்டிய நாட்டார் எழுத்தறிவு நாகரீகமுள்ளவர்கள் என்று அறியலாம். இச் சின்னங்களின் மூலமாக பௌத்த சமயத்தவர்கள் தென் இந்தியாவில் இருந்தார்களென்றும் அறிகிறோம். பௌத்தர் முன்னே, சமணர் (மகாவீரர் என்பவரின் சிஷர்) தமிழ் நாட்டில் இருந்தார்கள். தமிழ் பாஷை முன்னேற்றத்தில் சமணர் வெகு ஊக்கமுடையவர்.

## தமிழ் மக்களுக்கும், ஆரிய மக்களுக்கும் வித்தியாசம்.

தமிழர் இருக்கிற காரியத்தை இருக்கிறபடியே எடுத்துக்கொண்டு செயற்கையை உறுதிப் படுத்துகிறவர்கள், ஆனால் ஆரியரோ தத்வ ஞானத்தைப் பாராட்டுபவர்கள்.

தமிழ் மக்கள் பூர்வீக நாகரீகமுள்ளவர்கள். பின் காலத்தில் ஆரியர்களோடு கலந்தபோது ஒருவர் இன்னொருவரை பல விஷயத்தில் வசப்படுத்தினதுண்டு. தமிழ் எழுத்து பூர்வீகமானது. வடநாடுகளைப் பார்க்கிலும் பாண்டிய நாடு மேல்தேசங்களோடு மிகப்பூர்வீக சம்பந்தமுள்ளது. எகிப்து, பாரசீகம், முதலிய தேசங்களோடு தென் நாட்டுக்கு பூர்வீக சம்பந்தம் இருந்தது.

தமிழ் பாஷையும் இத்தேச பாஷைகளோடு கலந்து கொண்டதுண்டு.

இலங்கை அரசன் பாண்டிய அரசனின் மகளை விவாகம் செய்திருந்தான். கிரேக்க தேசத்தோடு (யவ்வனர் நாடு) பாண்டிய நாட்டுக்கும் பூர்வீக சம்பந்தம் இருந்தது. கி. மு. 300 வருஷத்துக்கு முன்னிருந்த மெகஸ்தினீஸ் பாண்டிய நாட்டைப் பற்றி எழுதி இருக்கிறார். பாண்டிய ராஜ்ஜியத்தை பெண்கள் ஆண்டதாகக் கூறுகிறார். இக் காலத்தில் (கிறிஸ்து சதாப்தத்திற்கும் அதற்கு முன்னும்) பாண்டிய தமிழ் மக்கள் புத்தமதத்தைத் தழுவி இருந்தார்கள். இதை ரூபகப்படுத்தும் பல குகைகள் இருக்கின்றன. இக் குகைகளுக்குள் கல்லில் வெட்டப்பட்ட படுக்கைகள் இருக்கின்றன. கி. மு. 200 போல் ஏராளமான புத்தர்கள் தமிழ் நாட்டில் இருந்தார்கள்.

## பாண்டிய மன்னர்களின் வம்ச வரலாறு.

பண்டைய காலத்து பாண்டிய மன்னர்களின் வரலாறுகளை ஆராய்ச்சி செய்து திட்டவட்டமாக வரையறுப்பதில் மிகுந்த கஷ்டம் உண்டு. பழைய காலத்து நூற்கள் பனை ஓலை ஏடுகளில் எழுதப்பட்டிருந்தன. இவைகள் அடிக்கடி பூச்சிக்கும், நெருப்புக்கும் இறையாகும்—உதாரணம் தென் காசி பின் காலத்தில் பாண்டிய மன்னர்களின் பிரதான நகரமாக இருந்தது. இங்கு 1420-லிருந்து 1462 மட்டும் அரசாண்ட அரிகேசரி பாண்டியன் ஒரு பெரிய ஆலயம் கட்டுவித்தான். இக்கோயிலின் கோபுர அறைகளில் ஏராளமான பனை ஓலை ஏடுகள் வைக்கப்பட்டிருந்தன. பின் காலத்தில் இவை நெருப்புக்கு இரையாகி கோபுரமும் இரண்டாய் பிளந்து விட்டது. பின் காலத்து யுத்தங்கள் அழிச்சாட்டங்களிலும் பழைய காலத்து நூற்கள் அழிக்கப்பட்டன. ஆதிகாலச் சோழ மன்னர்களைக் குறித்து சரித்திர திட்டவட்டமாக அறிவது எவ்வளவு கஷ்டமோ அப்படியே பண்டை பாண்டிய சரித்திரத்திலும் இருக்கிறது. மேலும் பல பாண்டிய மன்னர்களுக்கு அடிக்கடி ஒரே பேர் வழங்கிவந்ததால் இன்னாரென்று பிரித்தெழுதுவதில் குழப்பம் உண்டாகிறது.

இந்திய சரித்திரம் எழுதுவதில் எல்லாருக்கும் ஒரு பொதுவான சிரமம் உண்டு. மூல நூற்கள் அநேகமாக அந்நியர் கைவசமாயின. மகம்மதியர், அதற்குபின் ஐரோப்பியர் இப்பேர்பட்ட அன்னிய அதிகாரிகளுக்கு

இந்துக்களின் பூர்வீக சரித்திரத்தை குறித்து ஆர்வம் அபிமானத்தோடு ஆராய்ச்சி செய்து எழுதுவதற்கு அவ்வளவு இயற்கையான அக்கறை வராது. சிலர் ஐரோப்பியர் எழுதி இருக்கிறார்கள் என்பது உண்மையே. என்றாலும் இக்காலத்தில் ஏற்பட்ட தங்கள் அரசாட்சியை, முன் காலத்து இந்து அரசாட்சிகளுக்கு ஒப்பிட்டு தங்கள் அரசாட்சியே மேன்மை என்று காட்டவேண்டுமென்றே ஆசையோடு அவர்கள் இந்திய சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபடுவதும் இயற்கை தானன்றோ! மேலும் பண்டைய நூற்களும் அவர்கள் வசமே இருந்தன. தற்காலத்தில் பல தமிழ் மக்கள் அக்கறையுடனே எழும்பி ஆராய்ச்சி செய்து நூற்கள் எழுதத் தொடங்கியிருக்கிறார்கள். இது புகழப்படத்தக்கதே.

பழைய காலத்து பாண்டிய மன்னர்களில் விசேஷித்தவன் நெடுஞ்செழியன் என்ற மன்னன். இவன் காலத்து சோழன் கரிகாலன். இலங்கையில் கயவாகு மன்னன் ஆண்டுவந்தான். சேரன் மன்னன் பெயர் சேரன் செங்குட்டுவன். ஆனால் இம்மூவரும் ஒரேகாலத்தில் ஆண்டார்கள் என்று உறுதியாய் சொல்லமுடியாது. ஆதிகாலத்து பாண்டிய வம்ச வரலாற்றை சில சாசனங்களின் மூலமாக ஆராய்ச்சியாளர் தொடர்ச்சியாக சேர்த்திருக்கிறார்கள். இரண்டு வகையான சாசனங்கள் உண்டு. சின்னமானூர் செம்பு சாசனம், ஜதில வர்மன் சென்னை பொருள் காட்சிசாலை தகடு சாசனங்கள். இரண்டாவது நெடுஞ்சடையனின் வேள்விக்குடி நன்கொடை சாசனம். இவையல்லாமல் ஆதி தமிழ்

நூற்களில் கூறப்பட்டிருக்கிற பாண்டிய மன்னர்களின் பெயர்களும் உண்டு. இவை சில செம்பு சாசனங்களிலும் பூர்வீகமானவை. மதுரைக் காஞ்சி எழுதிய மாங்குடி மருதனார் கூறும் பாண்டியர்களுண்டு.

1. பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி.
2. வடிபாலம்ப நின்ற பாண்டியன்.

இவர்கள் நெடுஞ்செழியன் முன்னோர்கள் என்று கூறப் பட்டிருக்கிறார்கள். புறநானூறும் பாண்டிய மன்னர்களைப் பற்றிக் கூறுகிறது. புறநானூறு எழுதினவர் பெயர் முதூர்த் தமார் கண்ணையா. புறநானூறில் முதுகுடுமி பெருவழுதியின் மகிமையைப் பற்றி பாடியிருக்கிறது. பல யாகம் செய்ததினால் இவனுக்கு பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி என்று பெயர். இன்னொரு மன்னன் பெயர் கடுங்கோன். இவன் காலம்தான் தமிழ்ச் சங்கத்தின் கடைசி காலம் என்று சொல்லவேண்டும். இவன் காலம் உத்தேசம் (கி. பி. 560-590) என்று எண்ணப்படுகிறது. இவன் பின் வந்தவருக்குள் சரித்திரம் கூறுகிற மன்னன் செழியன் சேந்தன். சிலர் தலையாலங்காலத்து நெடுஞ் செழியன் இவன்தான் என்று எண்ணுகிறார்கள். சேர, சோழ மன்னர்களின்மேல் வெற்றி பெற்றான். இவனைப் பற்றி புறநானூறில் மகிமையாக கூறப் பட்டிருக்கிறது. நெடுஞ் செழியன் காலத்தில் சேர, சோழ, பாண்டிய இம்மூன்று நாடுகளின் பெரும் பாகங்களும் இவன் அதிகாரத்துக்கு கீழே ஒரே இராஜ்ஜியமாக இருந்தது. சோழ மன்னர்களை தெலுங்கு நாட்டிற்கு விரட்டி விட்டான்.

இக்காலத்தில் இந்தியாவுக்கு வந்த சீன யாத்திரிகனுகிய ஹயுந்தசிங் எழுதிவைத்திருப்பதும், இதற்கு ஆதாரமாக இருக்கிறது. இந்தகாலத்தில் பாண்டியருக்கு சத்துருக்கள் பல்லவர்களே. இதனுல் பாண்டிய மன்னர்கள் சேம்பையன் சோழன் என்ற மருபெயரும் தரித்துக் கொண்டார்கள். தென் பாகங்களெல்லாம் பாண்டியன் வசமே இருந்தன. கொஞ்சம் குறைய எட்டு தலைமுறைகள் ஆண்டு வந்தார்கள். தமிழ் நாட்டில் தமிழர்களின் அரசியல் மேன்மை சில காலங்களில் சிறந்து மேன்மை பெற்று மகிமையாக பரவியிருந்ததும், ஏனைய காலங்களில் கீழாகி அழிந்ததற்கு சில முக்கிய காரணங்கள் உண்டு. ராஜ்ஜியம் பெருகும்போது ஒன்றை ஒன்று எதிர்த்து பிரிவினை உண்டாக்கும் பல காரியங்கள் எழும்புவது வழக்கம். பலவித காரியங்களிலுள்ள ஜனங்களை ஒரே அரசாட்சியின் கீழ் கொண்டுவரும்போது அரசியல் முறைமை, நீதி, ராஜ தந்திரம் முதலிய விஷயங்களை குறித்து பற்பல தாற்பரியங்கள் உண்டாகும். இதனுல் மற்றவர்களைத் தங்களுக்குக் கீழ்படுத்தும் அதிகாரிகள் தாங்கள் முன்னே குறுகிய தொகையான ஜனங்களை ஆளும்படியாகக் கொண்ட அரசியல் முறைகளை மாற்றுமல் பழையபடியே இந்த பெருந் தொகை ஜனங்களையும் அம்முறைப்படியே ஆள முயன்ருல் அது சரிவாது. புது சந்தர்ப்பங்களுக்கும், புது காரியங்களுக்கும் ஏற்றபடி அதிகாரிகளும் தங்கள் முறைகளை சாமர்த்தியமானபடி மாற்றிக் கொள்ளவேண்டும். சமுதாய கட்டுப்பாடுகளும் அவ்வவ்வேளைக் கேற்றபடி ஏற்படுத்தப்பட்டு, சமயத்துக்கு வேண்டிய புதிய விதிகளும், புதிய ஆலோசனை

களும், முறைமைகளும் ஏற்படவேண்டும். இப்படி ஞானமாய் நடந்து கொள்ளாவிட்டால் குடிகளுக்குள் கலகம் உண்டாகி அரசாங்கம் விழுந்துபோம். உள்நாட்டுப் பிரிவு களும் அரசியல் அரிபிளவைபோல் நின்று சத்துரு புகுந்து ஜெயிக்க இடங் கொடுக்கும்.

(1) சங்க கால நூற்கள் : (இவை காலம் கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகள்.)

(2) அந்நிய நாட்டார் எழுதிவைத்தவர்கள்—கிரேக்கர் (யவ்வனர்), ரோமர், சீனயாத்திரிகர். இதனால் தென்னாட்டு மக்கள் வியாபாரத்தில் சிறந்தவர்களும், துறைமுகங்கள் கப்பல்கள் உடையவர்களுமாயிருந்தார்கள். முசுரி, கொற்கை, தொண்டி என்ற துறைமுகங்கள் உண்டு. இதிலிருந்து மிளகு, மது, பட்டாடை முதலியவைகள் ஏற்றுமதியாயின.

இலங்கை அரசன் கயவாகு, சேர மன்னன் நெடுஞ் செழியன், சோழன் கரிகாலன், இந்த நான்கு மன்னர்களையும் ஒன்றாய் சேர்ப்பது சரித்திர வழக்கம்.

சேரன் செங்குட்டுவன் பத்தினி கடவுளுக்கு பூசை செய்தபோது கயவாகு மன்னன் வந்திருந்ததாக சொல்லப் படுகிறது.

பாட்டு :—

அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரும்
பெருஞ்சிறை கோட்டம் பிரிந்த மன்னரும்
குடகக் கொங்கரு மாளவ வேந்தரும்
கடல்சூழ் இலங்கை கயவாகு வேந்தனும்.



தஞ்சாவூர் பிரஹதீஸ்வரன் கோயில், கர்ப்பக் கிரகத்திற்கெதிரிலுள்ள நந்தி அல்லது ரிஷப மண்டபம். உச்சியில் கிண்ணம்போன்ற முடியுள்ள கோபுரம், பல்லவ சிற்ப சாஸ்திர முறையைத் தழுவியது. உச்சியில் சதுரமான பெருங்கல் ஒன்று கிண்ணத்திற்கு மேலிருக்கின்றது. கி.பி. 985ல் பட்டத்திற்கு வந்த ராஜ ராஜ சோழ மன்னன் கட்டுவித்தது. சென்னை ராஜதானி முழுவதும் மைசூர், இலங்கை இவைகளில் பாகங்களும் இந்த மன்னன் ஆண்டான். கப்பல் படை கீர்த்தி பெற்ற இவன் மகன் ராஜேந்திரன் பர்மாவின் ஓர் பாகத்தையும் தன் ஆட்சிக்குள் கொண்டுவந்தான்.

எந்நாட்டங் கண்யிமய வரம்பனி
நன்னுட்டம் நாளனி வேள் வியில்
வந்தீ என்றே வழங்கினர் வேண்டத்
தந்தேன் வரமென்ற றெழுந்தது ஒருகுரல்.

சிலப்பதிகாரம்.

அகஸ்துராயன் காலத்தில் பாண்டிய நாட்டிலிருந்து அவரிடம் தூதர்கள் சென்றூர்கள்.

ஸ்ட்ராபோ என்பவர் 120 கப்பல்கள் சமுத்திரத்தை கடந்து இந்தியாவுக்கு வந்ததாக கூறுகிறூர். முசரியில் ரோமர் தங்கியிருந்தார்கள். கி. மு. 29ம் நூற்றூண்டிலிருந்து கி. பி. 2ம் நூற்றூண்டு மட்டும் உள்ள ரோம நாணயங்கள் தென் இந்தியாவில் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன.

பல்யாகசாலை காலத்துக்குப்பின் சிலகாலம் கர்னுடகத்தாரகிய களப்பிரர் அல்லது கன்னடத்தார் தமிழ் நாட்டை வசப்படுத்தி ஆண்டதாகத் தெரிகிறது. இவர்கள் சமண மதத்தார். இக்காலத்துப் பாண்டியன் சிம்மளமோ (இலங்கை) அல்லது வேருெரு தீவிலோ ஒளித்திருந்தான். இவன் பேர் கடுங்கோன். இவன் சேனையைத் திரட்டிக் கொண்டு வந்து களப்பிரரை முறியடித்து விரட்டி விட்டான். இவன் காலம் கி. பி. 560 முதல் 590 மட்டும். இவனுக்குப்பின் இவன் மகன் அவனி சுடாமணி 590 முதல் 620 மட்டும் நாட்டை சமாதானத்தோடு ஆண்டு வந்தார்.

தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியன் (620–650)

இவன் இளம் வயதிலேயே சிங்காசனம் ஏறினன். சேரனும், சோழனும் ஒன்றுகூடி இவனேடு போர் புரிய

வந்தார்கள். தலையாலங்காடு என்ற இடத்தில் யுத்தம் நடந்தது. இவன் காலத்தில் தமிழ் பாஷை உன்னத நிலைமையில் இருந்தது.

## மாறவர்மன் கூன் பாண்டியன் (கி. பி. 650—680)

இவன் 63 நாயன்மாரில் ஒருவன். நின்றசீர் நெடுமாற நாயனார் என்று இன்னொரு பெயரும் உண்டு. இவனுக்கு ஒரு அந்தரங்கமந்திரி குலச்சிறையார். மதுரையைச்சுற்றி மூன்று கோட்டையை கட்டினான். காவல் படைகளை ஏற்படுத்தினான். வடதிசை சென்று சோழ மன்னன் பிரதம நகராகிய காவிரிப் பூம் பட்டணத்தை முற்றுகையிட்டு வெற்றி கொண்டான். சோழன் மகளாகிய மங்கையர்க்கரசியை மணம் புரிந்தான். இவளுக்கு பாண்டிமா தேவி என்ற பட்டப் பெயரும் உண்டு. பல இடங்களையும் தன் ஆதினத்துக்குள் கொண்டு வந்து ஆங்காங்கு பாண்டியக் கொடியாகிய மீன் கொடி பறக்கச் செய்தான். சேர நாட்டு சிற்றரசனையும் விழிஞம் போரில் ஜெயித்தான். இந்த மன்னனுக்கு ஒரு வியாதி வந்தது. அதனால் குறுக்கு வளைந்து கூனனானான். இக்காலத்தில் காஞ்சி, ஆனைமலை முதலிய இடங்களிலிருந்து வந்த சமணமுனிவர்கள் மன்னன் சமணமதத்தைத் தழுவினால் இந்தவியாதி போய் விடுமென்று போதித்தார்கள். அப்படியே சமணன் ஆனான். சிவன் கோயிலெல்லாம் அடைபட்டன. பறிதலையும், பாயுடையும், மாசுடம்பும், மயில் தோகையும் உடைய சமணர் கூட்டம் நிறைந்திருந்தது. மன்னன் மனைவி மங்கையர்க் கரசியரும் அமைச்சரும் மிகவும் திகைத்தார்கள். இக்காலத்

தில் சீர்காழியில் இருந்த திருஞான சம்பந்தர் என்னும் சிவ பக்தர் சிவஸ்தலங்கள் தோறும் சென்று சமணர்களை அடக்கி சைவமதத்தை நாட்டி வந்தார். மங்கையர்க்கரசி சம்பந்தரிடம் சென்று வணங்கிக் கேட்டுக்கொண்டபடி அவர் மதுரை வந்தார். இவருடைய சக்தியினால் மன்னன் திரும்பவும் குணமானான். கூன் நிமிர்ந்ததினால் இவனுக்கு நின்ற சீர்நெடு மாறன் என்ற பெயர் வந்தது. தமிழ் பாஷையை மிகவும் ஆதரித்தவன். இவனை நாயன்மாரில் ஒருவனாக பிரதிஷ்டித்து திருநெல்வேலியில் மேலரத வீதியில் ஒரு கோவில் நிறுவித்த தாக நெல்லையப்பர் கோயில் சிலாசாசனம் கூறுகிறது. இவன் காலம் கி. பி. (650—680.)

பாட்டு:—

செய்யனே திருஆலவாய் மேவிய ஐயனே
அஞ்ச லென்றருள் செய் எனை
பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்
பையவே சென்று பாண்டியர்க் காகவே.

## பாண்டியன் கோற்சடையன் இரணதீரன் (கி. பி. 680–710.)

தன் தந்தை ஜெயிக்காத நாடுகளை தான் ஜெயிக்க வேண்டுமென்று ஆசை கொண்டான். சேர நாட்டு கடற் கரையோரத்திலுள்ள சிறியமன்னர்களை வென்றான். இதற்குப் பின் கொங்கு நாட்டையும் வென்றான். இவ்வரசன் பின் காலத்தில் பஞ்சம் உண்டானதினால் பொக்கிஷம் குறைந்து கஷ்டப்பட்டான்.

## அரிகேசரி, பராங்குசன், மாறவர்மன் அல்லது முதல் ராஜசிம்மன் (கி. பி. 710—740.)

இவன் கோட்டையாகிய மதுரை கோட்டையை பலமாக்கினன். இதை பாதுகாக்க ஒரு பெருஞ்சேனையை ஏற்படுத்தினன். இதற்கு பின் காவிரி ஆற்றை கடந்து கங்க அரசர்களோடு போராடி வெற்றி சிறந்தான். இவர்களைத் தன் கைக்குள் குறுநில மன்னர்களாக ஆக்கினன். கடைசியாக பல்லவர்களோடு போராடி வெற்றி பெற்ருன். இவன் திரும்பும்போது மாளவ தேசத்து மகளாகிய மாளவி தேவியை மணம் புரிந்தான். ஜெய பேரிகை முழங்க மதுரை வந்து சேர்ந்தான். இவன் சிவ பக்தன். அநேக சிவ ஆலயங்களைக் கட்டினவன். எந்தக் காரியத்தையும் யோசித்தே தொடங்குவான். தொடங்கிய பின் எந்த இடையூறு வந்தாலும் பின்னடையாது விடாமுயற்சியோடு செய்து முடிப்பான். இவன் காலத்தில் காடுகள் செழிப்புற்றன.

## பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகன் (கி. பி. 740–770.)

இவன் ராஜசிம்மன் மகன். இவன் பட்டத்துக்கு வந்து இரண்டு மூன்று வருஷங்கள் ஆனபின் கொங்கு நாட்டு மன்னனேடு போர் புரிய தீர்மானித்தான். இதற்கென்று பெரிய படையைத் திரட்டினன். போர் முறைகளை நன்ருய்க் கற்றுக் கொள்ளும்படி மதுர கவிராயரை முதல் மந்திரியாகத் தெரிந்து கொண்டான். மதுர கவிராயர் 4000 பிரபந்தத்துக்குள் "கண்ணிநுண்" என்னும் ஒரு பிரபந்தத்தைப் பாடின பண்டித சிரோமணி. இவர் பாண்டிய மன்னனுக்கு

பிரதம மந்திரியாயிருந்து ராஜ தந்திரத்தில் சிறந்தவனுமாய் இருந்தார். இத்தலைவர் ஆயத்தம் செய்த சேனையோடு சென்று கொங்கு நாட்டு மன்னனுடன் போர் புரிந்தான். காவிரி ஆற்றின் சமீபமாகச் சென்று கொங்கு நாட்டு மன்னனாகிய அதிகமானுடனும் இவனுடன் சேர்ந்த பல்லவ கோளரோடும் போர் புரிந்தான். இவன் வெற்றி சிறந்து அந்த நாடுகளை இவன் ஆதீனத்துக்குள் கொண்டுவந்தான். அரசன் மதுரகவி ராயருக்கு நன்கு பரிசளித்தான். மதுர கவிராயர் இதைக் கொண்டு பேரூர் என்ற இடத்தில் பல விஷ்ணு ஆலயங்கள் கட்டினார். கோள நாட்டிற்குச் சென்று வில்லினம் என்ற துறைமுகத்தில் கோள மன்னனின் மேலும் வெற்றிசிறந்தான். பின் காலத்தில் மதுர கவிராயர் மன்னனுக்கு அமைச்சராகி தமது சொந்த ஊராகிய காவந்தபுரம் அல்லது திருக்கோடு என்ற மேல்பாகங்களிலுள்ள ஆழ்வார் திருநகரி நம்மாழ் வாரிடம் சென்று அவருடைய சிஷ்யரானார். இவர்மேல் ஒரு பதிகமும் பாடினார். மதுர கவிராயருக்கு மதுர கவி ஆழ்வார் என்றும் பெயர். இவர் மரணத்துக்குப் பின் பாண்டியனுக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. இந்தக் காலத்தில் பாண்டிய நாடு மிகுந்த செழிப்புற்றிருந்தது. நெடுஞ்சடையன், பராந்தகன் சிவ மதத்தன். இந்த மன்னன்தான் வேள்விக்குடி செப்பேட்டை வரைவித்தவன்.

## 2-வது ராஜசிம்மன் (கி. பி. 770—785.)

இவன் காலம் தமிழ் நாட்டிற்கு நல்லகாலமல்ல. ஏனெனில் இவன் சோம்பேறியோ, துன்மார்க்கனோ அல்லது

நோயாளியோ காரணம் தெரியவில்லை. இவன் ஆளுகை பாண்டிய நாட்டிற்கு நன்மையாக இருக்கவில்லை. தனது மூதாதைகள் சேர்த்த நாடுகள் பலவற்றை இழந்தான். பாண்டிய நாட்டு சத்துருக்கள் இவன் காலத்தில் தாங்களே ஒருவரோடொருவர் போராடிக் கொண்டிருந்ததினால்தான் இவன் தன் ராஜ்ஜியத்தை இழக்கவில்லை. இவன் மகன் வாகுணன் சிறுவயதாயிருக்கும்போதே தகப்பன் இறந்து விட்டான்.

பாண்டியன் வாகுண மகாராஜன் (கி. பி. 810—835.)

இவன் தன் தகப்பனுக்கு நேர் எதிரிடையான சிறந்த குணமுடையவனாய் இருந்தான். இவனைப் பற்றிய சிலா சாஸனங்கள் அம்பா சமுத்திரம், திருச்செந்தூர், திருச்சிராப் பள்ளி முதலிய இடங்களில் காணலாம். இவன் காலமும் சோழன் விஜயாலயன் காலமும் ஒரே காலம் என்றுதான் யூகிக்கப்படுகிறது. இந்த விஜயாலயன் தன் சோழவம்சத்திற்கு பின்காலத்தில் முதன்மையானவனாக விளங்கினவன். ராஜ சிம்மன் காலத்தில் பாண்டிய நாட்டின் பலவீனத்தை அறிந்து விஜயாலயன் எழும்பி சோழ நாட்டிலும், தொண்டை நாட்டிலும் சில பாகங்களை தனக்குரிமையாக்கிக்கொண்டான். வாகுண மகாராஜன் சிங்காசனம் ஏறியபின் படைகளைத்திரட்டி தன் ராஜ்ஜியத்தை பலப்படுத்த ஆரம்பித்தான். இவன் பெரிய சிவபக்தன். முதலாவது திருச்செந்தூர் சென்றான். இதைக்குறித்து இங்குள்ள கோயிலில் இவனைப்பற்றி சிலா சாஸனம் இருக்கிறது. அப்பாகங்களிலுள்ள சிற்றரசர்கள்

இவனுக்கடங்கி கப்பம் கட்டினார்கள். கப்பமாக வந்த பொற் காசுகளை அங்குள்ள ஆலயங்களுக்கு கொடுத்துவிட்டான்.

வரகுண ராஜன் காலத்தில் உள்ள நாணயம்.

| | | |
|---|---|---|
| பத்து துட்டு கொண்டது | | 1 பணம். |
| 4 தம்பிடி | ,, | 1 துட்டு |
| பத்து பணம் | ,, | 1 பொன் |
| பத்து பொன் | ,, | 1 காசு |

1 தங்கக் காசு = ரூ. 20—13—4.

நாணயவரிகள் தசாம்சமாகவே இருந்தது.

முகத்தல் அளவை.

கலம், மரக்கால், நாழி, உழக்கு, ஆழாக்கு,

செவிட்டு = சோடு.

தூக்கல் அளவை.

துலாம், பலம்.

வாகுணன் காலத்தில் தானிய விளைவு வளமாயிருந்து பணப்பழக்கம் சுருக்கம்தான். கடன் வாங்குபவர் வட்டியாகக் கொடுப்பது நெல்.

நிறைகுறைய பழங்காசு ஒன்றுக்கு வருஷத்துக்கு வட்டி 2 கலம் நெல் என்று சாசனம் கூறுகிறது. குடிகள் தாம் வளங்கும் உணவுப் பொருள்களுக்கு பதிலாக நெல்லையே ஈடாக அளந்தார்கள். ஒரு நாழி பசு நெய்க்கு 20 நாழி நெல், ஒரு பலம் சர்க்கரைக்கு நாழி உரி நெல் (1½ படி).

ஒரு நாழி பயிற்றம் பருப்புக்கு 3 நாழி நெல். ஒரு நாழித் தயிருக்கு 3 நாழி நெல். இரண்டு வாழைப் பழத்துக்கு

2 நாழி நெல். இதனால் இவன் காலத்தில் விளையும் நிலங்கள் வரும்படிக்கு சிறந்த நிலங்கள் என்று எண்ணலாம்.

கோவில் அர்ச்சகர்களுக்கு மானிய நிலங்களை மாத சம்பளமாக கொடுத்தார்கள். இவர் காலத்தில்தான் மாணிக்க வாசகர் வாழ்ந்தகாலம் என்று கூறுகிறார்கள். சுந்தரமூர்த்தி நாயனர், சேரமான் பெருமாள் நாயனர் இதன் காலமே என்று கூறுகிறார்கள்.

இதன் பின் வ ர கு ண ன் நாஞ்சி நாடு சென்றான். இதன் பின் இவன் சோநாட்டிலிருந்து பல்லவ நாட்டிற்குள் புகுந்தான். இக்நாட்டை தன் ஆதீனத்துக்குள் கீழ் படுத்தினான். தன் நாடு திரும்பும் வழியில் திருப்புறம்பியம் என்ற இடத்தில் தன்னோடு போர்புரிந்த அபராஜிதனை முறியடித்தான்.

தஞ்சை, திருச்சிராப்பள்ளி, அம்பை முதலிய இடங்களில் சிலாசாசனத்தை நாட்டினன். தன் பிரதம நகராகிய மதுரை சென்று ஆளுகை செலுத்தி வந்தான். இவன் மனைவி ஒரு சோழகுல கன்னிகை. இவன் சிவ பக்தன். சென்ற இடமெல்லாம் கீர்த்தி பெற்றான். இவன் காலத்தில் தமிழ் மேலான பதவி அடைந்தது. இவன் சாசனங்களெல்லாம் இலக்கணம் தவறாததும் வடமொழி சிறிதே கலந்ததுமான நல் நடை வாசகம் பொருந்தியுள்ளது.

## ஸ்ரீ மாறன் (830—862.)

வரகுண மகாராஜனின் மகன். இவன் பாண்டிய நாட்டை நீதியுடன் ஆண்டு வந்தான். இவன் காலத்தில் இலங்

கையில் தனபாலன் என்னும் அரசன் ஆட்சி செய்துவந்தான். மாமூலின்படி இலங்கையில் மன்னனுடைய சகோதரன் மகன் மந்திரியாக இருந்தான். மாமூலுக்கு விரோதமாக இலங்கை அரசன் தன் சகோதரனின் மகன் மகேந்திரனுக்கு மந்திரி பதவி கொடுக்கவில்லை. இதனால் மகேந்திரனும் அவன் சகோதரர்களும் இந்த அரசனுக்கு விரோதமாய் கலகம் செய்தார்கள். அரசனை தேசத்தை விட்டு விரட்டி விட்டார்கள். இவன் பாண்டிய நாடு சென்று ஸ்ரீ மாறன் உதவியை நாடினன். தனபாலன் இறந்து அகபோதி பட்டத்திற்கு வந்தான். அப்படியே ஸ்ரீ மாறன் தன் சேனையை இலங்கைக்கு அனுப்பினன். ஆனால் பாண்டியன் படை தோல்வியுற்றது. படைத் தலைவனும் மகேந்திரனும் யுத்தத்தில் மாண்டார்கள். ஸ்ரீ மாறன் மிகவும் கோபமுண்டு இலங்கையின்மேல் படையெடுத்துச் சென்று மகதகித என்னும் கோட்டையை முற்றுகை போட்டான்.

பாண்டியனுக்கு அனுகூலமாக இலங்கையில் மன்னனாகிய அகபோதியின்மேல் அவன் மந்திரிகளுக்கு அதிருப்தி ஏற்பட்டிருந்தது. இலங்கையில் குடியேறியிருந்த தமிழ் மக்களும் இவனுக்கு அதிக உதவியாயிருந்தார்கள். ஸ்ரீமாறன் போரில் வெற்றி சிறந்தான். அகபோதி தோணியேறி மலேயாவுக்குச் சென்றான். இதன்பின் பாண்டியன் அங்கிருந்த தமிழ்மக்களுக்கு யாழ்ப்பாணம் என்னும் இடத்தில் பல சௌகரியங்களையும் செய்து கொடுத்தான். இது உத்தேசம் கி. பி. 840.

பாண்டியன் இலங்கைக்குப் போயிருக்கும் சமயத்தில் சில கோள சிற்றரசர்கள் விழிஞம் என்ற பட்டணத்தையும், குன்றூர் என்ற குறிஞ்சி நிலத்தையும் கைவசப்படுத்திக் கொண்டார்கள். பாண்டியன் திரும்பவும் அவர்களை அடக்கி தங்கள் நாட்டை மீட்டுக்கொண்டான். இப்படி எங்கும் வெற்றி சிறந்த பாண்டியன்மேல் கங்கர், சோழர், பல்லவர், கலிங்கர் முதலான வேந்தர்கள் பொறாமைகொண்டு, ஒன்றுகூடி பலமான படைகளுடன் கும்பகோணம் என்ற இடத்தில் பாண்டியனோடு யுத்தம் செய்தார்கள். பாண்டியன் இவர்களையும் முறியடித்து பல்லவ பஞ்சனன் என்ற பட்டப் பெயரை வைத்துக்கொண்டான். ஸ்ரீ மாறன் மிக வீரன். குற்றங்களைக்கண்டால் தாட்சிணியமில்லாமல் கண்டிப்பான். தன்னிடம் அடைக்கலம் புகுந்தவர்களுக்கு சகாயம் செய்வான். இவனுக்கு இரண்டு மக்கள். வரகுணவர்மன், பராந்தக வீர நாராயண சடையன் என்று இருந்தார்கள்.

## வரகுணவர்மன் (862—871)

இவனிடத்தில் ஒரு மூடத்தனமான கொள்கை ஒன்று இருந்தது. ஆதாவது எல்லா ராஜ்ஜியங்களையும் தன் ஆதீனத்துக்குள் கொண்டுவரவேண்டும் என்கிற விருப்பம் அதிகமாக இருந்தது. பல்லவர்களோடு போர் புரிய ஆரம்பித்தான். வேம்பில் கோட்டையில் பகைவர் வந்து தங்காதபடி இடித்தான். இதை அறிந்த பல்லவ வேந்தனாகிய அபராஜித்தனும் கங்கை வம்சத்து அரசனாகிய பிரிதிவிபதி என்பவனும் ஒன்று சேர்ந்து சேனைகளுடன் கும்பகோணத்

திற்கு அருகாமையிலுள்ள திருப்புறம்பியம் என்ற இடத்தில் வாகுணனோடு போர்புரிந்தான். பிரிதிவிபதி போரில் இறந்தான். ஆனால் அபராஜித்தன் தொடர்ந்து சென்று பாண்டியனை முறியடித்தான். அப்பக்கத்து பிராந்தியங்கள் அபராஜித்தன் வசமாயின. இதே சமயத்தில் வாகுணனுக்கு போட்டியாக ஒரு போலி பாண்டியன் இலங்கை சென்று அங்கு ஆண்டுக்கொண்டிருந்த இரண்டாவது சேனன் உதவி பெற்று சேனைகளோடு மதுரை வந்து வாகுணனோடு போர் புரிந்தான் வாகுணன் போரில் காயப்பட்டு மரித்தான். மதுரையும் பாழானது. அதிக ஆசை அதிக தரித்திரம் என்பதை வாகுணன் ரூபித்து காட்டினான்.

## வீர நாராயண சடையன் (871—885.)

வாகுணவர்மன் தம்பி வீர நாராயண சடையன் பட்டத்துக்கு வந்தான். இவன்தான் சின்னமனூர் சிறிய செப்பேட்டுச் சாசனமும், சென்னை பொருள் காட்சி சாலை சாசனமும் வரைவித்தான். இவன் பட்டம் பெற்றபின் சோழ அரசனோடு போர் செய்தான். இதில் வெற்றி பெற்றதனால் சோழ நாட்டிலுள்ள சில பாகங்கள் இவன் கைக்குள் வந்தன. இவன் சேரன் மகளாகிய மாதேவியை கலியாணம் செய்திருந்தான். தற்காலத்தில் சேரன் மாதேவி என்று சொல்லப்படுகிற ஊர் இவள் பேரால்தான் வந்ததென்று சொல்லப்படுகிறது. இவன் ஆளுகையிலிருந்த இடங்கள் தொண்டை நாட்டின் தென்பாகமும், சோழ நாடும், பாண்டிய நாடும், சேர நாட்டில் மிகச் சிறிய பாகமும் ஆகும். பொதுவாக இவன் புத்திசாலி என்றே சொல்லவேண்டும்.

## 3-வது ராஜ சிம்மன் (907—950).

வீர நாராயண சடையனுக்குப் பின் இவன் மகன் மூன்றுவது ராஜ சிம்மன் பட்டத்துக்கு வந்தான். இவன் காலம் உத்தேசமாக 907—950-மத்தியிலிருக்கிறது. இவன் சிங்காசனம் ஏறின உடனே சோழ அரசன் படையெடுத்து வந்தான். பாண்டியன் தோல்வியுற்று சிங்கள மன்னன் உதவியை நாடினன். அந்த மன்னன் பெருஞ்சேனைகளோடு ஒரு சிங்கள சேனாதிபதியை அனுப்பினன். பாண்டியன் மிகச்செருக்குடனே சோழனைக் கொன்று உலகமுழுவதையும் தானே ஆளுவேனென்று பெருமையாக பேசினன். ஆனல் பாண்டியனும் அவனுக்கு உதவியாக வந்த சிங்கள சேனையும் தோல்வியுற்றன. பாண்டியனுக்கு உதவி புரிந்த சிங்கள மன்னன்மேல் சோழ அரசனுக்கு மிகுந்த கோபம் வந்தது. ஆகையினல் அவன் கடல் கடந்து ஈள நாட்டை படை எடுத்து வந்தான். படையெடுத்து வருகிற சோழனைப்பார்த்து பாண்டியன் பயந்து தன் மனைவி பிள்ளைகளை சேர நாட்டிற்கு அனுப்பிவிட்டு, தன் சேனைகளை பாதுகாவலாக வைத்துவிட்டு தான் இலங்கைக்கு ஓடிவிட்டான். சோழ மன்னன் இலங்கைக்கு சென்ருன். இதைக்கண்டு பயந்த சிங்கள மன்னனும் பாண்டியனும் ஒரு தீவுக்கு ஓடிப்போய் ஒழித்துக் கொண்டார்கள். அரசன் இல்லாத நாட்டை சோழன் ஒன்றும் செய்யப் பிரியமில்லாமல் கிடைத்த சில விலையேறப் பெற்ற பொருள்களை எடுத்துக் கொண்டு திரும்பவும் தன்நாட்டிற்குத் திரும்பினன். ஈளத்து அரசனல் தனக்கு ஒரு உதவியும் கிடையாது என்று அறிந்துகொண்ட பாண்டியன், தனது

கிரீட முதலான ஆபரணங்களைக் காப்பதற்காக அவனிடம் கொடுத்து விட்டு தன் நாட்டிற்குத் திரும்பினான். ஆனால் இவனைக் கொல்லும்படி சோழ அரசன் விரும்பியதும், இவன் தன் மாமனாகிய சேரனிடம் அடைக்கலம் புகுந்தான். சோழனால் இதினிமித்தம் தனக்கு துன்பம் வரலாம் என்று பயந்து சேரன் பொதிய மலை நாட்டு சோலைக்குள் பாண்டியனை ஒளித்துக் கொள்ளும்படி இடங்கொடுத்தான். பாண்டியனுக்கு வேண்டிய சவாக்ஷணைகளையும் செய்தான். காடு சென்ற ராஜ சிம்மன் பானதீர்த்தம் என்ற அருவிக்கு மேலேயுள்ள அகஸ்த்தியர் கூடத்தில் அடர்ந்த சோலைக்குள் மிகுந்த மனவருத்தத்தோடு வசித்து வந்தான். தன் வேலை ஆட்களை ரகசியமாக மதுரைக்கு அனுப்பி தனக்கு நண்பாய் இருந்த சில பிரபுக்களையும், உத்தியோகஸ்தர்களையும் வரவழைத்து அவர்கள் உதவியால் ஒரு கற்கோட்டை கட்டி ஒளிந்துக் கொண்டான். இந்தக் கோட்டைக்குள் சிறு கட்டிடங்கள், கிணறுகள், குளங்கள் முதலியவைகள் இருந்தனவாம். இக்கோட்டைக்கு கிழக்கிலிருந்து சொரி முத்தையன் கோயில், பாபவிநாசம், ஆரியன்காவு முதலிய பல கணவாய்கள் சென்றன. இக்கோட்டைக்கு இந்நாள் மட்டும் பாண்டியன் கோட்டையென்றும், அதிலிருக்கிற மலைக்கு மலைக்கோட்டையென்றும் பெயர் வழங்கி வருகிறது. சிங்கம் பட்டி ஜமீனைச் சேர்ந்த ஒரு மலையிலும், குடமாடி என்ற இடத்திற்கு 6 மைல் தூரத்தில் செங்கல், சுண்ணாம்பால் கட்டப்பட்ட ஒரு கோட்டை இருக்கிறது. இதற்கு பிள்ளைக் கோட்டை என்று பெயர். இது பிற்காலத்தில் கட்டப்

பட்டிருக்கவேண்டுமென்று யூகிக்கப்படுகிறது. கடைசியாக ராஜ சிம்மன் காலத்தில் பாண்டிய நாட்டின் மகிமையெல்லாம் ஒழிந்தன.

இவனுக்குப் பின் கி. பி. 10-ம் நூற்றாண்டு இறுதியில் சடையன் பராந்தகன் என்ற ஒரு பாண்டியன் வம்சத்தவன் சற்று பலங்கொண்டு சிறிதுகாலம் அரசுபுரிந்ததாக தெரிகிறது. பொதிய மலை சிகரத்தில் இவன் வரைந்த மீன் கொடி, கன்னியா குமரி சாசனங்கள் இவன் காலத்தவை. இதற்குப் பின் வீரபாண்டியன் என்ற ஒருவன் எழும்பினான். இக்காலத்தில் நாம் ஒரு முக்கியமான காரியத்தை கவனித்துக் கொள்ளவேண்டும். சோழ நாட்டு மன்னர்கள் பாண்டியர் களை 10-வது நூற்றாண்டில் கிழடக்கி இருந்தாலும் பாண்டிய நாட்டினர் இதற்கெல்லாம் இலகுவாக அடங்கியிருக்கவில்லை. அடிக்கடி கலகம் செய்து சோழரை எதிர்த்துக்கொண்டே இருந்தார்கள். இப்படி இரண்டு மூன்று நூற்றாண்டுகள் அவர்கள் எதிர்த்து பலம் கொண்டார்கள். கடைசியில் 13-வது நூற்றாண்டிலே பாண்டியர்கள் சோழரிடமிருந்து திரும்பவும் தங்கள் நாட்டை கைப்பற்றிக்கெண்டார்கள். வீரபாண்டியன் பாண்டிய நாட்டின் தென் பாகத்திலுள்ள திருநெல்வேலியுள்ள சில பாகங்களை தன் வசப்படுத்திக் கொண்டான். இங்கிருந்து மெள்ள மெள்ள தன் அரசாட்சியை வட பாகங்களிலும் பரவும்படி செய்து கொண்டான். இக் காலத்தில் அரசாண்ட சுந்தர சோழன் இவன்மேல் படையெடுத்து வந்தான். சேவூர் என்ற இடத்தில் சண்டை

நடந்தது. யுத்தத்தில் சோழன் கொலையுண்டான். இந்த யுத்தம் உத்தேசமாக 960—970க்குள் நடந்திருக்கவேண்டும்.

இதன் பின் சுந்தர சோழன் மகன் ஆதித்தன் பாண்டியனோடு திரும்பவும் போர் செய்ய வந்தான். இதில் பாண்டியன் கொலை செய்யப்பட்டான். இதனால் வீர பாண்டியன் நாடுகளை சோழன் தன் வசப்படுத்திக் கொண்டான். இந்த யுத்தத்தில் சிங்கள மன்னன் "உதயன்" பாண்டியனுக்கு உதவி செய்ய வந்ததால் சோழன் ஈள நாட்டிற்கு சென்று அத்தீவையும் தீயிட்டு தன் நாட்டிற்கு திரும்பினான்.

வீர பாண்டியனைப் பற்றிய சாசனங்கள் அம்பா சமுத்திரம், நாஞ்சி நாடு, திருநெல்வேலி, ஸ்ரீ வில்லிபுத்தூர் என்ற இடங்களில் இருக்கின்றன.

இதன் பின் அமரபுஜங்கன் பாண்டியன் பட்டத்துக்கு வந்தான். காலம் 995 மட்டும் ஆண்டான். இவனைப் பற்றி வேறு விஷயங்கள் ஒன்றும் இல்லை.

இதன் பின் ஸ்ரீவல்ல பாண்டியன் பட்டத்துக்கு வந்தான். கி.பி.1011ம் வருஷம்போல் ராஜேந்திர சோழன் சிம்மாசனம் ஏறினான். இவன் பலம் கொண்டு வடக்கிலும், தெற்கிலும் ஜெயித்து எல்லாவற்றையும் தன் ஆதீனத்துக்குள் வைத்துக் கொண்டான். பாண்டிய நாடும் இவனுக்கு அடங்கியிருந்தது.

இதன் பின் பாண்டிய மானபாரணன் பட்டத்துக்கு வந்தான். மானபாரண நல்லூரை ஸ்தாபித்தவன்.

இதன் பின் வீர கோளன் சிம்மாசனம் ஏறினன். சித்திரா நதியோரத்தில் வீர கோளன் புதூர் என்ற ஊரை ஸ்தாபித்தவன்.

## சுந்தர பாண்டியன் கி. பி. (1020—1030)

வீர கோளனுக்குப் பின் சுந்தர பாண்டியன் பட்டத்துக்கு வந்தான். இக்காலத்தில் பாண்டிய நாட்டில் சோழ மன்னன் ஏற்படுத்திய ராஜபிரதிநிதிகள் அதிகாரம் செலுத்தி வந்தார்கள். சுந்தர பாண்டியன் சில சேனைகளை சேர்த்துக் கொண்டு சோழ பிரதிநிதிகளை தாக்கினன். ஆனல் இக்காலத்தில் ஆண்ட முதலாவது ராஜாதி ராஜனுகிய சோழன் ஒரு பெருஞ் சேனையை அனுப்பி இவனை முறியடித்தான். சுந்தர பாண்டியன் சோழனிடத்தில் இரக்கம் பெற்றுன்.

பாட்டு :—

வேண்டிய போதின்பம் வீளைக்கும் மடந்தயரை
தீண்டியகையால் என்னை தீண்டாதே—பாண்டியா
முல்லைக்கதிபா முகம்பார்த் தகலன்று
சொல்லக்கடவ வெல்லாம் சொல்,

இதற்குபின் 1. பராக்கிரம பாண்டியன். 2. குலசேகர பாண்டியன். 3. வீரபாண்டியன். 4. விக்கிரம பாண்டியன். பட்டத்துக்கு வந்தார்கள். இவர்கள் காலத்தில் பாண்டிய நாடு சின்னபின்னமாகி தாழ்மையுற்றிருந்து மதுரையில் சோழ நாட்டு பிரதிநிதி ஆண்டு கொண்டிருந்தான். பாண்டியவம்சம் சோழ மன்னர்களுக்குக் கீழ்பட்டிருந்தது.

இக்காலத்தில் சகோதரராகிய பராக்கிரம பாண்டியனும் குலசேகர பாண்டியனும் சேர்ந்து சோழப்பிரதிநிதியை தாக்கி விரட்டி விட்டார்கள். ஆனால் இவ்விரண்டு பேரில் எவன் சிங்காசனம் ஏறவேண்டுமென்று இரண்டு பேருக்கும் சண்டை நடந்தது. பராக்கிரமன் மூத்தவனாதலால் சில சிற்றரசர்கள் உதவி கொண்டு அரசு செலுத்த ஆரம்பித்தான். பொறுமை கொண்ட குலசேகரன் வேறு சிற்றரசர்களின் உதவியைக் கொண்டு பராக்கிரமன் மதுரையை விட்டு ஓடச் செய்து தானே அரசு புரிய ஆரம்பித்தான்.

பராக்கிரமன் இலங்கை அரசனும் தன் நேசனுமான பராக்கிர பாகுவின் உதவியை நாடினான். பராக்கிர பாகு தன் சேனைத் தலைவனாகிய இலங்காபுரி என்பவனை பராக்கிரம பாண்டியனுக்கு உதவி செய்யும்படி சேனையோடு அனுப்பினான். இலங்காபுரி சென்ற இடமெல்லாம் வெற்றி பெற்றான். குலசேகரனும் ஓடிவிட்டான். பராக்கிரம பாண்டியனின் வம்சத்தவனாகிய வீரபாண்டியன் இக்காலத்தில் பொதிவு மலைச்சாரலில் ஒளிந்து கொண்டிருந்தான். இலங்காபுரி ஒரு தூதனை அனுப்பி வீரபாண்டியனை கூட்டி வரும்படி செய்தான். வீர பாண்டியன் பட்டத்துக்கு வந்தான். குலசேகரன் பாளையங் கோட்டை சென்று அவ்வூரை தனதாக்கிக் கொண்டான் இலங்காபுரி அங்கும் சென்று அவனை விரட்டி விட்டான். இதற்குப் பின் இலங்காபுரி குலசேகரனைப் பின் தொடர்ந்து சோழ நாட்டிற்கு சென்று அங்குள்ள பாகங்களையும் வீர பாண்டியனுக்கே கொடுத்தான் இது நடந்த காலம் (1167—1168)

இதற்குப்பின் குலசேகரன் மகனாகிய விக்கிரம பாண்டியன் சோழ மன்னனுடைய உதவியைப் பெற்றுக்கொண்டு மதுரையைப்படையெடுத்து வந்தான். வீரபாண்டியன் திரும்பவும் இலங்கை மன்னன் உதவியை நாடினான். ஆனால் ஈழ நாட்டுப் படைகள் இந்தத் தடவை முறியடிக்கப் பட்டன. சிங்கள மன்னர்களுடைய மூக்குகளும் அறுக்கப்பட்டன. வீரபாண்டியன் மகன் சண்டையில் இறந்தான். மூன்றாவது குலோத்துங்க சாசனத்தின் மூலமாய் இவைகள் அறியலாம். இப்படி விக்கிரம பாண்டியன் மதுரையில் சிங்காசனம் ஏறினான். சோழ மன்னவனாகிய மூன்றாவது குலோத்துங்க சோழன் இவனுக்கு உதவியாக இருந்தான். விக்கிரம பாண்டியன் நீதியோடு அரசு புரிந்து வந்தான். வீர பாண்டியன் திரும்பவும் இலங்கை மன்னனின் உதவியை நாடினான். திரும்பவும் இலங்கை மன்னன் வீர பாண்டியன் சேனைகளோடு கடல் கடந்து விக்கிரம பாண்டியனோடு சண்டை செய்தான். ஆனால் இந்தத் தடவையும் இலங்கையிலிருந்து வந்த சேனைகள் முறியடிக்கப்பட்டன. இந்த சம்பவங்களுக்கு ஆதாரம் மகா வம்சம்.

பின் வருவது இக்கால சாசனமொன்று :—

> பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப
> நாமருவிய கலைமடந்தையும் ஜெயமடந்தையும் நலஞ்சிறப்ப
> காமுார்ந்த கரும்புலியும் கொடுஞ்சிலையும் குலக்தொளிப்ப
> வாமுார்ந்த பொற்கிரிமேல் விரிக்கயல்கள் விளையாட.

இருங்கடல் வலயத்தினிதறம் பெருக கருங்கலி கடிந்து செங்கோல் நடப்ப ஒரு குடை நிழலில் இருநிலம் குளிர மூவகை

தமிழும் முறைமையின் விளங்க நால்வகை வேதமும் நவிந்துடன் வளர விளங்கிய மணி அணி வீர சிம்மாசனத்து வழங்கெழுகவரி இருமருங்கசைப்ப உலக முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோமாற பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சேரநாடு வழங்கி அருளிய ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர்க்கு.

## சடாவர்மன் குலசேகர பாண்டியன்

## கி. பி. (1190—1215)

இரண்டு நூற்றாண்டுகளாக பாண்டிய நாடு சோழ அரசனுக்கு கீழ்பட்டு தாழ்த்தப்பட்டிருந்தபின் தலை எடுத்த பாண்டியன் இவனே. இக்காலத்திலிருந்த சோழ நாட்டு சக்காவர்த்திகள் அதிகார கர்வத்தினால் இறுமாப்பாய் இருந்தார்கள். தங்களுக்கு கீழ்ப்பட்டிருந்த நாடுகளை சரியானபடி தாங்களே மேல் பார்த்து கவனியாதபடி தங்கள் பிரதிநிதிகளின் அதிகாரத்துக்கு முழுதும் ஒப்புக் கொடுத்திருந்தார்கள். சக்காவர்த்தி அசட்டையாய் இருந்ததினால் பிரதிநிதிகளும் பிரஜைகளின் க்ஷேமங்களை கவனியாமல் அசட்டையாய் இருந்தார்கள்.

குடிகளுக்கும் அரசன்மேல் அதிருப்தி உண்டாயிற்று சிற்றரசர்களும் சக்காவர்த்தியின் பலவீனத்தை அறிந்து அவனுடைய அதிகாரத்தை மறுக்க ஆரம்பித்தார்கள். ஒரு ஏகாதிபத்தியம் கெடுகிறதற்கு இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களே அடிக்கடி காரணமாகும்.* இப்படி சோழ நாடு சீர் குலைய

ஆரம்பித்த காலத்தில்தான் இந்த சடா வர்மன் குலசேகர பாண்டியன் முன் சொல்லியபடி படையெடுத்தான். மதுரை இவன் ராஜதானி. தெற்கே குமரி, கிழக்கே கடல், மேற்கேயும் வடக்கேயும் உள்ள சர்வதம் உள்ள எல்லை நாட்டை இவர் ஆண்டார். இவர் சிங்காசனத்தின் பெயர் காளிங்கராயன். இவன் சிவ மதத்தவன். நீதிமான். தமிழை ஆதரித்தவன். இவன் பிறந்த நட்சத்திரம் விசாகம்.

## மாறவர்மன் சுந்தர பாண்டியன் (1216—1237)

இவன் ராஜதானி மதுரை. இவன் காலத்தில் தஞ்சையில் மூன்றுவது ராஜாராஜன் ஆண்டு வந்தான் முன் கூறியபடி செல்வச் செருக்கால் தஞ்சை மன்னன் பலவீனப் பட்டிருந்ததை அறிந்த சுந்தர பாண்டியன் படையெடுத்து வடக்கு சென்றுன். தஞ்சையிலேயே போர் நடந்தது. சோழன் சேனைகள் தோல்வியுற்று அரசனும் புறங்காட்டி ஓடிவிட்டான். பாண்டியன் தஞ்சைக்கு நெருப்பு வைத்து விட்டான். கோட்டை கொத்தளங்களையும், மாட மாளிகைகளையும் கோபுரங்களையும் இடித்து நாசப்படுத்தினுன். இதற்குப் பின் சோழ மன்னனின் அபிஷேக மண்டபத்துக்கு புகுந்து வீராபிஷேகம் செய்து கொண்டான். ஜெயபேரிகையும் முழங்க யானையில் பவனி சென்று வடதிசை சென்றுன். சிதம்பரம் சென்று நடராஜ பெருமானின் கோயிலை வணங்கினுன். இதற்குப்பின் தோல்வியடைந்த தஞ்சைமன்னன் தன் மனைவி மக்களை அழைத்துக்கொண்டு சுந்தர பாண்டியனிடம் சென்று தன் குழந்தைக்கு தான் இழந்த நாட்டை திரும்பவும் கொடுக்

கும்படி வேண்டினன். சுந்தர பாண்டியரின்மனம் இரங்கியது. சோழன் மறுபடியும் தஞ்சைசென்று சுந்தரபாண்டியனுக்குக் கீழ் ஆண்டான். சுந்தர பாண்டியன் இன்னும் பல இதர மன்னர்களையும் வென்றான். தஞ்சை மன்னன் நன்றி கெட்டவனாய் சிற்சில அரசர்களை சேர்த்துக்கொண்டு திரை செலுத்த மறுத்து போர் செய்ய ஆயத்தம் செய்தான். பாண்டியன் திரும்பவும் அங்கு சென்று அந்நாடுகள் முழுவதையும் தன் ஆட்சிக்குட்படுத்தினன். மதுரைக்குதிரும்பி தன்மனைவியாகிய உலக முழுதுடையாளோடும் மகிமையாக ஆண்டு வந்தான். சிதறுண்டு போயிருந்த பாண்டிய வம்சம் இவ்விதமாக சடாவர்மன் குலசேகர பாண்டியனால் சற்று மேன்மைக்கு திரும்பி அதன் பின் சுந்தர பாண்டியனால் உன்னதமான ஸ்திதிக்கு கொண்டு வரப்பட்டது.

சுந்தர பாண்டியன் மகா வீரன். இவனுக்கு எவரிடத்திலும் கருணையுண்டு. நன் கொடையாளன். இவனுக்கு பல பேர்களும் இருந்தது. அதாவது சோநாடு கொண்ட சுந்தர பாண்டியன், சோ நாடு வழங்கிய சுந்தர பாண்டியன், வீராபிஷேகம் அருளிய சுந்தர பாண்டியன்.

முத்தமிழையும் நால் வகை வேதங்களையும் ஆதரித்தான். குடிகள் யாவரும் இவன் காலத்தில் நன்கு வாழ்வடைந்து வந்தனர். இவன் பிறந்த மாதம் புரட்டாசி மாதம் அவிட்ட நட்க்ஷத்திரம் அன்று விசேஷ பூஜைகள் நடக்கும்படி பாண்டிய நாட்டிலுள்ள திருவாதீஸ்வரம், திருநெல்வேலியிலுள்ள கோயில்களுக்கு மானியநிலங்கள் கொடுத்திருக்கிறான்.

இவன் காலத்தில் நாணயம்.

அச்சு என்ற பொன் காசு 25 அச்சுக்கு 6 மாதத்திற்கு வட்டி 30 கலம் நெல். வெள்ளிக்காசும் செம்புத்துட்டும் இருந்தது. நீட்டல் அளவை கோல், முகத்தல் அளவைக் கருவியும் இவன் பெயராலேயே வழங்கி வந்தது. அதாவது சுந்தர பாண்டியன் கோல் சுந்தர பாண்டியன் மாக்கால்.

இவன் சிலகாலம் மதுரையும், சிலகாலம் திருநெல்வேலியும், பிரதானநகராகக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. பின் காலத்தில் போர்க்கள நரசிம்மதேவன், தஞ்சை நாட்டு சோழனுக்கு திரும்பவும் நாட்டைக்கொடுக்க பரிந்து பேசினான். சில நிபந்தனைகளோடு மீண்டும் சோழ நாட்டைக் கொடுத்தான். இதன் பின் ராஜராஜன் சுந்தர பாண்டியனுக்கு பயந்தே நடந்தான்.

## சடாவர்மன் குலசேகரன் இரண்டாவது (1232)

இந்த மன்னனைப்பற்றி அதிகமாகத் தெரியவில்லை. இவன் முதலாவது மாறவர்மன் சுந்தர பாண்டியன் கடைசிக் காலத்திலேயே அவனுடைய கருணையினால் உதவி பெற்று தென் தமிழ்நாட்டில் ஒரு பாகத்தை ஆண்டதாகத் தெரிகிறது. இவன் தலைநகர் இன்னதென்று திட்டமாகத் தெரியவில்லை. இவனைப்பற்றி ஒரு சாசனத்தில் கூறியிருக்கிறது. அதாவது

குலசேகர தேவர்க்கு ஆண்டு மூன்றாவது
நாள் ஐந்நூற்று நாடு நாஞ்சில்
நாடு கோட்டாற்றில் கோயில் பள்ளி அறை கூடத்து.

பள்ளிப்பீடம மழவாராயனில் எழுந்தருளினபடி உடையார் திருநெல்வேலி உடையார்க்கு நாம் பிறந்த விசாகத்து நாள் தோறும் சிறப்பாக அமுது செய்தருள.

இவன் தலைநகர் கோட்டார் அல்லது திருநெல்வேலியாக இருக்கலாம் என்று யூகிக்கப்படுகிறது.

## இரண்டாவது மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலம் (1238—1251)

இவன் கொல்லத்தை வென்றதற்கு அடையாளமாக திருநெல்வேலி மேலரத வீதிக்கு மேற்கே ஒரு சோலையை உண்டு பண்ணி அதற்கு கொல்லம் கொண்ட சோலை மேனி என்று பெயரிட்டான். இதில் ஒரு திருவிழா நடக்கும்படி ஒழுங்கு செய்தான். இவன் ஈளத்தையும் வென்றான் என்றும் இதற்கு ஞாபகார்த்தமாக ஈளங்கொண்ட சோலை ஒன்று ஏற்படுத்தினன் என்றும் சொல்லப்படுகிறது.

## எம்மண்டலமும் கொண்ட சுந்தர பாண்டியன் அல்லது சடாவர்மன் சுந்தர பாண்டியன் (1251—1271)

மாறன் சுந்தர பாண்டியனுக்கு பின்பு 1251-ல் பட்டம் பெற்று 20 வருஷங்கள் அரசுபுரிந்தான். சகல நாடுகளையும் ஜெயிக்க வேண்டும் என்று ஆசையிருந்தது. இதற்காக போர்க் கருவிகளையும், படைகளையும் திரட்டிக் கொண்டான். பல சேனைத்தலைவர்களையும் ஏற்படுத்தினன். எல்லா சேனைத்தலைவர்களுக்கு மேலான உத்தியோகம் வகிக்க தளகளர்த்தனாக தொண்டைமான் கரு மாணிக்கம் என்பவனை ஏற்படுத்தினன்.

இவன் சொந்த ஊர் கப்பலூர். பராக்கிரமசாலி. முதலாவது கோளத்தை ஜெயித்தான். கர்நாடக அரசன் ஒசலவீரசமேஸ்வான் இவனை ஜெயித்தான். அவனை முறியடித்து தனக்கு கப்பம் கட்டும்படி செய்து விட்டான். ஸ்ரீரங்கத்தையும் தன் வசப்படுத்திக் கொண்டான். ஒரிசாவிலுள்ள கதக அரசனுகிய கஜபதியை தனக்கு கீழ்ப்படுத்தினுன். கர்கத்திய அரசன் கணபதி என்பவனையும் தனக்குக் கீழ்ப் படுத்தினுன். இவ்விதமாக தெலுங்கு நாடுகளை தன் வசப்படுத்தினுன். காஞ்சிபுரத்தையும் தன் வசப்படுத்தினுன். இவ்விதமாக தெலுங்கு நாடுகள், பல்லவ மன்னன் ஆண்ட காஞ்சிபுரம், சோழ மன்னன் நாடுகளெல்லாம் சுந்தர பாண்டியனுக்கு கீழாயின. இதன் பின் சுந்தர பாண்டியன் வடநாடும் சென்று வெற்றி சிறந்தான். மதுரை திரும்பி செங்கோல் செலுத்தி வந்தான். இலங்கை வேந்தன் பாண்டியனின் சத்துருவாகிய ஒசலனுக்கு உதவி செய்திருந்ததாக தோன்றுகிறது. இதனுல் பாண்டியன் இலங்கை சென்று தலைநகரை தாக்கி கோட்டைகளை அழித்து சிங்கள மன்னனை கைதியாகக் கட்டிக்கொண்டு வரும்படி செய்தான். அவன் நிதிகளையும் கைப்பற்றினுன். தனக்கு அடங்கி நடந்து கொள்ளும்படி கட்டளையிட்டு மதுரை திரும்பினுன். இலங்கையை வென்றதினுல் கோதண்டராமன் என்று பெயரும் கொடுக்கப்பட்டது. சில தேவாலயங்களில் கோதண்டராமன் சந்தி எனகட்டளை வழிபாடுகள் நடந்து வரும்படி இவன் செய்த ஏற்பாடு சில சாசனங்களால் அறிகிறோம். இதனுல் இவனுக்கு இந்த பேர் கொடுக்கப்பட்டிருக்கும் என வழங்குகிறது. இப்படி சுந்தர

பாண்டியன் காலத்தில் பாண்டிய மன்னன் அரசாட்சி வட நாட்டில் பலபெரும் பாகங்களோடு, தெற்கே கன்னியாகுமரி, மேற்கேயும் கிழக்கேயும் கடல்கள், இவ்வளவு விஸ்தீரணமாயி ருந்தன. மதுரை நகரை மகிமையுடன் செல்வமடைய இவன் செய்ததால் மதுரை மகாதேவன் என்ற பெயரும் கொடுத்தார்கள்.

தனக்கு கிடைத்த ஏராளமான நிதிகளில் சில பாகத்தை ஆலயங்கள், கூடகோபுரங்கள் மாடமாளிகைகள் கட்ட செலவழித்தான். ஸ்ரீரங்கநாதர் கோவில் சிதம்பரம் நடராஜ பெருமாளின் ஆலயங்களுக்கும் செலவழித்தான். இவனைப் பற்றிய சாசனங்கள் வடக்கே நெல்லூர் முதல் தெற்கே கன்னியாகுமரி மட்டும் உண்டு. இவன் காலத்து நாணயங்களில் கோதண்டராமன் என்ற அரசன் பெயரும் மீனக்கொடியும் முறையே முன் பின்புறம் பதிக்கப் பெற்றிருக்கின்றன.

## ஜடாவர்மன் வீர பாண்டியன் (1254—1271.)

தமிழ் மன்னர்கள் பலமுறை கையாடிய முறைப்படி சுந்தா பாண்டியன் காலத்திலேயே தன் உடன் அரசனாக சுந்தா பாண்டியனால் பட்டம் கொடுக்கப் பட்டு தென்னாடுகளாகிய திருநெல்வேலி முதலியவற்றை அரசாண்டான். சுந்தா பாண்டியனுக்கு எல்லா சண்டைகளிலும் உதவி புரிந்தான். வெல்லாரை வென்றவன். இவன் சாசனங்கள் தென்னாடுகளிலேயே விசேஷமாய்க் காணப்படுவதால் இவன் தென் தமிழ் நாட்டில் ஆண்டவன் என்று யூகிக்கலாம்.

முக்கியமாக திருவாலீஸ்வரம், திருநெல்வேலி, இலஞ்சி முதலிய சிவாலயங்களில் இவனின் சாசனங்களைப்பார்க்கலாம். இதேகாலத்தில் இவனைப்போல் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் கொண்ட அதிகாரத்துக்கு கீழ் சிற்றரசாக கோமாறன், வீர பாண்டியன், மாறன் ஸ்ரீவல்ல பாண்டியன் முதலிய சிற்றரசர்களும் ஆண்டிருக்கிறார்கள்.

இவனுடைய சாசனங்கள் திருநெல்வேலி ஜில்லாவில் பார்க்கலாம். இவன் காலத்தில் புருஷனை இழந்த பெண்கள் உடன் கட்டை ஏறினதாகத்தோன்றுகிறது. தூத்துக்குடிக்கு சமீபமான மொரப்பு நாட்டுத் தலைவன் மகள் இப்படி உடன் கட்டை ஏறினதாக ஒரு சாசனம கூறுகிறது. திருநெல் வேலிக்கு கிழக்கே 15-மைல் அப்பாலுள்ள தற்காலத்தில் சேய்துங்கநல்லூர் என்று சொல்லப்படும் சேஞ்சலூர் ஆலயத் தில் இதைப்பார்க்கலாம்.

## மாறவர்மன் குலசேகர பாண்டியன் (1268—1313.)

முதலாவது ஜடாவர்மன் சுந்தர பாண்டியனைப் போலவே உலகமுழுதும் தன் கீர்த்தி விளங்கவேண்டும் என்று ஆசைக்கொண்டான். இவன் காலத்தில்தான் முத லாவதாக மகமதியர் பாண்டிய நாட்டோடு சம்மந்தப் பட்டதாகப் பார்க்கிறோம். இவன் ஒரு மகம்மதியனைத் தன் சேனைக்குத் தலைவனாக வைத்தான். இவனுக்கு ஆரிய சக்ர வர்த்தி என்ற பட்டப் பெயர் சூட்டினான்.

இந்த மகமதிய சேனாபதி நல்ல போர்வீரன். குல சேகரபாண்டியனின் விரோதிகளுடன் சண்டை செய்து

அடக்கிவிட்டான். சென்ற இடங்களில் எல்லாம் வெற்றிப் பெற்றதால் மன்னன் எம்மண்டலமும்கொண்ட குலசேகரன் என்ற பெயர் பெற்றான்.

இலங்கையின் அரசன் புவனேகபாகு என்பவன் சுந்தர பாண்டியன் காலமுதல் பாண்டியனுக்கு கப்பம் கட்டிவித்தான். ஆனால் இக்காலத்தில் கப்பம் கொடுக்க மறுத்ததால் ஆரிய சக்கரவர்த்தியை இலங்கையை வெல்லும்படி அனுப்பினன். இக்காலத்தில் இலங்கையில் கொடிய பஞ்சம். இலங்கையில் குடியேறிய தெலுங்கரும், தமிழரும் தங்களை அரசர் கவனியாததால் அதிக அதிருப்தி. அவனுக்கு சரியான படையில்லை. உள்நாட்டு கலகமிருந்தது. இச் சந்தர்ப்பம் படை எடுத்துவந்த ஆரிய சக்கரவர்த்திக்கு மிகவும் உபயோகமாயிருந்தது. இவன் தலைநகரம் சென்று அங்குள்ள புத்தபல்சேஷம் ஆலயத்தில் புகுந்து நல்லாபரண திரவியத்தையும் புத்தபல் சின்னத்தையும் எடுத்துக் கொண்டு நாடு நகரங்களையும் பாழாக்கி பல்லையும் ஆபரணங்களையும் அரசனிடம் கொடுத்தான்.

சில ஆண்டுகளுக்குபின் பராக்கிரமபாகு என்னும் இலங்கை மன்னனும் வேஷம்மாறி பாண்டியநாடு வந்து இழந்த புத்தர் பல் சின்னத்தையும் கைப்பற்றிச் சென்றான். அதற்கு கண்டியில் சிறப்ப மகிமையுள்ள ஒரு கோயிலும் கட்டினன். அது இந்நாள்மட்டும் உண்டு. இப்பாண்டியன் காலத்தில் சோழ வம்சமே கிடையாது என்று சொல்லலாம். இவனைப் பற்றிய சிலாசாஸனங்கள் திருநெல்வேலி ஜில்லாவில்

பார்க்கலாம். இவன் காலத்தில் குடிகள் சம்பிரமாய் வாழ்ந்தனர். இவனுக்கு அடுத்த பட்டத்துக்குரியவர் 3 பேர் இருந்தார்கள்.

(1) பட்டத்து மனைவியிடம் பிறந்த ஜடாவர்மன் சுந்தர பாண்டியன்.

(2) இவன் சகோதரன் மகனாகிய ஜடாவர் சுந்தர பாண்டியன்.

(3) வைப்பாட்டியிடம் பிறந்தவர் வீரபாண்டியன்.

வீரபாண்டியன் கி. பி. (1314—1339.)

ஜடாவர்மன் சுந்தர பாண்டியனுக்கு 30 வருஷம் கிரீடம் சூட்டி தன் இளவரசனாக வைத்துக்கொண்டான். இவன் சகோதரன் மகன் சுந்தரனை வடக்கே கடப்பை கள்ளிக்கோட்டை முதலிய இடங்களில் அரசனாக்கினான். வீர பாண்டியனுக்கு வேறு இடங்களை கொடுக்க நினைத்தான். ஆனால் வைப்பாட்டியும் இந்த அவள் மகனும் அவனை தந்திரத்தில் மயங்கி இவனுக்குப்பின் வீர பாண்டியன் தான் பட்டத்துக்கு வரவேண்டும் என்றார்கள். பிரதானிகள் எவ்வளவோ சொல்லியும் அரசன் தன் இஷ்டப்படியே வீர பாண்டியனுக்கு ராஜ்ஜியத்தைக் கொடுத்துவிட்டான். சுந்தர பாண்டியன் எவ்வளவோ கேட்டும் பயனில்லை. சுந்தர பாண்டியன் பலர் உதவியை பெற்று தகப்பனை கொன்று விட்டான். பிரதானிகளும் ஜனங்களும் சேர்ந்து சுந்தர பாண்டியனை மதுரைக்கு அரசனாக்கினார்கள்.

இதற்குபின் வீரபாண்டியன் சில பிரபுக்களிடம் சென்று சுந்தரபாண்டியன் தகப்பனைக் கொன்று நீதி தவறின வன் என்று சொல்லி அவர்களை தன் வசப்படுத்திகொண்டான். இதையறிந்த சுந்தரபாண்டியன் மதுரையைவிட்டு புறப்பட்டு நாமக்கல்லிலிருந்து அரசாண்டு வந்தான். வீர பாண்டியன் அங்கும் சென்று இவனுடன் யுத்தம் செய்தான். வீரபாண்டியன் காயப்பட்டு அவனுக்கு ஜன்னி வந்துவிட்டது. இதனால் சுந்தர பாண்டியன் அவனை விட்டு மதுரை திரும்பினான். ஆனால் வீரபாண்டியன் சுகமாகி கொலை செய்யப் பட்ட குலசேகரன் போனகிய மாறுபரணன் என்னும் அரசனை நாடி மதுரையைத் தாக்க வந்தான். சுந்தர பாண்டியன் இக் காலத்தில் செல்வம் சேனை முதலியனவற்றில் குறைபட்டு இருந்ததினால் அச்சமயத்தில் வெற்றிப்பெற்றிருந்த அல்லா உடீன் கில்ஜியிடம் அடைக்கலம் புகுந்தான். அல்லா உடீனும் அவனுக்கு உதவியாக ஒரு சேனையை அனுப்பினான்.

இக்குழப்பகாலத்தில் சோழ சேரநாடு அரசர்களும் இச்சண்டைகளில் கலந்துகொண்டதினால் சமயம் பார்த்திருந்த அல்லாஉடீன் கில்ஜி சேரசோழ நாடுகளின் பலபாகத்தையும் தன் வசப்படுத்தினான். இறுதியில் சுந்தபாண்டியன் வெற்றிப்பெற்று மதுரையில் ஆண்டான்.

இக்கால முதல் பாண்டியராஜ்ஜியம் க்ஷீண தசை அடைந்தது. இதற்குமுன் வந்த பாண்டிய மன்னர்களைப் பற்றி அவ்வளவு சரித்திர விசேஷம் ஒன்றுமில்லை.

இவர்கள் சிற்றரசர்கள்போல் பாண்டிய நாட்டின் பல சிறு இடங்களில் அரசாண்டதாக தெரிகிறது. பாண்டிய

நாட்டு மன்னர் ஆண்ட வருஷத்தையும், சரித்திரத்தையும் படிக்கும்போது இருகாரியங்கள் படிக்கிறவர்களின் மனதை குழம்பச் செய்யும்.

முதலாவது தகப்பன் காலத்து இறுதியில் அதாவது தகப்பன் உயிரோடு இருக்கும்போதே மகன் ஆண்டான்.

இரண்டாவது பற்பல இடங்களில் ஒரே சமயத்தில் உடன் அரசர் ஆண்டார்கள். பின்வந்த இப்பேர்பட்ட பாண்டியர்களின் இரண்டு மூன்றுபேர் சரித்திரத்தைப் படிப்போம்.

இதன்பின் சில பாண்டியர் ஆண்டார்கள். இவர்களைப் பற்றி விசேஷமானதொன்றுமில்லை.

## அரிகேசரி பராக்கிரம பாண்டியன் (1420—1462).

இவன் தலைநகர் தென்காசி. குடிகளிடத்தில் அன்புடன் நீதியாக ஆண்டான். கல்வியிலும் பக்தியிலும் சிறந்தவன். தென்காசியில் தற்காலம் மகமதியர் வசிக்குமிடத்தில் இவன் அரண்மனையும், கோட்டையும் இருந்ததாம். இப்பொழுது அது அழிந்து மண் மேடாயிருந்தாலும் அதின் பூர்வ வலிமையை இன்றும் காட்டுகின்றது. கருங்கற்களால் கட்டப்பட்டகிணறும், விசித்திர வேலைப்பாடுள்ள தூலாக்களும் இங்கு காணலாம். சமீபத்திலிருந்த 8 சிற்றரசர்களை வென்று அவர்கள் ஊர்களை கைப்பற்றிக் கொண்டான். பல சத்திரம், சாவடி, பள்ளிக்கூடம் முதலியன ஏற்படுத்தினான். திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலுக்கு அர்த்த ஜாமக் கட்டளை ஏற்படுத்தினான். திருக்குற்றால நாதர் கோயிலில் இரு அழகிய மண்டபங்கள் கட்டுவித்தான்.

இவனுக்கு காசியாத்திரை போகவேண்டும் என்ற ஆசையுண்டானது. தூங்கும்போது ஒரு சொர்ப்பனம் கண்டான். விஸ்வநாதன் தோன்றி "பாண்டியனே நீ காசிக்கு போகவேண்டாம், சித்திரா ஆறு ஓடும் இங்கேயே எனக்கு ஒருகோவில் கட்டு" என்றார். அரசன் விழித்தபின் கோவில் கட்ட தீர்மானித்தான். சிலவருஷம் ஆனபின் ஒரு கோபுரமும் கட்ட ஆரம்பித்தான். மிக அழகிய சிற்ப மகிமை சாமர்த்தியமுள்ள தூண்கள், சிலேகளின் நுட்பமான கல் வேலே எல்லாம் ஆறுவருஷத்தில் முடிந்தது. மேல் தட்டுகள் கட்டத்தொடங்குகையில் அரசனுக்கு சாவுக்குறிய நோய் வந்தது. அதனல் தன் தம்பி அழகன் பெருமான் குலசேகரன் என்பவனிடம் இத்திருப்பணி வேலேயை ஒப்படைத்தான். சிற்பிகளின் கைவன்மை காட்டுமிந்த ஆலயக்கோபுரம் மிகவும் அழகும் அலங்காரமுமாயிருந்தது. ஆனல் பின் காலத்தில் தீயால் எரிக்கப்பட்டு இப்போது பிளவுபட்டிருக்கிறது.

## தென் காசிக் கோவில் சிலாசனம்.

சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
விழாவணி நடாத்தி விரைபுன லாடல்
வழாவகை நடாத்தி நின்மல னருள்தனுல.
வற்ரு வருவியும் வற்றி வற்கட
முற்றவிக் காலத் துறுபுனல் நல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத்தின்றிச்
சேண்டரு புனவிற் செழும்புன லாட்டி

மின்கால் வேணி விசுவநாதர்க்குத்
'தென்காசிப்' பெருங் கோயில் செய்து

* * * * *

இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயினத் துயிர்கரு
மிம்மைப் பயனும் மறுமைக் குறுதியு
மேம்பட வருளி வீற்றிருந்தருளிய
(ஸ்ரீ அரி கேசரி தேவரான
பராக்கிரம பாண்டிய தேவர்க்கு)
யாண்டு இருபத்தெட்டாவதின் எதிராவது.

இதற்குபின் வீர பாண்டியன் அல்லது திருநெல்வேலி பாண்டியன் ஆண்டான்.

## அதிவீரராம பாண்டியன் கி. பி. (1564—1606.)

இவன் கட்டியவூர் அதிவீரராம பாண்டிய பட்டிணம். திருநெல்வேலி ஜில்லா முழுதும் இவன் கீழ் இருந்தது. இவன் தென் காசியில் கட்டிய குலசேகர முடையார் கோயிலில் இருந்து ஒரு சுரங்கவழியை கருங்கல்லில் செய்து முடித்தான். இது தற்சமயம் மூடப்பட்டிருக்கிறது. இக்கோயிலில் இவன் உருவசிலை இருக்கிறது. சிறுவயதிலிருந்து கல்விப்படித்தவன் கவிப்பாடுவதில் சிறந்தவன். நளச்சக்கரவர்த்தியின் கதையை மொழிபெயர்த்து நைடதம் என்று பெயரிட்டான். நைடதம் புலவர்க் கௌடதம் என்ற பெயரும் உண்டாயிற்று. இவனுக்கு தாயாதிகாரன் வரதுங்கராம பாண்டியன் கரிவலம் வந்த நல்லூர் என்ற இடத்தில் ஆண்டு வந்தான். அவனும்

பார்க்கும்படி நைடதம் என்ற ஏட்டை அவனுக்கு அனுப்பினன். வரதுங்கனே மகா சிவபக்தன். இது மனுஷன்மீது பாடினது என்று வரதுங்கராமன் கோபம் கொண்டு இந்நூலை ஏற்று கொள்ளவில்லை. இதை குறித்து கேள்விப்பட்ட அதி வீரராம பாண்டியன் மிகவும் உக்கிரங்கொண்டு அவனை கொல்ல வேண்டும் என்று புறப்பட்டுச் சென்றான். அச்சமயத்தில் அவன் சிவபூஜை செய்து கொண்டிருந்தான். பூஜை முடிவில் வரதுங்கன் ஒரு பாட்டு பாடுவது வழக்கம். அவன் அச்சமயத்தில் பாடிய பாட்டின் பொருள் சிவபெருமானைப் பற்றிப் பாடாமல் சாவுக்குறிய மனிதரைக் குறித்து ஏன் பாடுகிறீர்கள் என்பதே.

* "சங்கக் குழையனைத் தென்கரு வாபுரித் தாணுவைவான்
கங்கைச் சடையனைப் பாடல் செய்யாத கவிப்புலவீர்
அங்கச் சுமைகொண் டெழுநான்குகோடி யழிநரகப்
பங்கத்தில் வீழவன் றேபொன்று வார்தமைப் பாடுவதே."
இப்பாடல் கருவைக் கலித்துறையந்தாதியிலுள்ளது.

இதை கேட்ட அதிவீரராமன் குற்றம் உணர்ந்து வந்த காரியத்தை அவனிடம் சொல்லி மன்னிப்புக் கேட்டான். வரதுங்கன் இனி நீ சிவபெருமானைப் பற்றியே பாடவேண்டும் என்றான். அதனால் காசிகாண்டம், வெற்றி வேற்கை, கூர்ம புராணம் முதலியவற்றை பாடினன்.

சிறப்புப்பாயிரம், காசி காண்டம்.

திருக்கிளர் வெண்பிறைக் கொழுந்துஞ் செஞ்சடையு
மறிமானும் திண்டோ ளெட்டும்

உருக்கிளர் வெண்புலியதனும் காந்து மானிட
வடிவின் உலகிற் போந்து
மருக்கிடனு மெனைப்பிடித்த வல்வினையின்
தொடர்னைத்து மாயநூறி
அருட்கடைக் கண்ணளித் தாண்டசுவாமி
தேவன் திருத்தாள் அகத்து வைப்பாம்.

## தமிழ் நாடு அந்நியர் வசமானது.
## தமிழ் நாட்டின் தாழ்வு

பிற்காலத்து பாண்டியரும் சோழரும் பலவித தங்கள் தவறுதல்களாலும் உள்சண்டைகளாலும் தாழ்வடைந்தார்கள். இழிவுஸ்திதியில் இருந்தார்கள். கி. பி. 16 நூற்றுண்டில் மதுரையில் சந்திரசேகரன் என்ற அரசன் இருந்தான். உத்தேசம் 1557ம் வருஷம் தஞ்சையில் அரசாண்ட வீரசேகர சோழன் மதுரையின் மேல் படை எடுத்து வந்து வெற்றி பெற்று பாண்டிய நாட்டை தன்வசப்படுத்தினன்.

சந்திரசேகர பாண்டியன் தன் மகனுடன் விஜயநகரம் சென்று ஏகாதிபத்திய சக்ரவர்த்தியாகிய விஜய நகர் அரசனிடம் அடைக்கலம் புகுந்தான்.

விஜய நகர்.

இது ஒரு பெரிய இந்து ஏகாதிபத்தியம். இந்து தர்மத்தை பாதுகாக்கவும் மகமதியருடைய அதிகாரத்தை எதிர்க்கவும் ஸ்தாபிக்கப்பட்டது. வாரங்கல் என்ற தெலுங்கு ராஜ்ய வம்சத்தார் மகமதியரால் தோல்வியடைந்த பின் தப்பி ஓடி இதை ஸ்தாபித்தார்கள் என்று சில சரித்திரக்

காரர்கள் சொல்லுகிறார்கள். சங்கம்மா என்பவரின் மக்களாகிய ஐவர் இதை ஸ்தாபித்ததாக சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் ஏனைய சரித்திரக் காரர்கள் ஹோய்சால அரசர்கள் இதை ஸ்தாபித்தார்கள் என்று சொல்லுகிறார்கள்.

இவர்கள் ராஜதானி துவாரசமுத்திரம். இந்த ராஜ்யம் 15ம் நூற்றாண்டிலிருந்து 16ம் நூற்றாண்டுமட்டும் மிகவும் தழைத்தோங்கியது. விஜயநகரின் அரசாட்சி தெற்கேயுள்ள தமிழ் நாடு மட்டும் பரவியது. 15ம் நூற்றாண்டில் வேலூர் விஜயநகர ராஜீயத்துக்குள் இருந்தது.

100 வருஷம் மகிமையாக துலங்கிய ஏகாதிபத்தியம் 16ம் நூற்றாண்டின் நடுவில் மகமதியரால் அழிக்கப்பட்டது. தற்காலத்தில் விஜயநகர் அல்லது ஹம்பி அழிந்து கிடப்பதை எவரும் பார்க்கலாம். அங்கு ஏழு கோட்டைகள் ஒன்றுக்குள் ஒன்று இருக்கின்றன. பலவித அரசர் மாளிகைகள், ராணிகளின் தனி இருப்பிடங்கள், பல சிற்ப மகிமையுள்ள ஆலயங்கள், துங்கபத்திர நதியிலிருந்து நீர் கொண்டுவா கல் குழாய்கள், நீராட சிறிய குளம், தொட்டி, கல்சக்கர தேர், இப்படி விஜயநகரின் மேன்மையை வெளிபடுத்தும் பலஞாபக சின்னங்களை பார்க்கலாம். மார்க்க போலோ என்று இந்தியாவுக்கு வந்த இத்தாலிய பிரயாணி இதைப்பற்றி மிகவும் நேர்த்தியாக எழுதி இருக்கிறான். இது நிற்க

முன் சந்திரசேகரனைப்பற்றி கூறினோம். சந்திரசேகரனுக்கு உதவிசெய்ய நாகம நாய்க்கன் என்னும் சேனைத் தலைவனை சேனையோடு விஜயநகர மன்னன் மதுரைக்கு அனுப்பினான்.

சோழனை நாகம நாய்க்கன் வென்று ராஜியத்தை சந்திர சேகரனுக்கு கொடுக்காமல் தானே சிங்காதனம் வகித்து கொண்டான்.

இதை குறித்து கேள்விப்பட்ட சக்கரவர்த்தி மிகவும் கோபங்கொண்டான். நாகம நாயகனின் தலையை வெட்டி வருவான் எவன் என்பதை தன்சபையில் கலந்து யோசித்தான். அச்சமயம் நாகமனின் மகன் விஸ்வநாதன் தான் வெட்டி வருகிறேன் என்றான். அரசன் முதலில் நம்பாவிட்டாலும் பிறகு நம்பி அவனை அனுப்பினான். இவன் மதுரை போய் தன்தகப்பனை விலங்கிட்டு அரசனிடம் கொண்டுவந்தான். பிறகு அவன் சக்ரவர்த்தியை மன்றாடிக் கேட்டுத்தன் தகப்பனின் உயிரைத்தப்பித்துவிட்டான். ஆனால் இதன்பின் நாயக வம்சத்தாசர்களே பாண்டிய நாட்டை ஆண்டனர்.

## விஜயநகர் நாய்க்கவம்சம் (1559—1736).

தலைநகர்கள் மதுரை, திருச்சிராபள்ளி. விஜயநகர் சக்கரவர்த்தியின் ராஜபிரதிநிதிகளாக ஆரம்பத்தில் ஆண்ட இந்த நாயக்கர்கள் திருமலை நாயக்கர்காலத்தில் விஜயநகர் செல்வாக்குக் குன்றிப் போயிருந்ததால், சுயாதீனம் பாராட்டி தாங்களே ஆண்டனர். இக்காலத்தில் தமிழ் நாட்டின் வட பாகமும் விஜயநகா அதிகாரத்துள்ளிருந்தது.

தஞ்சாவூரில் 1736—1800 மகாராஷ்டிரர் ஆண்டு வந்தனர். இக்காலத்தில் ஜிஞ்சி தஞ்சாவூர் சிற்றாசர் கையி லிருந்தது.

## நாய்க்க வம்ச தொடர்ச்சி.

இந்த சரித்திர ஆராய்ச்சியின் முக்கிய நோக்கம் 14-ம் நூற்றாண்டு மட்டும் இருந்த பூர்வீகத்தமிழ் ராஜியத்தின் சரித்திரத்தை குறித்துப்படிப்பதே. இதினால் நாயக்க அரசர் களைப்பற்றி விவரமாக இங்கு எழுதவில்லை.

ஆனால் இவர்களில் சரித்திரவிஷயங்களில் சிரேஷ்ட மாயிருந்த சிலரைமட்டும் மிக சுருக்கமாய் குறிப்பிடுகிறேன்.

## விஸ்வநாத நாயக்கன் (1559—1563).

இவன் தான் விஜயநகர சக்கரவர்த்தியின் விருப்பப்படி தன் தகப்பனை கைது செய்தவன். தனக்குதவியாக அரிய நாயக்க முதலியாரை நியமித்துகொண்டார். இவரது சொந்த வூர் காஞ்சிபுரம். இவர் மதுரையிலிருந்த பழைய கோட்டைகளை இடித்து புது அரண்களை கட்டினான்.

வைகைநதியில் ஒருபெரிய அணைக்கட்டு கட்டி விவசா யத்தை விருத்தி செய்தான். இக்காலத்தில் பஞ்சபாண்டவர் என்று தங்களை அழைத்த ஐந்துபேர்கள் விஸ்வநாத மன்னனை எதிர்த்தார்கள். தென்னாட்டில் இவர்களுக்கு சிறப்பிருந்தது. விஸ்வநாதன் சேனையுடன் சென்றான். பாண்டவர் சேனையை நேரே எதிர்க்காமல் மறைந்தும் திடீர் என்றும் தோன்றி எதிர்த்தனர். விஸ்வநாதன் அவர்களை தனித்தனியே தன் னிடம் சண்டை செய்யசொன்னான். விஸ்வநாதனே வெற்றி கொண்டான். விஸ்வநாதனின் தளவாயாகிய அரியநாயக முதலியார் 72 பாளையப்பட்டுகளாகப் பிரித்தான். பாளையப்

பட்டு என்றால் ஒரு சேனை தலைவனுக்கு கொடுக்கப்பட்ட பாகம். அவர்கள் மன்னனுக்கு கப்பம் கட்டவேண்டும்.

மதுரையின் மீனாட்சியம்மனின் ஆயிரங்கால் மண்டபத்தை கட்டினவர் இவரே. இம்மண்டபத்தின் முதல் தூணில் அரியநாயகரின் கற்சிலை இருக்கிறது.

அரியநாயக முதலியார் விசுவநாத நாயக்கருக்குப் பிரியமான மந்திரி அரியநாயக முதலியார் என்பவர். இவர் அநேக நன்மைகளை பாண்டிய நாட்டிற்கு செய்திருக்கிறார். இவர் காஞ்சிபுரத்தில் எளிய குடும்பத்தில் பிறந்தவர். இளமையிலேயே நன்றாய்ப் படித்தவர். போர் செய்யும் பழக்கமும் இவருக்குண்டு. மஹா புத்திசாலி. விஜயநகரத்து அரசனிடம் தக்கவேலையில் இருந்தவர். தளவாய் என்ற பட்டப் பெயரும் இவருக்குண்டு. தெற்கே வரும்போது தம் பந்துக்களான அநேகம் முதலியார்களை அழைத்துவந்து இந்த ஜில்லாவிலும், வேறு ஜில்லாக்களிலும் பெரிய குடித்தனக்காரராய் இருக்கும்படி செய்திருக்கிறார். அம்பாசமுத்திரம் தாலுக்கா அரியநாயகபுரத்தில் தாம்பிரபர்ணி ஆற்றின் அணையை இவரே கட்டி அதற்குத் தன் பெயரை இட்டாராம்.

## திருமலை நாயக்க மன்னன் கி. பி. 1623—1659.

மதுரையை ஆண்ட நாய்க்கர்களில் திருமலை நாய்க்கன் பத்தாவது பட்டத்தரசன். இவனுடைய உருவமைந்த கற்சிலைகள் மதுரைப் புதுமண்டபத்துத் தூண் ஒன்றிலும், மீனாட்சியம்மன் கோயிலிலும், திருப்பரங்குன்றம், ஸ்ரீவில்லிப்

புத்தூர், அழகர் கோயில்களிலும் இருக்கின்றன. இந்தச் சிலைகளைக் கொண்டு திருமலை நாயக்க மன்னன் உயரமாயும், பருத்தும், சிறிய தொந்தி வைத்தும் உள்ள தோற்றமுள்ள வனாய் இருந்திருக்கலாம் என உத்தேசிக்கலாம்.

தமது முன்னோர் சிலரைப்போல் திருச்சிராப்பள்ளியை முதல் தலைநகராகக்கொண்டு, திருமலை நாயக்கன் சில ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். பின் காலத்தில் மதுரையையே தலைநகராகக்கொண்டு அங்கேயே இருந்தரசு புரிந்தான்.

மதுரையில் நமது நாயக்கனின் சிறந்த கட்டடங்களைப் பற்றி கவனிப்போம்.

திருமலை நாயக்கர் மஹால் :— திருமலை நாயக்கர் கட்டடங்கள் யாவினும் சிறந்தது மஹாலே. அது மதுரையின் தென்கிழக்குப் பாகத்தில் உள்ளது. நாயக்கர்களின் காலத்தில் மதுரைமாநகர் கிழக்கு நோக்கி பரவி வந்தது என்பதற்கு மஹால், மாரியம்மன் — தெப்பக் குளம், இங்கு இருப்பதே சாட்சியாகும். அதன் பிரமாண்டமான தூண்களும், மிக பிருதுவாயும், உயரமாயும், கனமாயுமிருக்கும். சுவர்களும் மேல் மாடத்தின் வில்வளைவுகளும், மிகவும் உறுதியும், மாண்பும் வாய்ந்தவை.

அரங்க விலாசம் சந்திரமேடை, சிறைச்சாலை, ஆயுத சாலை, புனலாடு பொய்கை முதலியன அதன் சில பாகங்களாம்.

மஹாலின் கட்டடங்கள் உத்திரங்கள் மரக்கட்டை கள் ஏதுமின்றி சுண்ணாம்பாலும் செங்கல்லாலும் அமைக்கப்

பட்டு இருக்கின்றன. கூரையின் அடியில் அழகிய சித்திர வேலைகள் கண்களைக்கவரும்.

புதுமண்டபம்:- இது மதுரை நகரின் மத்தியிலும் மீனாட்சியம்மன் கோயிலுக்குக் கிழக்கிலும் இருக்கிறது. திருமலை நாயக்கர் காலத்தில் புதிதாய்க் கட்டப்பட்டதால் புதுமண்டபம் என்றும், வசந்த உத்சவம் நடப்பதால் வசந்த மண்டபம் என்றும் இதற்குப்பெயர்கள் உண்டு. இது நீண்ட சதுரவடிவமானது. இதன் நீளம் 315 அடி. அகலம் 99 அடி. மண்டபத்தைச்சுற்றி, அதன் நாலு பக்கங்களிலும் தண்ணீர் தங்கும்படி கல்லால் அகழ் போல் கட்டப்பட்டிருக்கிறது. கிழக்கு மேற்காய் இதில் நான்கு வரிசைத் தூண்கள் சிலவற்றில், விசுவநாத நாயக்கர் முதல் திருமலை நாயக்கர் வரை மதுரையை ஆண்ட நாயக்கர்களின் உருவச்சிலைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ராயர் கோபுரமென்பது புதுமண்டபத்துக்குக் கிழக்கிலுள்ள வேலை முடிவு பெறாத ஒரு கோபுரம். விஜயநகர சக்கரவர்த்தியின் ஞாபகார்த்தமாக நாயக்கரால் இது கட்டப்பட்டதால் இதற்கு இப்பெயர் வந்தது. இது கல்லாலே இயற்றப்பட்டது.

மீனாட்சியம்மன் கோயிலுக்குக் கிழக்கே ஏறக்குறைய இரண்டுமைலில் தூரத்தில் பெரிய தெப்பக்குளம் இருக்கிறது. மாரியம்மன் கோயிலுக்குப் பக்கத்திலிருப்பதால் மாரியம்மன் தெப்பக் குளமென்றும், வண்டியூருக்குச் சமீபமாயிருப்பதால் வண்டியூர்த்தெப்பக்குளமென்றும் இதற்கு பெயர்கள் உண்டு. இதுவே தென்னிந்தியாவிலுள்ள பல குளங்களிலும் மிகப்

பெரியது. இது தொளாயிரத்தைம்பது அடி நீளமும், அதே அகலமுமுள்ள சதுரவடிவமுள்ளது. திருமலை நாயக்கர் மஹால் கட்டும்போது அதற்கு வேண்டிய செங்கல்லுக்காக ஒரு பள்ளம் தோண்டப்பட்டதென்றும், அப்பெரும் பள்ளமாவது பிறகு தெப்பக்குளமாய் அமைக்கப்பட்டதென்றும் சொல்வாருண்டு. இக்குளத்தைச் சுற்றிலும் கைபிடிச்சுவர்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அந்தச்சுவர்களைச் சுற்றி உட்பக்கத்தில் இருவர் ஒருவர் பக்கமொருவராக சேர்ந்து நடந்து போகக்கூடிய விசாலமுள்ள பாதையொன்றும், கருங்கல்லால் குளத்தின் நான்கு பக்கங்களிலும் படித்துறைகளும் அவசியமானபடி உண்டாக்கப்பட்டிருக்கின்றன. குளத்தின் நடுவில் தீவு போன்ற ஒரு மேடை பூமியிருக்கிறது. அதன் மத்தியில் ஒரு கோயிலும் அதில் ஒரு கோபுரமும், மேடையின் மூலைகளில் நான்கு சிறு கோபுரங்களும் இருக்கின்றன.

தமுக்கம் என்பது வைகை நதியின் வடக்கரையில் இருக்கும் ஒரு கட்டடம். தெலுங்கு பாஷையில் தமுக்கம் என்பதற்குக்கோடைகால வாசஸ்தலம் என்று அர்த்தமாகும்.

திருமலை நாயக்க மன்னன் முதலில் விஜயநகர ஆட்சிக்குக் கீழ்ப்பட்டே அரசுபுரிந்தவன். தமது சக்கரவர்த்திக்கு வேண்டிய பணிவிடை செய்ய வேண்டிய இவன் அவனுக்கு அடங்காமல் மீறிநடந்ததுமின்றி அவனுக்கு விரோதமாய் மகம்மதியரைத் தூண்டிவிட்டு அனுப்பி அவனை எதிர்த்தது தகாத செய்கையே. இதனாலேயே தான்செய்த துரோகத்

திற்கு ஏற்றபடி இவனே மகமதியருக்குக் கீழ்படவும் வெகு காலமாயிருந்த ஹிந்து ராஜ்யம் மகமதியர் கையின் கீழாகவும் ஆபத்து நேரிட்டு விட்டது.

## மங்கம்மாள் கி. பி. 1689—1704.

மஹாராணியாகிய மங்கம்மாள் பலவிதங்களில் சிறந்தவள். இவளுடைய பெயர் தமிழ் நாட்டில் மிகப்பிரசித்தம். கீர்த்திப்பெற்ற திருமலை நாயக்கனின் பேரனாகிய சொக்கநாத நாயக்கனின் மனைவி. இவள் தனது பேரனுக்குத்தக்க பருவம் வரும்வரை இந்த நாட்டைக் குறைவில்லாது ஆட்சிசெய்த நல்ல உத்தமியார். இந்த அம்மையாரின் உருவச்சிலை மதுரை மீனாட்சியம்மன் கோயிலில், பொற்றாமரைக்குளத்தின் மேற்குப்பக்கத்திலும், ஊஞ்சல் மண்டபத்திற்குக் கிழக்குப்பக்கத்திலும் உள்ள கல் மண்ட பத்தில் வெட்டப்பட்டிருக்கிறது. இப்போது மதுரை புகைவண்டி நிலயத்தின் எதிரிலுள்ள மங்கம்மாள் சத்திரமும், மதுரை மத்திய மார்க்கெட்டும், இந்த அரசியின் ஞாபகார்த்தமாகச் சிறிதுகாலத்திற்குமுன் கட்டப்பட்டவை. இப்போது அக்திக்கடைப் பொப்பொட்டலுக்கு வடக்கிலிருக்கும் பல சத்திரங்களும், சாவடிகளும் கட்டுவித்தாள். இன்னும் மதுரையிலிருந்து நான்கு திசைகளிலும் பிரிந்துபோகும் பெரும் பாதைகளை ஏற்படுத்தி, அவற்றில் மரங்களை வைத்துப் பல சோலைகளை உண்டாக்கினாள். சோலைகளில் தக்க இடங்களில் தண்ணீர் பந்தல்கள் ஏற்படுத்தினாள். பல குளங்களையும், கிணறுகளையும் வெட்டுவித்தாள். மற்றும் சில கிராமங்களையும், கோயில்களையும் கட்டுவித்தாள். இன்றும்

சாலே வழியே போகிறவர்கள் மஹாராணி மங்கம்மாள் போட்ட சாலே என்று சொல்லி அப்புண்ணியவதியாரை வாழ்த்திப் புகழுவதுண்டு.

1700-ம் வருஷம் தஞ்சை மஹாராஷ்டிா மன்னருக்கும் நாயக்க வம்சத்தாருக்கும் சண்டை உண்டாயிற்று. அப்பொழுதும் முற்கூறிய தளவாயே சேனேயோடு சண்டைக்கு அனுப்பப்பட்டார். இரண்டு சேனேகளும் காவிரியின் தென் கரையில் இருந்துகொண்டு சண்டையை ஆரம்பிக்கத்தயாராயிருந்தன. எதிரிகளின் பலம் அதிகமாய் இருக்குமென்று தளவாய்க்குத் தெரிந்தது. உடனே அவர் ஒரு நல்ல யுக்தி செய்தார். அதாவது, தாம் சேனேயோடு காவிரியைக் கடந்து சென்று தஞ்சாவூரைப் பிடிப்பதாகப் பிரஸ்தாபப் படுத்தினர். உடனே விரோதிகள் தங்கள் தலைநகாாகிய தஞ்சாவூரை காப்பதற்காக ஆற்றைக் கடந்தார்கள். அப்போது நதியில் வெள்ளம் அதிகமாயிருந்தது. தளவாய் இதுவே தக்க சமயம் என்று எண்ணி கரையிலிருந்தபடியே தஞ்சை சேனே முழுவதையும் தாக்கி வெற்றியடைந்தார். பிறகு தளவாய் தஞ்சாவூர் ராஜ்ஜியத்தின் ஒவ்வொரு பாகத்தையும் தாக்க ஆரம்பித்தார்.

## விஜயரேங்க சோக்கநாத நாயக்கர் கி. பி. 1704—1731.

இராணி மங்கம்மாளுக்குப் பின் விஜயரெங்க நாயக்கன் என்பவர் ஆண்டுவந்தான். இவர் அநேக புண்ணியஸ்தலங்களுக்குச் சென்று கோயில்களேத் தரிசித்து அங்குமிங்கும் சுற்றித் திரிந்து கொண்டிருந்தானேயல்லாமல், ஆளுகையில்

அவ்வளவாகக் கவனத்தைச் செலுத்தவில்லை. குற்றாலம், சிவசைலம், திருப்புடைமருதூர் முதலான கோயில்களிலும் கட்டளைகளை ஏற்படுத்தியிருக்கிறான். இவனுக்குப் பிள்ளைகள் இல்லை. அதனால் இவன் காலஞ்சென்றதின் பின்பு, இவன் மனைவி மீனாக்ஷி என்பவள் பட்டம் பெற்றாள். அவள் திருச்சிராப்பள்ளியிலிருந்தே ஆண்டு வந்தாள். சில காலம் செல்ல இவள் ஒரு பிள்ளையை தத்துப்புத்திரனாகக்கொண்டாள். அப்பிள்ளை பெயர் பங்காரு திருமலை. இவ்விருவரும் சிலகாலம் ஒற்றுமையாயிருந்தனர். பிறகு இவ்விருவருக்கும் பொருந்தவில்லை. கலகம் செய்ய ஆரம்பித்தனர். இதையடக்க ஆற்காட்டு நவாபு, சண்டா சாகிபு, முகம்மது அலி என்ற இரண்டு படைத்தலைவர்களைப் படைகளுடனே தெற்கே அனுப்பினான். சண்டா சாகிபு திருச்சிராப்பள்ளிக்கு வந்து இராணி மீனாக்ஷியாரைச் சிறைபடுத்தினான். அவள் விஷமுண்டு இறந்தாள். பங்காருவைத் திருநெல்வேலிக்கு ஈசனுக்கினான். சில நாளில் அவனையும் மகமதிய தலைவன் கொன்றுவிட்டான்.

அப்பால் முகம்மத் அலியும், சண்டா சாகிபும் இந்த நாடு முழுவதையும் ஜெயித்தார்கள். யார் பட்டம் பெறுவது என்று இவ்விருவருக்குள் தாவாவாச் சண்டை மூண்டது. இச்சண்டையில் அப்பொழுது அங்கு வந்து வியாபாரம் செய்துகொண்டிருந்த பிரெஞ்சுக்காரர் சண்டா சாகிபுக்கும், இங்கிலிஷ்காரர் முகம்மத் அலிக்கும் உதவி செய்ய முன் வந்தனர். இறுதியில் 1801-ம் ஆண்டு தமிழ் நாடு முழுவதும் ஆங்கிலர் வசமாயிற்று.

## போர்த்துகீசியரும், டச்சுக்காரரும்.

முதலாவது ஐரோப்பாவிலுள்ள போர்த்துக்கல் சேர்ந்தவரான போர்த்துக்கீசியர்கள் பாண்டிய நாட்டு தூத்துக்குடியில் வந்து வியாபாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

இதனால் சில காலத்திற்குள் தூத்துக்குடி அவர்க்குச் சொந்தமாகிவிட்டது. அப்பால் அவர் அங்கோர் துறைமுகத்தை ஏற்படுத்தினர். கப்பல்களும், தோணிகளும், வந்து போவதற்கு வேண்டிய சௌகரியங்களும் செய்தனர். ஏற்றுமதி, இறக்குமதிகளும் விசேஷமாய் நடந்தன. இப்படி இருக்கையில் டச்சுக்காரர்கள் சேனையுடன் இங்கே வந்து போர்த்துகீசியரை அப்பாற்படுத்திவிட்டுத் தாங்களே ஆளத் தொடங்கினர். வரவாச் சேனைகளையும் பெருக்கிக்கொண்டனர். அக்கம் பக்கத்திலுள்ள ஊர்களையும் கைவசப்படுத்திக் கொள்ளத் தொடங்கினர்.

இவையல்லாமல் இவர்கள் சமுத்திரத்தில் முத்து எடுத்தார்கள். தம்முடைய நாட்டிலிருந்து ஜவுளி முதலிய சாக்குகள் வியாபாரம் செய்தார்கள். படைகளையும், ஆயுதங்களையும் தருவித்துக் கொண்டார்கள்.

இப்படி இவர் பலப்பட்டு விட்டதை ஆங்கிலக் கம்பெனியார் தெரிந்து, டச்சுக்காரரை அவ்விடம் விட்டு ஓட்டிவிட ஓர் வீர சேனைத் தலைவனைத் தெரிந்து கொண்டனர். அவன் சேனைத் தலைவரான முகம்மது யூசுப் என்பவன்.

முகம்மது யூசுப்பும் படையுடன் ஆழ்வார் திருநகரில் வந்து டச்சுப் படையை எதிர்த்தான். போர் சில நாள் நடந்தது. ஆங்கிலக் கம்பெனியே வெற்றியடைந்தது. என்றாலும் கம்பெனியார் டச்சுக்காரருக்கே திரும்பவும் தூத்துக்குடியைக் கொடுத்துவிட்டனர். ஆனால் சில காலத்திற்குப்பின் தூத்துக்குடியும் பக்கத்து ஊர்களும் ஆங்கில கம்பெனியார் வசம் திரும்பவும் வந்துவிட்டன.

தமிழ் நாடு எவ்விதமாக அன்னியர் வசமாயிற்று என்பதை மறுபடியும் சுருக்கமாய் இறுதியில் கூறி இந்த நூலை முடிக்கிறேன்.

கி. பி. 1559–ம் வருஷம்போல், மதுரையில் ஆண்ட சந்திரசேகர பாண்டியனுக்கும் சோழ இராஜனுக்கும் போர் நடந்து, பாண்டியன் தோல்வியடைந்தான். பாண்டியன் வடக்கே தெலுங்கு நாட்டில் சக்ரவர்த்தியாய் ஆண்ட விஜய நகர் அரசனைச் சோழனுக்கு விரோதமாக உதவி செய்யும்படி கேட்டான். விஜயநகர் சக்ரவர்த்தி சேனாதிபதியாகிய நாகம நாய்க்கனை பட்டாளத்தோடு அனுப்பி, சோழ இராஜனை வென்றான். ஆனால் நாகம நாய்க்கன் பாண்டியனுக்கு இராஜ்யத்தைக் கொடுக்காமல் தானே அரசனாக சிங்காசனமேறினான். எப்படித் தமிழரசர் பிரிவினையினால் பாண்டிய நாடு தெலுங்கு நாய்க்கர் வம்சத்திற்காதீனமானதோ, அப்படியே இதற்குச் சில நூற்றாண்டுகளுக்குப்பின் இந்த நாய்க்க வம்சத்தினுண்டான பிரிவினையினால் பாண்டிய நாடு மகம்மதியர் ஆதீனத்திற்குள்ளாயிற்று! நாய்க்க வம்சத்தைச் சேர்ந்த கடைசி

மன்னன் விஜயரங்க சொக்கநாத நாய்க்கன். இவர் காலத்தில் தான் தமிழ் காவியத்தில் கீர்த்தி பெற்று விளங்கும் சிவ பக்தனாகிய தாயுமானவர் பிறந்தது. விஜயரங்க சொக்கநாத நாய்க்கன் சந்தானமில்லாமல் மரித்துவிட்டான். அவன் மனைவி மீனாக்ஷி இராணியாகப் பட்டத்திற்கு வந்து திருச்சினாப் பள்ளியிலிருந்து பாண்டிய நாட்டை ஆண்டு வந்தாள். தாயுமானவர் அரண்மனையில் ராணியின் சம்பிரதியாக வேலை செய்து வந்தார். பார்வைக்கு சௌந்திரியமான வாலிபர். இராணி மீனாக்ஷி இவர்மேல் காதல்கொண்டு அவரை மணம் புரிய தனக்கிருந்த உட்கருத்தை அவருக்கு வெளிப்படுத்தினாள். பக்தனாகிய தாயுமானவரோ உடனே வேலையை விட்டு இராமநாதபுரத்திற்கு ஓடிப்போய் ஒளித்துக்கொண்டார்.

இராணி மீனாக்ஷி, பங்காரு திருமலை யென்ற ஓர் தத்துப்புத்திரனைத் தெரிந்துகொண்டாள். சிறிதுகாலம் மீனாக்ஷியும் பங்காரு திருமலையும் ஐக்கியமாய் அரசியல் செய்து வந்தார்கள். பின்னாலே இருவருக்கும் சண்டை வந்து விட்டது. ஆற்காடு மகம்மதிய நவாபின் படைத் தலைவர்களாகிய சந்தா சாகிபும் மகம்மது ஆலியும் படையெடுத்து வந்து, மீனாக்ஷியைச் சிறைப்படுத்தினார்கள். அவள் நஞ்சுண்டு இறந்துபோனாள். பங்காரு திருமலையை பாண்டிய நாட்டு அரசனாக்கினார்கள். பின்னே அவனையும் கொன்று போட்டு தாங்களே அரசியல் செய்தார்கள். எப்படி நாய்க்கர் பிரிவினையினால் மகம்மதியர் தமிழ் நாட்டை வென்றார்களோ, அப்படியே மகம்மதியருக்குள் வந்த பிரிவினையினால் தமிழ் நாடு ஆங்கிலேயர் ஆதீனமாயிற்று!

மேற்கூறிய சந்தா சாகிபுக்கும் மகம்மது ஆலிக்கும் விவாதமுண்டாகி, சண்டை தொடங்கியது. சந்தா சாகிபு மகம்மது ஆலி இருந்த திருச்சிராப்பள்ளியை முற்றுகை போட்டான். ஆங்கிலேய சேனைத் தலைவனாகிய கிளைவ் படைகளோடு போய், ஆர்க்காட்டை முற்றுகை போட்டு, சந்தா சாகிபை ஜெயித்தான். இதையெல்லாம் நான் கூறுவதற்குக் காரணம், நமது பிரிவினைகளில் அந்நியர் உதவியை நாடுகிறதினால், எப்படி நாம் அந்நியருக்கு ஆளாகி சுதந்திரமிழந்து விடுகிறோம் என்பதைத் தெளிவாய் ரூபிப்பதற்கே.

இச்சம்பந்தமாக, பாஞ்சாலக்குறிச்சி, செவ்வல் என்ற திருநெல்வேலி ஜில்லாவிலிருந்த சில சிற்றரசுகளின் விஷயங்களைக்குறித்தும் கொஞ்சம்பேச விரும்புகிறேன். மனோதைரியத்தோடும், கையாடின நோக்கத்தை ஒருபோதும் அதைரியப்பட்டு நெகிழவிடாமல் ஊக்கத்தோடும், உயிரையும் பாராமல் வீரியங் காட்டின சிற்றரசர்கள் பாஞ்சால நாட்டுக்கட்டபொம்மு நாய்க்கனும், செவ்வல் பூலித்தேவரும். பாஞ்சாலக்குறிச்சி ஒட்டபிடாரத்திற்கு வடக்கே இரண்டு மைல் தூரத்திற்குள்ளிருந்தது. ஈஸ்ட் இந்தியா கம்பெனி அதிகாரிகள் தரையோடே அதைத் தகர்த்து, அழித்து விட்டார்கள். சில வருஷங்களுக்கு முன்னே நான் அதைப்பார்க்கப் போனேன். பாளையப்பட்டிற்குப் பிரதான ஊராகிய பாஞ்சாலக் குறிச்சியில் 30 வீடுகள் போல் தான் இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. தரைமட்டும் இடித்துப் போடப்பட்ட வீடுகளின் அஸ்திபாரம் மட்டும் இப்பொழுதும்

பார்க்கலாம். பாஞ்சாலக் குறிச்சியாரின் குல தெய்வமாகிய சக்க தேவியாரின் கோயில் அஸ்திபாரம், ஓர் விக்கிரகம், யானைக் கட்டுக்கல், அழிந்த சில சிறு தெப்பக்குளங்கள் முதலியனவை இன்றும் அங்கு பார்க்கலாம். சுற்றியிருந்த மண்கோட்டை மதில்களெல்லாம் ஈஸ்ட் இந்தியா கம்பெனிக் காரர் அடியோடேயழித்து ஊரையும் உழுது போட்டு விட்டார்கள். ஏறக்குறைய 50 வருஷங்களாய் இந்த சிற்றாசு மிகுந்த யுத்தாயுதங்களின் பாாக்கிரமங்களை எல்லாம் அணிந்த ஆங்கில துரைத்தனத்தை எதிர்த்து, தைரியமாய்ப் போர் செய்ய வந்தது. கட்ட பொம்மு நாய்க்கன், பூலித்தேவர் முதலியருக்குப் பாண்டிய இராஜ்யத்தின் காலத்தில் பாளையக் காரரென்றுபெயர். பாண்டிய அரசனின் கீழ் இந்தப் பாளையக்காரர் அவனுக்குக் கப்பங் கட்டுகிற சிற்றாசாக அடங்கி இருந்தார்கள். சரியானபடி பார்த்தால் இப்பாளையக்காரர் பாண்டிய மன்னனின் சேனாதிபதிகள். இவர்கள் தற்காலத்து மிட்டாதார்கள், ஜமீன்தார்கள் மாதிரி தங்கள் வசத்தில் ஒப்புவிக்கப்பட்ட கிராமங்களிலிருந்து வரி வாங்கி, குறிக்கப் பட்டத் தொகையை ஒப்பந்தப்படி பாண்டிய அரசனுக்குக் கப்பமாகச் செலுத்துவார்கள். ஏதாவது யுத்தம் நேரிட்டால் பாண்டிய அரசனின் கட்டளைப்படி இவர்கள் தங்கள் தங்கள் கீழேயிருந்த பட்டாளங்களைச் சேர்த்துக் கொண்டு அரசனின் உத்திரவின்படி போர் புரிவார்கள். இதனால்தான் இவர்களுக்குப் பாளையக்காரரென்று பெயர். செவ்வல், பாஞ்சாலக் குறிச்சி, எட்டியாபுரம் முதலிய பாளையப்பட்டுகளிருந்தன. இவர்கள் பாண்டிய மன்னர் காலத்திற்குப் பின் வந்த அந்நிய

இராஜாங்கத்திற்குக் கப்பங்கட்ட இவர்கள் எப்போதும் மறுத்தே வந்தார்கள். மகம்மதியரும், ஆங்கிலரும் நான் முன் கூறியபடி ஒரு கட்சியானபின், பாண்டிய மன்னனுக்கு முன் கப்பங்கட்டிக் கொண்டிருந்த பாளையக்காரர் ஆங்கிலக் கம்பெனியாகிய ஈஸ்ட் இந்திய கம்பெனிக்கு கப்பங்கட்ட வேண்டுமென்று இவர்களை ஆங்கிலர் பலவந்தஞ் செய்தார்கள். செவ்வல், பாஞ்சாலக்குறிச்சி பாளையக்காரரோ இதற்குச் சம்மதிக்கவில்லை. இதனால் ஆங்கிலரும், மகம்மதியரும் சேர்ந்துகொண்டு இவர்களைத் தங்கள் பட்டாளங்களினுல் அடக்க முயன்றார்கள். பாஞ்சாலக் குறிச்சிச் சிற்றரசன் கட்ட பொம்மு நாய்க்கன். இவர் சேனதிபதி ஊமை. அதனால் அவனுக்கு ஊமைத்துரை என்று பெயர். கட்ட பொம்மு நாய்க்கனுக்கு மிக உதவியாகவிருந்த மந்திரி சிவ சுப்பிரமணியபிள்ளை. ஆங்கில பட்டாளத்தை எதிர்க்கு முன் ஊமைத்துரை ஒரு வைக்கோலை உள்ளங்கையில் வைத்துக் கொண்டு, ஒரு விதமாகக் குரலை உயர்த்தி சப்தமிட்டு, கையி லுள்ள வைக்கோலை ஊதிவிடுவாராம். அதன் அர்த்தமென்ன வென்றால், தங்களை எதிர்க்கிற வெள்ளைப் பட்டாளங்கள் அப்படியே தோல்வியடைந்து ஓடிவிடுவார்களென்று தம் பாஞ்சாலக் குறிச்சிப் பாளையப்பட்டு வீரர்களுக்குக் காட்டு வதாம்! பகலெல்லாம் யுத்தம் நடக்கும். சாயந்திரத்தில் பாஞ் சாலக்குறிச்சி பெண்கள் தங்கள் இனத்தார் யுத்தகளத்தில் காயப்பட்டு விழுந்து கிடப்பவர்களுக்கு உதவி செய்யப் போவார்கள். ஒரு நாள் மாலை யுத்தகளத்தில் காயப்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்த ஓர் வாலிபனை அவன் தாய் பார்த்து

உதவி செய்யக்கிட்டினுள். மிகுந்த கஷ்டமும் வேதனையும் அடைந்து குற்றுயிருய்க் கிடந்த அந்த வாலிபனே, தாயை நோக்கி, "அம்மா, எனக்குச் சாக பயமில்லே. அதோ பார். துரை அங்கே கிடக்கிறார்கள். அவர்கள் கிட்ட போய் ஏதாவது உதவி செய்யுங்கள்," என்று தன் துயரத்தைப் பாராமல் தன் தலைவனுகிய ஊமைத்துரையின் தேவையையே அதிகமாகப்பாராட்டி, அன்பும், தலைவர் விசுவாசமுங் காட்டினனும். அப்படியே தாயும் மற்ற ஸ்திரீகளும் ஊமத்துரை விழுந்து கிடந்த இடம் சென்று அவருக்கு வேண்டிய பரிகாரஞ்செய்ய ஆரம்பித்தார்கள். இதற்குள்ளே ஆங்கிலக் கட்சியைச் சேர்ந்து தங்கள் சொந்த இனத்தாராகிய பாஞ்சாலக் குறிச்சியாருக்கு விரோதமாய்ப் போர் செய்த எட்டியாபுரம் சமஸ்தான சிப்பாய்கள் ஓடிவந்தார்களாம். ஊமைத்துரையை சூழ்ந்திருந்த பாஞ்சாலக்குறிச்சி ஸ்திரீகளோ, அவரை ஓர் துணியினுல் முற்றிலும் மூடிவிட்டு, அவர் மரித்துப் போனது போல ஓலமிட்டு அழத் தொடங்கினர்கள். எட்டியாபுரம் சிப்பாய்கள் கிட்டவும், அவர்களிடத்தில், "எங்கள் மனுஷர் ஒருவர் இறந்து போனர், அதற்காக அழுகிறோம்," என்று சொல்லவும் அந்த சிப்பாய்கள் போய்விட்டார்கள். உடனே அவர்கள் ஊமைத் துரையைத் தங்கள் வீட்டிற்குக் கொண்டு போய் பரிகாரஞ்செய்து சுகப்படுத்தினர்கள்.

மேலும் இந்த சண்டைகளெல்லாம் நடந்தபல வருஷங்களிலும் பல கட்சி பட்டாளங்களும் இங்குமங்கும் கிராமங்களில் ஓடித்திரிந்து செய்த கொடூரத்தால் எங்கு பார்த்தாலும் கொள்ளேப்பறி, கொலே. வயலிலறுத்த தானியம்வீடுசேராதாம்.

காட்டிலே தூரத்தப் பட்டோம்
கடூரமா யடிக்கப் பட்டோம்
கேட்டிருதினவரில்லை
கேள்வி கேட்பாருமில்லை.

என்பதா ஏழை தமிழ் மக்கள் பாடாயிற்று.

முன்னுரையில் நான் கூறியிருக்கிறபடி அந்நியர் காண்டம், சுதந்திர காண்டம் இப்பாகங்களை விவரமாக எழுத இப்பொழுது சமயம் வாய்க்கவில்லை. மேலும் ஆங்கிலேயர் இந்தியாவில் ஆட்சி செய்த விபரங்களை குறித்து எழுதப்பட்டிருக்கும் நூல்களுக்கு கணக்கில்லை! கடந்த ஐம்பது ஆண்டுகளுக்குமேல் இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியார் இந்திய சுதந்திரத்திற்காக போராடி வந்திருக்கிறார்கள். இதில் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக மகாத்மா காந்தி அவர்களின் தலைமையின் கீழ் சத்தியம், அஹிம்சையாகிய அடிப்படைக் கொள்கைகளை கையாண்டு நமது மக்கள் இந்தியா சுதந்திரம் அடைய அடிகளும், சிறைகளும், பொருள் நஷ்டமும் கவலையும் அநுபவித்து அறப்போராடி வந்திருக்கின்றார்கள். மகாத்மா நமக்கு காட்டிய அன்பின் வாயிலாகவே இப்பொழுது நாம் அநுபவிக்கும் சுதந்திரம் கிட்டியது என்று கூறுவது மிகையாகாது. இந்தியா இவ்விஷயத்தில் உலகத்திற்கே ஒரு சிறந்த முன்மாதிரிகாட்டி இருக்கிறது. இந்த அன்பின் சாந்தி வழியையே விடாது கைபிடித்து பலாத்காரத்தை பகைநிறைந்த இவ்வுலகத்தினின்று அகற்றி உண்மையான சமாதான நிலை ஐக்கியம் மனிதருக்கு ஏற்பட நமது நாட்டை இறைவன் ஆசீர்வதித்து உபயோகிப்பாராக.

